

ஸ்ரீ திரிவிக்ரமப் பெருமாள் (மூலவர்)
திருக்கோவலூர்



# முமுக்ஷுப்படி தெளிவுரை

(புதுவை ஸ்ரீ உலகளந்தான் பொன்னடியார் மஹாசபை, வெளியீடு - 3)

**(Social Reformer Sri Ramanuja Society,**
**93, Perumal Koil Street, Pondicherry - 605 001.)**

**First Edition - 1997**
**Copies - 1000**


**Price Rs.50.00**

**Copies can be had from :**

**Enthur Sadagoba Ramanujam,**
Neerodai Veethi,
Mudaliarpet,
Pondicherry - 605 004.

*(சீர்திருத்த ச்செம்மல் ஸ்ரீராமாநுஜர் இயக்கம்*
*NO.93, பெருமாள் கோயில் வீதி*
*புதுச்சேரி - 605 001.)*
*12-7-1997*

---

**Printed at :**

**Vaigai Computer Printing**
139, Petit Canal St.,
Pondicherry - 1.
Phone : 34110, 35174

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமல்லோக குரவே நம:

ஸ்ரீமத் வரவரமுநயே நம:



ஸ்ரீபெரும்பூதூர்,

ஸ்ரீமத் பிள்ளைலோகாசாரியரும்

ஸ்ரீ மந்மணவாள மாமுநிகளும்

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமல் லோககுரவே நம:
ஸ்ரீமத் வர வர முநயே நம:

ஸ்ரீமத் பிள்ளை லோகாசார்யர் அருளிச் செய்த
முமுக்ஷுப்படி ஸூத்ரமும், அதற்கு மணவாள
மாமுநிகள் அருளிச் செய்த திருமந்த்ரார்த்தம்
என்னும் வ்யாக்யாநத்தின் தமிழாக்கமான

# முமுக்ஷுப்படி தெளிவுரை

*(புதுவை ஸ்ரீ உலகளந்தான் பொன்னடியார்
மஹாசபையின் வெளியீடு - 3).*


*உரையாசிரியர் :*

*ஏந்தூர் சடகோப ராமாநுஜதாஸர்*

*உதவி ஆசிரியர் :*
R. *பெருமாள்ராமாநுஜதாஸர்*



This book is published with the Financial Assistance of
Tirumala Tirupati Devasthanams under their scheme
"Aid to Publish Religious Books"

ஸ்ரீ :

ஸ்ரீமதே ராமாநுஜாயநம :



ஸ்ரீமத் உ. வே. திருவேங்கடராமாநுஜாசாரியர்

திருக்கோவலூர் எம்பெருமானார் ஜீயர்

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீ லோகாசார்ய குரவே நம:

16-6-1997

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி
ஸ்ரீவரத எதிராஜ ஜீயர் ஸ்வாமிகள்,
ஸ்ரீ எதிராஜ மடம்,
நெ. 29, சந்நதி வீதி,
ஸ்ரீபெரும்பூதூர் - 602 105.

## மங்களாசாஸனம்

வரந்தரும் மாமணிவண்ணன் கோலோச்சும் ஸ்ரீவி-ஷ்ணுலோக மணிமண்டப மார்க தாயியான சூடிக்கொடுத்த-வள் தொல்லருளால் வாழ்கின்றவள்ளல் எதிராஜனின் இன்னருளால், திவ்ய தேசங்களில் ஒன்றாக இல்லாவிட்டா-லும் திருக்கோவலூர் திரிவிக்ரமனின் அபிமானம் பெற்ற ஸ்தலமாகும் பாண்டிச்சேரி வரதராஜனின் ஸ்தலம். இது பரமபதம் செல்வதற்கு நுழைவாயில் என்று ஸத்யம் சபே என்னுமத்தனை.

இந்த அபிமான ஸ்தலத்திற்கு பெருமையை, தேவ-தேவனுக்கு அணிகலனாக அணிவித்துக் கொண்டிருக்கும் குடத்திலிட்ட விளக்குகள் போன்ற பலகற்றவர், நற்றவர், உற்றவர், நான் மறையாளர்கள், வாக்மீகள் காவ்ய சாஸ்த்ர விநோதேந காலோ கச்சதி தீமதாம் என்றபடி எம்பெருமா-னார் தர்சனத்தின் "அந்த செயலை" அறிவிக்கும் செந்தமிழ் வாரணங்களாக பிரகாசிக்கிறார்கள் என்பதில் அதிசயோக்தி-க்கு நிலமில்லை.

முமுக்ஷுப்படி, திருமந்த்ரம் த்வயம் சரமச்லோகம் என்ற ரஹஸ்யத்ரயங்களில் முக்கடல்களாகும். "நாராய-ணனே நமக்கே பறை தருவான்" என்று கோதை நாச்சியாரின் திருப்பாவை முதல் பாசுரத்திலேயும், மாறனின் திருவாய்-

மொழி 6-10-10-ம் பாசுரமான "அகலகில்லேனிறையென்று" என்ற பாசுரத்திலேயும், குலசேகரனின் "தருதுயரம் தடாயேல் உன் சரணல்லால் சரணில்லை" என்ற பாசுரத்திலேயும் அந்த முக்கடல்களான மூன்று மந்த்ரப் பொருளும் சொல்லப்படுகிறது என்று கொண்டால் ஸிந்தௌ பிந்து: என்னாமது.

இத்தகைய நூலுக்கு "முமுக்ஷுப்படி தெளிவுரை" என்னும் உரைநூல் வெளியிடும் இப்பெரியார், எந்தூர்ஸ்வாமி என்றே ஸ்ரீவைஷ்ணவ உலகில் ஜ்ஞானசீல வயோவ்ருத்தராக ப்ரபலமானவர். சிலவாண்டுகளுக்கு முன் நமது மடத்தில் திருவாய் மொழிக்கு விளக்க உரைநூல் வெளியிட்டு நம்மால், "நம்மாழ்வார்" என்றே அபிமானிக்கப்பட்டவர். இப்பெரியார் இத்தகைய பணிகளை மேன்மேலும் ஓங்கியுலகளிக்க பல்லாண்டு பரிவாரங்களுடன் இந்நிலவுலகை அலங்கரித்துக்கொண்டே விண்ணையும் ஆள மங்களாசாஸனித்து ஆசாஸிக்கிறோம்.

நித்ய ஸ்ரீ:

மங்களாசாஸனங்கள்
ஸ்ரீவரத எதிராஜ ஜீயர்
மடாதிபதி, பரம்பரை தர்மகர்த்தா, SASB
கோயில், ஸ்ரீபெரும்பூதூர்.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம : ஸ்ரீமத் வரவரமுநயே நம:

**அண்ணன் திருவடிகளே சரணம்**

வித்வான், சாஹித்ய ரத்னம், வைஷ்ணவ ரத்னம், வேதநெறி வித்தகர், ப்ரவசன மணி சதுர கவி, பண்டித சிகாமணி, அருளிச்செயல் அருளமுதுச் செல்வர், பஞ்சமாம்னாய ரத்னம், ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய பாஸ்கரர், கலைமலிந்த சீர் நம்பி, விஷ்ணுபரத்வ ஸ்தாபக தீர சிகாமணி, வைஷ்ணவ ஸம்ப்ரதாய ப்ரவர்த்தக ஸம்பந்நர், ஸத்ஸம் ப்ரதாய செங்கட்சீயம், கோயில் தென்னாசார்ய ஸம்ரக்ஷண ஸபா வித்வான்

**R. நரஸிம்மாசாரியர்**
50, மேலஉத்திர வீதி, ஸ்ரீரங்கம், திருச்சி - 620 006.

# மதிப்புரை

25.06.97.

ஸ்ரீமான் ஏந்தூர் சடகோபராமாநுஜ தாசர் பழைய பேரறிஞர். வயது முதிர்ந்தவர். ஞான-அநுபவங்களால் பழுத்தவர். பூர்வாசார்யர்களின் ஸம்ப்ரதாயம் வழுவாமல்-வரியடைவே தெளிவாகவும் எளிமையாகவும் சாஸ்த்ர-ஸம்ப்ர-தாய அர்த்தங்களைச் சொல்லுவதில்வல்லவர். இவருடைய ப்ரவசனங்களைக் கேட்டு இன்புற்றிருக்கிறேன், வியந்திருக்கி-றேன். அடியேனுடைய மதிப்புக்குரியவர்.

இவர் எழுதின "முமுக்ஷுப்படி தெளிவுரை" (தமி-ழாக்கம்) நூலை முழுவதும் கவனமாகவாசித்தேன். மாமு-

னிகளின் விளக்கத்தை கண்ணடிபோல் தெளிவுபடுத்துகிறது. பெரும்பாலும் வடமொழிச் சொற்களை தெள்ளு தமிழ்ச் சொற்களாலே மாற்றி அமைத்திருக்கிறார். வடமொழி அறிவு குறைவாகவும், வரியடைவே விளக்குவார் குறைவாகவும் உள்ள இக்காலத்தில் அனைவரும் தெளிவாகப்புரிந்து கொள்ளும் படி தமிழாக்கம் செய்யப்பட்டிருப்பது வரவேற்க-த்தக்கது. இவ்வரிய நூலை யாவரும் பெற்று படித்து இன்புற வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறேன்.

இங்ஙனம்,

**R. நரஸிம்ஹன்**

வித்வான்

பெரியகோயில்

ஸ்ரீ:
ஸ்ரீவிஷ்ணுசித்த குரவே நம:

"திருமால் நெறி நூல்காவலர்,
வித்யாவிசாரத, திவ்யார்த்த ரத்னநிதி"

ஸ்ரீ உ.வே.S. கிருஷ்ண ஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமிகள்
(ஸுதர்சனர்)
ஆசிரியர் ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சநம்,
3-B, புத்தூர் அக்ரஹாரம்,
திருச்சி - 620 017.

# அணிந்துரை

25.6.1997.

ஸ்ரீமான், ஏந்தூர் சடகோப ராமாநுஜதாசர் திருவஹீந்த்ரபுரம் கச்சிக்கிடாம்பி ஸ்ரீமத் பாஷ்யாசார்யஸ்வாமி (திருப்பதியில் வாழ்ந்த கீர்த்தி மூர்த்தியான, யாமுநாசாரிய ஸ்வாமியின் திருத்தகப்பனார்) அவர்களிடம் பஞ்சஸம்ஸ்காரம் பெற்று திருமந்த்ரார்த்தம் முதலான ஸ்வரூப க்ரத்தங்களைக் காலக்ஷேபம் கேட்டவர். பல வருடங்களாகத் தமிழ் நாடெங்கும் நடக்கும் ஸ்ரீவைஷ்ணவமகாநாடுகளில் ஸம்ப்ரதாயம் வழுவாமல் சொற்பொழிவுகளைச் செய்து வருபவர் பலருக்கு ஸ்வரூப க்ரந்தங்களைக் காலக்ஷேபம் ஸாதித்தும் வருபவர்.

நம்முடைய ஸம்ப்ரதாய ரஹஸ்யக்ரந்தங்களில் பிள்ளை லோகாசார்யர் அருளிய முமுக்ஷுப்படி தலைமையிடம் பெற்று விளங்குகிறது. இதற்கு மாமுனிகள் அருளியுள்ள திருமந்த்ரார்த்த வ்யாக்யாநம் காலக்ஷேபக்ரந்த மாக ஸ்ரீவைஷ்ணவர்களால் கொண்டாடப்பட்டுப்பயிலப்பெற்று வருகிறது. ஆயினும் அந்தவ்யாக்யாநம் மணிப்ரவாள நடையில் அமைந்திருப்பதால் இக்காலத்திலுள்ள பலர்க்குப்

பயன்படாமல் உள்ளது. இக்குறை தீருவதற்காக, நமது நண்பர் மூதறிஞர், ஏந்தூர் சடகோப ராமாநுஜதாசர் இந்நூலை இயற்றியுள்ளார். அதில் முமுக்ஷுப்படி சூர்ணைகள் ஒவ்வொன்றையும் அச்சிட்டு, அவற்றில் மாமுனிகள் வ்யாக்யாநத்தை எளிய தமிழ் நடையில் கொடுத்துள்ளார். ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு இந்நூல், திருமந்த்ரார்த்தத்தைக் காலக்ஷேபமாகக் கேட்க வேண்டும் என்னும் ருசியை விளைக்கும். காலக்ஷேபம் கேட்டவர்களுக்கும் மறுபடியும் மறுபடியும் சிந்தனை செய்வதற்கு உதவும். ஆகையால், இது ஸ்ரீவைஷ்ணவவுலகம் முழுவதும் பெற்றுப் பயன்பெறத்தக்க நூலாகும்.

இங்ஙனம்,

**ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார்**

*(ஸுதர்சனர்)*

ஸ்ரீ:

ஸ்ரீமதேராமாநுஜாய நம:
ஸ்ரீமல் லோககுரவே நம:
ஸ்ரீமத் வர வர முநயே நம:

ப்ரபந்ந வித்வான், ப்ரபந்ந குலதிலகர்,
**R.** பெருமாள்ராமாநுஜதாஸர்
பாண்டிச்சேரி - 605 004.

## அணிந்துரை

"முமுக்ஷுப்படி தெளிவுரை" என்னும் பெயர்-கொண்ட இந்நூலை, ஸ்ரீமான்- ப்ரபந்ந வித்வான், ஏந்தூர் சடகோபராமாநுஜ ஸ்வாமிகள், காலத்தின் அவசியம் கருதி அருளிச் செய்துள்ளார்கள். இற்றைக்கு இருபத்திரண்டு ஆண்டுகளுக்கு முன்பு ஸ்வாமிகள் ஓரிடத்தில் "முமுக்ஷுப்படி" என்னும் நூலைக் கொண்டு இலக்கணத்தோடு கூடிக்காலக்ஷேபம் நிகழ்த்தினார்கள். அப்போது ஸ்வாமிகள் அறிவின் திட்ப நுட்பத்தை வியந்து அடியேன் ஸ்வாமிகளிடத்தில் காலக்ஷேபத்தில் அந்வயித்தேன். இவர்-கள் வில்லேர் உழவராக இருந்து சொல்லேர்உழவராக திகழ்கிறார்கள். இன்று தமிழ்நாட்டில் வைஷ்ணவ உலகில் ஸ்வாமிகளை அறியாதவர் ஒருவரும் இலர். இவர் ஏற்கனவே திருவாய்மொழியினுடைய பத்துப் பத்துக்களுடைய ஸார-த்தை விளக்கி "திருவாய்மொழிக்கலம்பகம்" என்னும் நூலும், திருவாய்மொழிக்கு உரைநூலும் செய்துள்ளார். அதில் இவருடைய தமிழ்ப் புலமை நன்கு விளங்கும்.

ஸ்வாமிகளுக்கு நம்முடைய பூர்வாசாரியர்களிடத்து ஆராத காதலுண்டு. அந்த வாசனை அடியாக 'முமுக்ஷுப்-படி தெளிவுரை' என்னும் இந்நூலில் சிற்சில இடங்களில் வடமொழிச் சொற்களை அப்படியே ப்ரயோகித்திருந்தார்கள். இந்நூலுக்குப் பிழைத்திருத்தம் செய்யப்புகுந்த அடியேனுக்கு, அந்த வடமொழிச் சொற்களுக்கு அடைப்புக் குறியிட்டு தமிழில் பொருள் எழுதும் பாக்கியம் கிட்டியது. ஆனாலும்,

வடமொழியில் வந்த சொற்களே மறுபடியும் வருமிடத்தில் அவற்றை அப்படியே ப்ரயோகித்திருக்கிறார்கள் நம் ஸ்வாமிகள். ஏன்? என்னில், அதன் பழமை மாறாமைக்கும், வாசகர்கள் சில முக்கிய வடமொழிச் சொற்களையாவது தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆசை பற்றி அவ்வாறு செய்துள்ளார்கள். வாழ்க! ஸ்வாமிகளுடைய இவ்வருந்-தொண்டு.

ஸ்ரீமத் பிள்ளைலோகாசாரியரால் அருளிச் செய்யப்-பட்ட "அஷ்டாதசரஹஸ்யம்" என்ற 18 ரஹஸ்யநூல்களில் ஒன்றாகும் "முமுக்ஷுப்படி" என்னும் நூல். அது இந்நூலு-க்கு முதல் நூலாகும். அந்த "முமுக்ஷுப்படி" என்கிற முதல் நூல் முழுவதும் சூத்ரரூமாக அமைந்தது. அதன் சிறப்புக்-களை ஆராயும்போது,

**"சில்வகை எழுத்தில் பல்வகைப் பொருளைச்**
**செவ்வன் ஆடியில் செறித்தினிது விளக்கித்**
**திட்ப நுட்பஞ்சிறந்தன சூத்திரம்"**

- ந. பாயிரம் 18.

பெரிய சரீர முதலியவைகளின் நிழலைத்தன்னு-ள்ளே செவ்வையாக அடக்கி இனிதாகக் காட்டும் கண்ணாடிபோலே, சிலவகை எழுத்துக்களை அடக்கிய வாக்கியத்தாலே பலவகைப்பட்ட பொருளை செவ்வையாக அடக்கி இனிதாகக் காட்டி, குற்றமில்லாமையால் சொல்வலி பொருள்வலிகளும், ஆழமுடைமையால் பொருள் நுணுக்கங்க-ளும் அமைய சிறந்து வருவன சூத்திரங்களாகும் என்கிற-படியும்,

**"ஆற்றொழுக்(கு) அரிமா நோக்கத் தவளைப்**
**பாய்த்துப் பருந்தின்வீழ் அன்னசூத் திரநிலை"**

-ந. பாயிரம்.19

சூத்திரங்கள் நிலை எப்படி அமைய வேண்டும் என்பதை, இடையறாது ஓடுகின்ற ஆற்று நீரோட்டத்தைப் போலவும், சிங்கமானது நடந்தால் முன்னும் பின்னும் பார்க்கின்ற பார்வைபோலவும், இடையிட்டுக் குதிக்கின்ற தவளையினது பாய்ச்சலைப் போலவும், ஆகாயத்தில் வெகுதூரத்தில்

பறக்கும் பருந்தானது ஒரு பொருளை வெளவிப் போவதற்கு வீழ்கின்ற வீழ்ச்சியைப் போலவும் சூத்திரங்கள் அமைக்கப்பட வேண்டும் என்ற நன்னூல் பாயிரத்துக் கிணங்க ஸ்ரீமத் பிள்ளைலோகாசாரியரால் "முமுக்ஷுப்படி" என்ற அதிஅற்புதக்ரந்தம் அமைக்கப்பட்டிருக்கிறது. இதற்கு ஸ்ரீமந் மணவாளமாமுநிகள் "தேனும் பாலும் கன்னலும் அமுதுமாகித் தித்தித்து" என்ற கணக்கிலே மணிப்ரவாள நடையிலே ரஸகணமான வ்யாக்யாநம் அருளிச் செய்துள்ளார்கள். இது பாரத தேசமெங்கும் பரவியுள்ளது. வடமொழி தமிழ் மொழியோடு கலந்த மணிப்ரவாளத்திலி-ருக்கும் இந்நூல், கற்பார் அரிதாயிருக்கிற நிலையைக் கருதி பெரும்பான்மை வடசொற்களை நீக்கி தமிழில் ஸ்வாமியால் மொழி- பெயர்க்கப்பட்டது "முமுக்ஷுப்படி தெளிவுரை" என்னும் இந்நூல்.

"முமுக்ஷுப்படி" என்றால் மோக்ஷத்திலே இச்சையு-டையவன் - படி-நிலை. அதாவது, நிரதிஸய ஆநந்தத்தைத் தருகிற மோக்ஷத்திலே ஆசையுடையவன் நிலையை இந்நூல் விளங்கச் சொல்லுகிறது என்றபடி. இதில், தத்வ. ஹித புருஷார்த்தங்களை விளக்கப்படுகிற மூன்று மந்த்ரங்களிலும், ஒவ்வொன்றையும் ஒவ்வொரு மந்த்ரமும் ப்ரதாநமாகச் சொல்லும். அதாவது, 'தத்வம்' என்ற ஆத்ம ஸ்வரூபத்தையும் பரமாத்ம ஸ்வரூபத்தையும் நன்றாக விளக்குகிறது திருமந்த்ரம் என்ற அஷ்டாக்ஷர மஹாமந்த்ரம். 'ஹிதம்' என்ற உபாயத்தை நன்றாக விளக்குகிறது கீதையின் சரமச்லோகம். 'புருஷார்த்-தம்' என்ற பயனை நன்றாக விளக்குகிறது த்வயம் என்ற உபநிஷத்மந்த்ரம். இவற்றை விரிவாக ஆங்காங்கே இந்நூலில் விளக்கப்பட்டுள்ளது.

திருமந்த்ரம், த்வயம், சரமச்லோகம் ஆகிய மூன்று மந்த்ரங்களில் 'த்வயம்'என்ற மந்திரத்தில், "ஸ்ரீமந் நாராயண சரணௌ" என்ற பதத்தில் 'ஸ்ரீமந் நாராயண' என்றால், பெரிய பிராட்டியோடு சேர்ந்துள்ள நாராயணன் என்று பொருளாகும். இப்படி, பெரிய பிராட்டியார் நாராயண-னோடு சேர்ந்திருப்பதாலே "ஸ்ரீமத் சப்தத்தாலே பத்நீவிசிஷ்டத்துக்கும் உபாயத்வம் உண்டு" அதாவது,

"பெரிய பிராட்டிக்கும் உபாயத்வம் உண்டு' என்று இன்றுள்ள நவீன ஸம்ப்ரதாயஸ்தர்கள் வாதிடுகிறார்கள். அவர்கள் வாதம் நிலை நிற்காது எங்கனேயென்னில்? கேண்மின், பெரிய பிராட்டியோடு கூடியிருக்கும் நிலையைக் கொண்டு பிராட்டிக்கு உபாயத்வம் கற்பித்தால், "ஜகந்நாதம் ப்ரபத்யேத்" என்ற இடத்தில், ஜகத்தும் எம்பெருமானும் சேர்ந்திருப்பதால் அந்த ஜகத்துக்கும் உபாயத்வம் கொள்ள வேண்டிவரும். பிராட்டி அவனைவிட்டு பிரியாதாப்போலே "ஜகத் ஸர்வம் சரீரந்தே" எல்லா உலகமும் அவனுக்கு சரீரமாயிருப்பதாலே ஜகத்தும் அவனைவிட்டுப் பிரியாது. அதே போல "யஸ்ய ஆத்மா சரீரம், யஸ்யப்ருதிவீ சரீரம்" என்ற இடங்களிலும் ஸகல ஆத்மாக்களோடு எம்பெருமான் கூடியிருப்பதாலே ஆத்மாவுக்கும் உபாயத்வம் கொள்ள வேண்டிவரும். அசேதனத்தோடும் கூடியிருக்கையாலே அந்த அசேதனத்துக்கும் உபாயத்வம் கொள்ள வேண்டிவரும். எனவே, அவர்கள் வாதம் அசட்டுத்தனமான வாதம் அறிவாளிகள் யாரும் இந்த வாதத்தை ஏற்க மாட்டார்கள்.

எம்பெருமானோடு பிராட்டி கூடியிருப்பது எதற்காகயென்னில்? "ஈச்வர ஸ்வாதந்த்ர்யத்தையும் சேதனனுடைய அபராதத்தையும் கண்டு அகலமாட்டாள்" என்பது லோகாசார்யர் ஸ்ரீஸூக்தி அதாவது, சேதநர்கள் வழியல்லா வழியில் சென்று அபராதங்களை செய்வதைப் பார்த்து எம்பெருமான் "க்ஷிபாமி" "நக்ஷமாமி" என்று சீறி தண்டித்து விடுவானே என்று பார்த்து, பிராட்டி அவன் சீற்றத்தை ஆற்றி சேதநர்களை அவனோடு சேர்த்து புருஷகாரம் பண்ணுவதற்கும், தான் ஸத்தை பெறுவதற்குமாகத்தான் அப்பெருமானோடு எப்போதும் கூடியிருக்கும் நிலை. ஆகவே, இவர்கள் பிராட்டிக்கு உபாயத்வம் கற்பிப்பது அஸங்கதமாகும்.

அதற்கடுத்து த்வயத்தில், "சரணௌ" சப்தத்தைக் கொண்டு "பெருமானுடைய திருவடிகளுக்கு உபாத்வம் போலே பிராட்டியினுடைய திருவடிகளுக்கும் உபாயத்வம் கொள்ள வேண்டும்" என்று வாதம் செய்கிறார்கள். இந்த நவீன ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்தவர்கள். அதாவது, வட-

மொழியில் அமைந்த இந்த மந்த்ரத்திற்கு நேரான அர்த்தம் சொல்ல வேண்டுமானால், வடமொழியில் ஏகவசநம், த்விவசநம், பஹுவசநம் முறையே ஒருமை, இருமை, பன்மை என்று இலக்கணம். ஆனால், தமிழில் ஒருமை, பன்மைதான். இருமை கிடையாது. அந்த ப்ரகாரம் பார்த்தால் இங்கு "சரணௌ" என்பதற்கு நாராயணனுடைய இரண்டு திருவடிகள் என்று அர்த்தம் கொள்ள வேண்டும். பிராட்டியினுடைய இரண்டு திருவடிகளையும் சேர்த்தால் பஹுவசனமாக (பன்மையாக) வந்திருக்க வேண்டும். அப்படியில்லாமல் 'சரணௌ' என்பதால் இரண்டு திருவடிகள் என்ற அர்த்தத்தில் ப்ரயோகம் வந்திருக்கிறது. இந்த த்விவசநம் (இருமை) இரண்டுக்குமேல் மற்றொன்று வருவதற்கு ஸஹிக்காதது. "சரண:" என்று ஜாத்யேக வசநமாகக் கொண்டு (ஜாதியொருமையாகக் கொண்டு) வந்திருந்தால் அவளுக்கும் உபாயத்வம் கொள்ளலாம். அல்லது "சரணாந்" என்று பன்மையில் ப்ரயோகம் வந்திருந்திருந்தாலும் பிராட்டி திருவடியும் (நான்காக) ச்சேர்த்து அவளுக்கும் உபாயத்வம் கொள்ளலாம். அப்படியில்லாமல் "சரணௌ" என்று த்விவசநம் வந்திருப்பதாலே எம்பெருமான் ஒருவனுக்குத்தான் உபயத்வம் உண்டு. பிராட்டிக்கு புருஷகாரத்வமே உண்டு என்று எம்பெருமான் தானே தன் சோதிவாய்திறந்து ஸ்ரீ பாஞ்சராத்ர சாஸ்த்ரத்தில் அருளிச் செய்துள்ளான், "**ஆகிஞ்சந்யைக சரணா: கேசித்பாக்யாதிகா: புந: மத் பதாம்போருஹத்வந்த்வம் ப்ரபத்ய ப்ரீத மாநஸா: .......**" இந்த ப்ரமாணத்தில், "**மத்பதாம் போருஹ த்வந்த்வம்**" - (எனது இரண்டு திருவடித்தாமரைகளையே) என்று த்விவசந ப்ரயோகம் பண்ணியிருக்கிறான் எம்பெருமான். ஆகவே, சரணௌ சப்தத்திற்கு எம்பெருமான் ஒருவனுக்குத்தான் உபாயத்வம் உண்டு பிராட்டிக்கில்லை என்று ஏற்படுகிறது.

இன்னொரு ப்ராமணத்தில் ப்ராட்டிக்கு புருஷகாரத்வம் தவிர வேறு (உபாயத்வ) லக்ஷணம் கிடையாது என்று வ்யதிரேகத்தில் (எதிர்மறையில்) அருளிச் செய்கிறான். அதாவது,

"மத் ப்ராப்திம் ப்ரதி ஜந்துநாம் ஸம்ஸாரே பததாமத:
லக்ஷ்மீ: புருஷகாரத்வே நிர்திஷ்டா பரமர்ஷிபி:
மமாபிச மதம் ஹ்யேதந் நாந்யதா
லக்ஷணம் பவேத்"

உரை: பிறவியாகிற படுகுழியில் விழுகிற இம்மக்களுக்கு, என்னை அடையுமிடத்தில் லக்ஷ்மிதேவியானவள் புருஷகாரமாயிருக்கும் தன்மையில் பரமருஷிகளாலே வரம்புகட்டப்பட்டிருக்கிறாள்; எனக்கும் அதுவே இஷ்டம். இது தவிர வேறான இலக்கணம் அவளுக்கில்லை என்று ச்ரிய: பதியான எம்பெருமானே கூறியிருப்பதால் இதற்குமேலே ஒன்று கற்பிப்பது ப்ராமணங்களுக்கு முரணானது. இதற்குமேல் இதை விவரித்தால் நூல் விரியுமென்று அஞ்சி இத்துடன் நிறுத்துகிறேன். விரிவுவேண்டுவோர் நம்முடைய ஸூத்தஸம் ப்ரதாய ஸாரத்தை வாங்கி படித்துக் கொள்ளவும்.

ஸம்ஸாரம்தீது பகவத்விஷயம் நன்று என அறிந்து அவற்றையே பற்றுக் கோடாக பற்றியிருப்பதுதான் விவேகத்தின் பலன் "விவேகபலம் வீடுபற்று" என்பர்கள் நம் பெரியோர். பகவத்விஷயத்துக்குப் புறம்பானவையெல்லாம் ஸம்ஸாரம் என்று பொதுவாகச் சொல்லுவார்கள் நம் முன்னோர். இவற்றை நன்றாக அறிவிக்க வல்ல ஓர் ஆசார்யனை அடைந்து பஞ்ச ஸம்ஸ்காரம் செய்து கொண்டு ரஹஸ்யத்ரயங்கள் என்று சொல்லப்படுகிற மூன்று மந்த்ரங்களையும் உபதேசிக்கப் பெற்று, தகுந்தவரிடத்தில் ஒருமுறை காலக்ஷேபம் கேட்டு அதன்பிறகு "முமுக்ஷுப்படி தெளிவுரை" என்ற இந்நூல் கற்பதற்கும் அதிகாரி-அவனே இதைப்படிப்பதற்கு தகுதியுடையவன். அவனுக்குத்தான் எம்பெருமான் அருள்புரிவான் என்பதை கீழ்வரும் ப்ரமாணமும் கூறும்,

"ஜாயமாநம் ஹரி புருஷம் யம்பச்யேந் மதுசூதந:
ஸாத்விகஸ் ஸ து விஜ்ஞேயஸ் ஸவை மோக்ஷார்த்த
- சிந்தக:"

அதாவது, மதுசூதனான எம்பெருமான்யவனை ஜாயமாந காலத்தில் கடாக்ஷிக்கிறானோ அந்த புருஷன்ஸாத்-

வீக குணத்தைப் பெற்று ஜ்ஞானம் உள்ளவனாகி மோக்ஷ விஷயத்தைப் பற்றியே சிந்திக்கிறான் என்று கூறப்படுகிறது. எனவே, ஒருவனுக்கு பகவானுடைய பூர்ணமான நல்லருள் உண்டாக வேண்டுமானால், அவன் ஆசாரியன் திருவடியை அடைந்து ஐந்து தீக்ஷைகளைப் பெற்று அதனால் ரஜஸ், தமஸ்ஸுக்கள் தலைமடிந்து அவன் முறையாக இந்நூலில் கூறப்பட்ட விஷயத்தைக் கேட்டு முழுப்பயனையும் அடைவான் என்பதை ஸ்வாமிபிள்ளை லோகாசாரியர் தம்முடைய இன்னொரு நூலான ஸ்ரீவசநபூஷணத்தில் கூறுகிறார். அதாவது,

**"ஆத்ம குணங்களில் ப்ரதாநம் - ஸமமும், தமமும்."**

**- ஸ்ரீவ.சூ, 97.**

**" இவை இரண்டுமுண்டானால்**
**ஆசாரியன் கைபுகுரும்;**
**ஆசார்யன் கைபு குந்தவாறே**
**திருமந்த்ரம் கைபுகுரும்;**
**திருமந்த்ரம் கைபுகுந்தவாறே ஈச்வரன் கைபுகுரும்;**
**ஈச்வரன் கைபுகுந்தவாறே 'வைகுந்த மாநகர் மற்றது கையதுவே' என்கிறபடியே ப்ராப்யபூமி கைபுகுரும்."**

**- ஸ்ரீவ.98.**

என்று பெரியோர்களால் அருளிச் செய்யப்பட்டிருப்பதால், அதன்படி நடந்தால் நன்மைகள் யாவும் கிடைக்கும் என்பதைக் கூறி ஸ்ரீவைஷ்ணவர்கள் எல்லோரும் இந்நூல்லை ஆதரித்து வாங்கிப் படித்து பயன்பெறுமாறு கேட்டுக் கொண்டு ஆசிரியரின் பிற நூல்களான "அலர்மேல்மங்கை அந்தாதி, நாண்மணிமாலை ஆசாரிய நூற்றந்தாதி" ஆகிய நூல்களும் விரைவில் வெளிவரும் என்பதைக் கூறி அடியேனுடைய அணிந்துரையை நிறைவு செய்கிறேன்.

பொலிக! பொலிக! பொலிக!

இவண்,

**R. பெருமாள்ராமாநுஜதாஸன்**

**2-7-97**

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமத் லோகாசார்ய குரவே நம:
ஸ்ரீமத் வரவர முநயே நம:
ஸ்ரீமத் பாஷ்யமாசார்யாய நம:

# ஆசிரியரின் முன்னுரை

ச்ரிய:பதியாய், ஸ்ரீவைகுண்டத்தில் எழுந்தருளி-யிருப்பனும், நித்ய முக்தர்களால் கண்டு களிப்பதற்குரி-யவனும், குறைகளற்றிருப்பவனும், எல்லாவாற்றாலும் நிறைவு பெற்றவனும், கருணையே வடிவானவனும், அனைத்துக்கும் ஸ்வாமியானவனும் ஆகிய எம்பெருமான் ஸ்ரீமந்நாராயணன். விண்ணுலகும் மண்ணுலகும் தனதாயிருக்க, விண்ணுலகிலு-ள்ளார் தங்களையும் பெருமானையும் உள்ளவாறறிந்து ஏகோபித்து அந்தமில்பேரின்பம் அநுபவிப்பவராயிருக்க, மண்ணுலகிலுள்ளார் மேற்சொன்னவற்றுக்கு எதிர்த்தட்டாய் அறிவின்மையால் களிப்பும் கவர்வும் உற்றவராய், எல்லைகாண முடியாத பிறப்பிறப்பாகிற துன்பக்கடலில் வீழ்ந்து பசி, பிணி, மூப்பு, சாக்காடு என்ற நிலையினின்றும் நீங்காத தன்மையைப் பார்த்து, காருணிகனான ஸர்வேச்வரன் இவர்கள்மேல் கருணை கரைபுறண்டு இவர்களை மீட்கும் விரகுயாதோ என்று பார்த்து, இவர்களை மீட்கும் வழி இதுவன்றி வேறில்லை என அறுதியிட்டு பதரிகாச்ரமத்தில் தானே ஆசார்யனாகவும் சிஷ்யனாகவும் நின்று திருவஷ்டாக்ஷர மந்த்ரத்தை வெளியிட்டான். த்வயத்தை தன் தேவியான பெரிய பிராட்டிக்கு விஷ்ணு லோகத்தில் உபதேசித்தான். முடிந்த உபாயமான-சரமச்லோகத்தை அர்ஜுனனுக்கு உபதேசித்து அதை இவ்வுலகவர்களுக்கு உதவும்படி செய்தான்.

முழுமெய்யுணர்வு பெற்றவர்களே நலமந்தமில்லா நாடான பரமபதத்தை அடைந்து மெய்ம்மைப்பரம் பொரு-ளாம் ஸ்ரீமந் நாராயணனைச் சேர்ந்து பேரின்ப

மெய்துவார்கள் என்றும், அவ்வாறு மெய்ஞானம் இலதேல் பேரின்பமெய்துவது இயலாதென்பதும் நூல்களின் முடிபா-தலின், மெய்யுணர்வு பெறக்கூடிய மார்கம் சாஸ்த்ரங்களின் துணையாலும், அவற்றின் ஸாரமாயிருந்துள்ள திருமந்த்ர-த்தின் துணையாலும் பெறலாம் என்றிருத்தலால். சாஸ்த்ரங்-களின் துணை கொண்டு மெய்யறிவு பெற அரிதென்றும். முழுமெய்யுணர்வு பெறவாகாதென்றும், ஸகலசாஸ்த்ர தாத்பர்யமான திருமந்த்ரத்தின் துணைகொண்டு பெறுவது எளிதென்றும் முழுமெய்ஞ்ஞானம் பெற இயலும் என்று நம் முன்னோர்- களின் முடிந்த முடிவு. திருமந்த்ரத்தின் விரிவே மற்றைய இரண்டு மந்த்ரங்களும் என முன்னோர் அருள்வர். மக்கள் உய்வுபேற்றுக்குரிய பொருளனைத்தும் திருமந்த்ரத்திலேயே உண்டென்பர்.

இத்தகு திருமந்த்ரம், மற்றுமுண்டான பகவந்மந்தர-ங்களைக் காட்டிலும் மிகமிகச் சீரியதென்றும் எல்லா சாஸ்த்ரங்களிலும் மேம்பட்டதென்றும் ஸ்ரீவைஷ்ணவ சமயாசார்யர்களனைவராலும் ஒப்புக் கொள்ளப் பட்ட-தாகும். ஸ்ரீமத் காஞ்சீபுரம் வரதராஜப் பெருமானின் அம்ஸ-மாயவதரித்த ஸ்ரீமத் பிள்ளை லோகாசார்யர், மக்கள்படும் துன்பத்தைக்கண்டு பொறுக்கமாட்டாமல் இவர்கள் உய்வு அடையும் பொருட்டு தம்மேலான கருணையாலே திருமந்த்ரம், த்வயம், சரமச்லோகம் ஆகிய மூன்று மந்த்ரங்களின் பொருள்களை முன்னோர் அருளிய முறையைப் பின்பற்றி சிறப்பாக சூத்ர வடிவில் "முமுக்ஷுப்படி" என்ற திவ்ய க்ரந்த-த்தை அருளிச் செய்து உலகுக்கு உபகரித்தார்.

இதற்கு, திருவனந்தாழ்வான் அம்ஸமாயும் யதிராஜ-ரின் புநரவதாரமாயும் அவதரித்த ஸ்ரீமந் மணவாள மாமுநிகள், அந்த சூத்ரங்களின் பொருளை உரையின்றி அறிய முடியாதாகையால் தம்பரம கருணையாலே உரை எழுதுபவர்-களில் தலைசிறந்தவராய். "முமுக்ஷுப்படிக்கு" உபயவேதாந்-தங்களையும் ஒருங்கவிட்டு மணிப்ரவாள நடையில் சிறந்ததொரு உரையிட்டிருக்கிறார்கள். ஆனால், இக்கால உலகவர் அனைவரும் ஆத்மா உய்வு அடைவதற்குக்கருவியான

உபயவேதாந்தமொழிகளை கனவிலும் கருதாது, நாற்றமிகு உடலையே போஷிப்பதற்குரிய மொழிகளையே பயின்று வந்ததால் மணிப்ரவாளம் என்றால் என்ன? என்று கேட்கும் அவல நிலைக்கு ஆட்பட்டிருக்கிறார்கள். இந்த நிலையைக்கருதி அடியேன், ஸ்வாமி மணவாள மாமுநிகள் உரையை முன்னிட்டுக் கொண்டு பெரும்பாலும் அவற்றில் வரும் வட சொற்களுக்கு நேரான தமிழ்ச் சொற்களைக்கூட்டி ஸ்ரீமத் பகவத் கடாக்ஷமடியாக ஸ்ரீமத் ஆசார்ய அபிமாநம் தூண்ட "முமுக்ஷுப்படி தெளிவுரை" என்ற நூலை எழுதுபவனாயினேன். சான்றோர்கள் கடாக்ஷித்தருள வேண்டுகிறேன்.

இந்நூலுக்கு பிழைத்திருத்தம் செய்து ஒரிரு இடங்களில் மாமுநிகள் வ்யாக்யாந பங்க்திகளில் உள்ளவற்றை நேர்ப்படுத்தி சுருக்கி உரையிட்டு உதவி புரிந்த ஸ்ரீமான் R.பெருமாள்ராமாநுஜதாஸர் அவர்களுக்கு அடியேனுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலைக் கடாக்ஷித்து மங்களாசாஸனம் செய்தருளிய ஸ்ரீபெரும்பூதூர், ஸ்ரீமத் பரமஹம் ஸேத்யாதி, எதிராஜ ஜீயர் ஸ்வாமிகளுக்கும், இந்நூலை பக்கம் பக்கமாக் வாசித்து, இதற்கு மதிப்புரை நல்கிய ஸ்ரீரங்கம், வித்வான் ஸ்ரீ.உ.வே. R. நரஸிம்மாசாரிய ஸ்வாமிகளுக்கும், இந்நூலுக்கு அணிந்துரை நல்கி ஊக்குவித்தருளிய, புத்தூர், ஸ்ரீ,உ,வே,ஸ்ரீ, ஸ்ரீ.கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமிகள் (ஸுதர்சனர்) ஆகிய, ஸ்வாமிகள், மூவர் திறத்தும் அடியேன் க்ருதஜ்ஞதயைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

முமுக்ஷுப்படி தெளிவுரை என்னும் இந்நூலுக்கு நிதிஉதவி அளித்த திருப்பதி தேவஸ்தான நிறுவனத்தார்க்கும் நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**அடியார்க்கடியேன்,**

ஏந்தூர் சடகோபராமாநுஜதாஸர்

ஸ்ரீ:



# முமுக்ஷுப்படி தெளிவுரை

திருமந்த்ரார்த்தம் தொடங்கும்போது அனுஸந்திக்கும் தனியன்கள்

["ஸ்ரீசைலேச"விலிருந்து "ப்ரணதோஸ்மி நித்யம்" வரை பொதுத்தனியன்களை அனுஸந்தித்தபின் பின்வரும் தனியன்களை அனுஸந்திப்பது.]

மாமுனிகள் அருளிச்செய்த
ரஹஸ்யார்த்த ஸம்ப்ரதாய பரம்பரையின் ஒட்டுத்தனியன்

**லோககுரும் குருபிஸ்ஸஹ பூர்வை: கூரகுலோத்தமதாஸ முதாரம்|**
**ஸ்ரீநகபத்யபிராமவரேசௌ தீப்ரசயாநகுருஞ்சபஜேஹம்||**

பூர்வோக்த குருபரம்பரைக்கு ப்ரத்யேக தனியன்கள்
பிள்ளைலோகாசார்யர் தனியன்
(ஈயுண்ணி பத்மநாபர் அருளிச்செய்தது)

**லோகாசார்யாய குரவே க்ருஷ்ணபாதஸ்ய ஸூநவே||**
**ஸம்ஸாரபோகி ஸந்தஷ்ட ஜீவஜீவாதவே நம:**

திருவாய்மொழிப்பிள்ளை அருளிச் செய்த
கூரகுலோத்தமதாஸர் தனியன்

**லோகாசார்யக்ருபாபாத்ரம் கௌண்டிந்யகுலபூஷணம்|**
**ஸமஸ்தாத்மகுணாவாஸம் வந்தே கூரகுலோத்தமம்||**

மணவாளமாமுனிகள் அருளிச்செய்த
திருவாய்மொழிப்பிள்ளை தனியன்

**நமச்ஸ்ரீசைலநாதாய குந்தீநகரஜந்மநே|**
**ப்ரஸாதலப்த பரம ப்ராப்ய கைங்கர்யசாலிநே||**

மணவாளமாமுனிகளுக்கு மாதாமஹரான
கோட்டூர் அழகியமணவாளப் பெருமாள்பிள்ளை தனியன்

*லோகாசார்ய பதாம்போஜ ராஜஹம்ஸாயிதாந்தரம் |*
*ஜ்ஞாநவைராக்யஜலதிம் வந்தே ஸௌம்யவரம் குரும் ||*

*மணவாளமாமுநிகள் அருளிச்செய்த*
*திகழக்கிடந்தான் திருநாவீறுடையபிரான் தாதரண்ணரையர் தனியன்*

*ஸ்ரீ ஜிஹ்வாவததீசதாஸமமல மசேஷசாஸ்த்ரவிதம் |*
*ஸுந்தர வரகுருகருணாகந்தளித ஜ்ஞாநமந்திரம் கலயே ||*

*இதன் பிறகு ஸ்வாசார்யபரம்பரைத் தனியன்களை அநுஸந்திக்க வேண்டும்.*

*சாற்றும்போது அநுஸந்திக்கும் தனியன்கள்*
*வாநமாமலைசீயர் அருளிச் செய்தது.*

**கோதிலுலகாசிரியன் கூரகுலோத்தமதாதர்**
**தீதில் திருமலையாழ்வார் செழுங்குரவை மணவாளர்**
**ஓதுபுகழ்த்திருநாவீறுடையபிரான் தாதருடன்**
**போதமணவாளமுனிபொன்னடிகள் போற்றுவனே.**

வாழியுலகாசிரியன் வாழியவன் மன்னுகுலம்
வாழி முடும்பையென்னுமாநகரம் - வாழி
மனஞ் சூழ்ந்த பேரின் பமல்குமிகுநல்லா
ரினஞ் சூழ்ந்திருக்குமிருப்பு.

ஓதுமுடும்பையுலகாசிரியனரு
ளேது மறவாத வெம்பெருமான் - நீதி
வழுவாச் சிறுநல்லூர் மாமறையோன் பாதந்
தொழுவார்க்கு வாரா துயர்.

*இதன் பிறகு "நம:ஸ்ரீசைல" என்று தொடங்கி ஸ்வாசார்ய பரம்பரைத் தனியன்களை முன்போல் அநுஸந்தித்து முடிக்க வேண்டும்.*

*பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே சரணம்.*

*சீயர் திருவடிகளே சரணம்.*

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம :
ஸ்ரீமத் வரவரமுநயே நம:

# ஸ்ரீமந் மணவாள மாமுநிகள் அருளிச்செய்த முமுக்ஷுப்படி வ்யாக்யாந அவதாரிகையின் தெளிவுரை

திருமகள் கேள்வனாய், ஸ்ரீவைகுண்டத்தை இருப்பிடமாக உள்ளவனாய், நித்திய முக்தர்களால் ஸேவித்தின் புறத்தக்கவனாய், அளவிறந்த ஆநந்தத்தோடு கூடி இருக்கிற எல்லாவற்றுக்கும் மேம்பட்ட இறைவன். இவ்வுலகவர் தன்னை அந்த பரமபதத்திலிருக்கும் நித்திய முக்தரோடு கண்டுகந்து நிரந்தரமாக வாழ்த்தி வாழுகைக்கு உரிமை இருக்கச் செய்தேயும் அத்தை இழந்து (அஸந்நேவ) அசத்தைப்போல இருந்தும் இல்லை என்னலாம்படி அசத்துக்களாய்க் கிடக்கிற ஸம்ஸாரி சேதநர்களுடைய இழவைக்குறித்து, மிக மிகத்துன்புற்ற மனத்தினையுடைய இறைவன், இவர்கள் உடல் ஐம்பொறிகளை இழந்து இறகொடிந்த பறவைபோலே கிடக்கிற நிலையிலே, உடல் பொறி முதலானவற்றைக் கொடுத்து அவற்றைக் கொண்டு புறம் போகாதே தன்னையடைந்து உய்வு பெறுகைக்கு ஏதுவாக, ஒரு (சேதநனால்) மனிதனால் இயற்றப்படாததும், அழிவற்றதும், குறையில்லாததும் தனக்குத்தானே சான்றாய் இருக்கிற வேதங்களையும், இதன் வழி நூல்களாம் இதிஹாஸ புராணாதிகளையும் தோற்றுவித்தவிடத்திலும், இவைகளைப் பயில்வதற்கு அநேக தகுதிகள் வேண்டுகையாலே, அந்த சாஸ்த் திர நூல்வழியாலே அறிவுண்டாகி மக்கள் உய்வு பெறுகை அரிதாயிருக்கிறபடியைத் திருவுள்ளம் பற்றி அனைத்துச் சாஸ்த்திர ஸாரார்த்தங்களை தெளிய சுலபமாக அறிந்து

உய்யும்படி செய்யவேணுமென்று, தத்துவம் உபாயம் பயன் இவைகளை உள்ளவாறு காட்டுமதான மூன்று மந்திரங்களையும் தானே ஆசார்யனாய் நின்று வெளிப்படுத்தினான். அதில், திருமந்த்ரத்தை ஸ்ரீபதரிகாச்ரமத்திலே தன் அம்ஸமாகிய நரன் மூலமாக வெளிப்படுத்தினான். த்வயத்தை தன் தேவியான லக்ஷ்மீ மூலமாக ஸ்ரீவிஷ்ணு லோகத்தில் வெளிப்படுத்தினான். சரமச் லோகத்தை திருத்தேர் தட்டிலே தன் அடியவனான அர்ஜுநன் மூலமாக வெளிப்படுத்தினான். ஆகையால்தான், "லக்ஷ்மீநாத ஸமாரம்பாம்" என்று குருபரம்பராதியிலே இறைவனைச் சொல்லுகிறது. இனி, மந்த்ரங்கள் மூன்றும் சப்தம் எளிதாயிருந்ததேயாகிலும், இதன் பொருளை அறிந்தே எல்லோர்க்கும் உய்ய வேண்டுகையாலும், இந்த மூன்று மந்த்ரங்களிலும் பூர்வாசார்யர்களுடைய உபதேச பரம்பரையாக வந்த பொருட்சிறப்புக்களை அனைவர்க்கும் சுலபமாயும் தெளிவாயும் அறிய, பிள்ளை லோகாசார்யர் தம்மேலான கருணையாலே இந்த நூல் மூலமாக அருளிச் செய்கிறார்.

முன்பே இந்த மந்த்ரங்களின் விஷயமாக மூன்று நூல்கள் அருளி இருக்கச் செய்தேயும், இதில் "யாத்ருச்சிகப்படி" மிகச் சுருக்கமாகையாலும், "பரந்தபடி" மிகவிரிவாகையாலும் "ச்ரிய:பதிப்படி" இவ்விரண்டு குறைகளும் இல்லையேயாகிலும், வடமொழி மிகுத்திருக்கையால் எளிதாக அனைவரும் பயில்வதற்கில்லாமையால் இந்த மூன்று குறைகளும் இல்லாத படியாக இன்னமும் ஒரு நூல் இயற்றவேண்டுமென்று திருவுள்ளம் பற்றி எல்லாவற்றுக்கும் பின்பாக இந்த நூலிட்டருளினார்.

அதனால்தான், மற்றப்ரபந்தங்கள் இருக்க இதை எல்லோரும் விரும்பிக்கற்பது. இன்னமும் முந்தியப்ரபந்தங்களில் சொல்லாத சிறந்த பொருள்களும் இதிலே சொல்லி இருக்கையாலே, எல்லோர்க்கும் இதுவே விரும்பிக்கற்பதற்கு ஏற்றதாயிருக்கும்.

**வ்யாக்யான அவதாரிகையின் தெளிவுரை முற்றிற்று**

ஸ்ரீ :

ஸ்ரீமதேராமானுஜாய நம :

ஸ்ரீமத் பிள்ளை லோகாசார்யர் அருளிச் செய்த

# முமுக்ஷுப்படி- திருமந்த்ரப்ரகரணம்

**மூலம்-சூத்ரம் -1 - முமுக்ஷுவுக்கு அறியவேண்டும் ரஹஸ்யம் மூன்று-**

விரிவுரை: மோக்ஷத்திலே இச்சை உடையவனுக்கு முமுக்ஷு என்று பெயர். முமுக்ஷு என்ற சொல் "முச்ல் மோக்ஷணே" என்ற தாதுவாகிய வினைப்பகுதியடியாகப் பிறந்த சொல். இது, மரணம் விடுதலை நித்தியாநந்த பரவீடு என்ற மூன்று பொருள்களையுடைய இச்சொல், இங்கே விடுதலை என்ற பொருளிலே வந்து பிறப்பு இறப்பாகிய ஸம்ஸார விமோசநத்தில் ஆசை பிறந்தவனுக்கு முமுக்ஷு என்ற பொருளைக் காட்டும். தன் ஆத்மாவை தான் அடைய ஆசையுடைய கைவல்ய நிஷ்டனுக்கும் முமுக்ஷுத்வம் உண்டானாலும், இவ்விடத்தில் அவனைக் குறிப்பிடவில்லை. அவனுக்கு மூன்று ரஹஸ்யங்களை அறிய வேண்டிய விருப்பம் இல்லையல்லவா. ப்ரணவம் என்ற ஒரு மந்த்ரம் போதும் அவனுக்கு. ஆகையால், இவர் முமுக்ஷு என்றது பகவானை அடைவதில் ஆசையும் பிறவிப்பிணியிலிருந்து விடுதலை அடைய இச்சையும் உடையவனை முமுக்ஷு என்கிறார்.

இப்படி, பகவானை அடைவதில் ஆசையும் பிறப்பிலிருந்து விடுதலையிலிச்சையுமுடையவனுக்கு அவசியம் அறிய வேண்டியது, தன் இயல்பையும், அதற்குத் தகுந்த உபாயத்தை (வழியை)யும், அந்த உபாயத்தால் ஸாதிக்கக்கூடிய பயனையும் இந்த மூன்று மந்த்ர ரஹஸ்யங்களிலுமே உள்ளதை உள்ளபடி சொல்லப்பட்டிருக்கிறபடியால், இம்மூன்று ரஹ- ஸ்ய மந்த்ரங்களுமே இவ்வதிகாரி அறிய வேண்டுவதொன்றாகாகையாலே ‘அறிய வேண்டும் ரஹஸ்யம் மூன்றெ’ன்கிறார்.

**"ஸ்வஜ்ஞாநம் ப்ராபகஜ்ஞாநம் ப்ராப்ய ஜ்ஞாநம் முமுக்ஷுபி: ஜ்ஞாநத்ர யமுபாதேயம் ஏததந்யந்ந கிஞ்சந"**

ஸ்வஜ்ஞாநம் - தன்னைப்பற்றிய அறிவும், ப்ராபகஜ்ஞாநம் - உபாயத்தைப் பற்றிய அறிவும், ப்ராப்யஜ்ஞாநம் - பயனைப்பற்றிய அறிவும். ஜ்ஞாநத்ரயம் - மூன்றுவகை அறிவும், முமுக்ஷுபி : - முமுக்ஷுக்களால். உபாதேயம் - கொள்ளத்தக்கது. ஏதத் அந்யந் - இதை விட வேறொன்று. கிஞ்சந - கொஞ்சமும். ந - வேண்டியதில்லை. என்று சொல்லப்பட்டதன்றோ.

ரஹஸ்யம் மூன்று என்று இவர் குறிப்பிடுவது, திருமந்த்ரமும் த்வயமும் சரமச்லோகமும் ஆகிய இவற்றை மேலே நன்றாக விளக்கிக் கூறப்போகிறார் என்பதை அறியலாம். இவற்றை ரஹஸ்யங்களென்கிறது - எல்லா வேதங்களின் அர்த்தங்களை சொல்லப்படுவதாலும் மறைக்கப்பட வேண்டியவற்றில் மேம்பட்டதாகையாலே. ஆக இந்த சூத்ர வாக்கியத்தால், வீடுபேற்றுக்கு தகுதியுடைய அதிகாரியைப் பற்றியும் அவன் அறிய வேண்டிய அர்த்தத்தின் சிறப்பையும் நிரூபணம் செய்து முடிக்கிறார்.

தோற்றுவாய் : இனி, அந்த மூன்று ரஹஸ்யங்களிலும் முதல் ரஹஸ்யம் எது? என்ற கேள்விக்கு விடை கூறுகிறார்.

## மூ. சூ. 2. அதில் ப்ரதம ரஹஸ்யம் - திருமந்த்ரம்.

.விரிவுரை : அதாவது, அந்த மூன்று ரஹஸ்யத்திலும் வைத்துக் கொண்டு இந்த அதிகாரிக்கு முதற்கண் அறிய வேண்டிய ரஹஸ்யம், ஸ்வரூபத்தை உண்மையாம் வகையில் சொல்லுமதாய், விடவேண்டியவற்றையும் பற்ற வேண்டியவற்றின் வேறுபாடுகளை அறிவித்து முழுமையான ஜ்ஞாநத்தை உண்டாக்குவதில் திருமந்த்ரம் சிறந்தது. (அநந்யார்ஹ சேஷத்வம்) பகவானுக்கே அற்றுத்தீர்ந்த அடிமை, (அநந்ய சரணத்வம்) மற்றொருவரை தஞ்சமாக பற்றாது அவனையே தஞ்சமென்று பற்றுகை, (அநந்ய போக்யத்வம்) அவனையே அநுபவிக்கிற சுவைப்பொருளாகக் கொள்ளுகையாகிற இன்றியமையாத மூன்று தன்மைகளையும் சொல்லுகையாலே (சேதநனுடைய) மனிதனுடைய இயல்பை உண்மையாம் வகையில் சொல்லும்தாய் இவற்றுக்குப் பொருந்தியதான விடவேண்டிய, பற்ற வேண்டிய வேறுபாட்டை தெளியச்

*சொல்லுமதாயிருந்துள்ள இந்த மந்த்ரத்தாலே தோற்றுவிக்கப்பட்ட தன்மையுடையவனுக்கன்றோ மற்ற மந்திரங்களிரண்டாலும் சொல்லப்படுகிற உபாய உபேயங்களில் வேட்கையுண்டாவது. ஆகையால் (ஸ்வரூபத்தினுடைய) ஆத்மாவினுடைய இயல்பை சொல்லுகிற திருமந்த்ரம் முதல் மந்திரமென்னக் குறையில்லை.*

*இன்னமும், ப்ரணவத்தை நமோநாராயணாய என்கிற பதம் விரித்துச் சொல்வது போலே, நமோநாராயணாய பதத்துக்கு த்வயம் விவரணமாய், த்வயத்துக்குச் சரமச்லோகம் விவரணமாயன்றோ இருப்பது. அந்த ந்யாயத்தாலும் இதனுடைய முதன்மை ஸித்தம். ஆக, இவை எல்லாவற்றையும் திருவுள்ளம் பற்றியாயிற்று ப்ரதம (முதல்) ரஹஸ்யம் திருமந்த்ரம் என்று இவர் அருளிச் செய்தது. இத்தை மந்த்ரமென்கிறது, "மந்தாரம் த்ராயத இதிமந்த்ர :" என்கிற படியே மநநம் செய்பவர்களை சப்த சக்தியாலும், அர்த்தத்தை அறிவிப்பதாலும் தன்னைப் பற்றுவார்க்கு ரக்ஷகமாகையாலே. சப்த சக்தியாலே ரக்ஷகமாம் ஜபஹோமம் முதலானவைகளாலே கார்யங்கொள்ளும் உபாஸகரான பக்தியோக நிஷ்டருக்கு. அர்த்தத்தை அறிவிப்பதாலே ரக்ஷகமாம், ஈச்வரனே ஸாதநமும் பலனும் என்றிருக்கிற ப்ரபந்நர்க்கு. அர்த்த போதநத்தாலே ரக்ஷகமாகையாவது,*

"தேஹாஸக்தாத்ம புத்திர் யதி பவதி பதம் ஸாதுவித்யாத்ருதீயம், ஸ்வாதந்தர்யாந்தோ யதிஸ்யாத் ப்ரதமம் இதர சேஷத்வதீச் சேத்விதீயம், ஆத்மத் ராணோந்முகச் சேந்நம இதிசபதம் பாந்தவாபாஸ லோலச் சப்தம் நாராயணாக்யம் விஷய சபலதீச்சேச் சதுர்த்தீம் ப்ரபந்ந :"

*ப்ரபந்ந :- ப்ரபந்நனானவன். தேஹாஸக்த - தேஹத்தில்தானே. ஆத்மபுத்திர்யதிபவதி - ஆத்மா என்கிற நினைவையுடையவனானால். (உடலே உயிர் என்கிற மயக்கத்-தையுடையவனனால்)த்ருதீயம் பதம் - (ஜ்ஞாநத்தை-யுடையதென்று தெரிவிப்பதன் மூலம் தேஹத்தில் ஆத்மா*

வேறுபட்டது என்று காட்டுகிற) மூன்றாம் பதமான மகாரத்தை. ஸாது - நன்றாக (அர்த்தத்தோடு) வித்யாத் - அறியக்கடவன். ஸ்வாதந்தர்ய அந்த : ஸ்வாதந்தர்யனாக அறிவுகெட்டவனாக (தான் ஸ்வதந்த்ரனென்கிற அறியாமை-யையுடையவனாக). ஸ்யாத்யதி - ஆவானேயானால். ப்ரதமம்-(எம்பெருமானுக்கு அடிமை என்று தெரிவிக்கிற) ப்ரணவத்தின் முதல்பதமான அகாரத்தை. வித்யாத் - அறியக்கடவன். இதரசேஷத்வ - (ஸ்ரீமந்நாராயணனைத் தவிர) மற்றவர்களுக்கு அடிமை என்கிற, தீ:சேத் கெட்டபுத்தி உண்டாகுமாயின்.த்விதீயம் - வேறொருவர்க்கு அடிமையைத் தவிர்க்கிற இரண்டாம் பதமான உகாரத்தை. ஸாது வித்யாத் - நன்றாக அறியக்கடவன். ஆத்மத்ராண : - தன்னைத்தானே காப்பாற்றுதலில். உந்முக : சேத் - முயற்சியுடையவனானால். நம:இதிபதம்-தற்காப்பில் தொடர்பில்லாமையைத் தெரிவிக்-கிற நம: என்னும் பதத்தை. ஸாதுவித்யாத் - நன்றாக அறியக்கடவன். பாந்தவ ஆபாஸ லோல :- வினைத்தொடர் பால் பிதாபுத்திரர் முதலான பந்துக்கள் போலத் தோன்றுமவர்களிடத்தில் ஆசையுடையவனாயிருப்பானா-னால், நாராயணாக்யம் சப்தம் - நாராயணனே எல்லா உறவு முறையும் என்று தெரிவிக்கிற நாராயணனென்கிற பதத்தை, ஸாது வித்யாத் - நன்றாக அறியக்கடவன். விஷய சபல-தீச்சேத் : ஐம்புலனுகர்ச்சியில் செல்லுகிற புத்தியை உடையவனாகில். சதுர்த்தீம் - பகவத் தொண்டின் ப்ரார்த்தனையைக் காட்டுகிற 'ஆய' என்கிற நான்காம் வேற்றுமையை ஸாது வித்யாத் - நன்றாக அறியக்கடவன் என்று பட்டர் அருளியபடியே, தன்னை அறியுமவர்களுக்கு தேஹமே ஆத்மா என்கிற நினைவும், சுதந்திர புத்தியும், அவனைத்தவிர்த்த பிறர்க்கடிமை என்ற நினைவும், தற்காப்பில் தொடர்பும், உறவல்லாதாரிடத்தில் உறவுடைமை என்கிற புத்தியும், ஐம்புலனுகர்ச்சியில் வேட்கையும், மேலிடாதபடி செய்து தன்னியல்புக்குப் பொருந்த நடக்கும்படி நோக்குகை.

தோற்றுவாய் : இனிமேல் இந்த மந்திரத்தினுடைய சிறப்பை விரிவாக அருளிச் செய்வதாக திருவுள்ளம் பற்றி

*முதலில் சொல்ல வேண்டிய முறையைச் சொல்லும் முகத்தால் இதன் சிறப்பை அருளிச் செய்கிறார்.*

***மூ . சூ . 3 . திருமந்த்ரத்தினுடைய சீர்மைக்குப் போரும்படி ப்ரேமத்தோடே பேணி அநுஸந்திக்கவேணும் .***

*விரிவுரை : திருமந்த்ரத்துக்குச் சீர்மையாவது,*

"ருசோ யஜூம்ஷி ஸாமாநி ததைவாதர்வணாநிச, ஸர்வ மஷ்டாக்ஷராந்த:ஸ்தம்".

*ருச :- ருக் வேதங்களும், **யஜூம்ஷி** - யஜுர் வேதங்களும். **ஸாமாநி** - ஸாமவேதங்களும், **ததைவ** - அப்படியே, **அதர்வணாநிச** - அதர்வண வேதங்களும். **ஸர்வம்** - ஆகிய எல்லாமும், **அஷ்டாக்ஷராந்தஸ்தம்** - திருமந்த்ரத்தினுள்ளே இருப்பனவாம்.*

*என்கிறபடியே , அனைத்து வேதங்களின் சுருக்கமாய் "மற்றெல்லாம் பேசிலும்" என்கிறபடியே அறியவேண்டிய எல்லா அர்த்தங்களையும் அறிவிப்பதாய்,*

"மந்த்ராணாம் பரமோ மந்த்ரோ குஹ்யாநாம் குஹ்யமுத்தமம், பவித்ரம் ச பவித்ராணாம் மூலமந்த்ரஸ் ஸநாத ந :"

*ஸநாதந:- மிகவும் பழமையானதான **மூலமந்த்ர:-** எல்லாமந்த்ரங்கட்கும் மூலமந்த்ரமாகிய திருவஷ்டாக்ஷரமானது.*

***மந்த்ராணாம்** - மந்திரங்கட்குள்ளே, **பரமோமந்த்ர:-** சிறந்த மந்திரமாகும், **குஹ்யாநாம்** - ரஹஸ்யங்களுக்குள்ளே, **உத்தமம் குஹ்யம்** - உத்தமமான ரஹஸ்யமாகும்.*

***பவித்ராணாம்** - புனிதங்கட்கெல்லாம், **பவித்ரம்ச** - இது பவித்ரமாகும். என்கிறபடியே மந்த்ரங்களில் வைத்துக் கொண்டு மேலான மந்த்ரமாய், ரஹஸ்யங்களில் உத்தமமான ரஹஸ்யமாய், பவித்ரங்களுக்கும் பவித்ரமாயிருக்கும் கௌரவம். சீர்மைக்குப் போரும்படி என்றது-தகும்படி என்கை.*

ப்ரேமத்தோடே பேணி அநுஸந்திக்கையாவது;- இத்தைச் சொல்லுமளவில் வரண்ட மனமுடையவனாயன்றிக்கே மேற் சொன்ன இதன் கௌரவமடியாக இதன் பக்கல் தனக்குண்டான ப்ரேமத்தோடே மறைக்க வேண்டியவையாகையாலே தகாதார் செவிப்படாதபடி "மந்த்ரம் யத்நேந கோபயேத்" (மந்திரம் முயன்று மறைக்கக் கூடியது) என்கிறபடியே மிக மறைத்துக் கொண்டு சொல்லுகை.

இப்படிச் சொல்லவேண்டுமாகையாலே வேறுவிதமாகச் சொல்லக்கூடாது என்கிற நியமம் தோற்றுகிறது.

தோற்றுவாய் : இப்படித்தன் பக்கல் ப்ரேமம் உண்டாகவே இம்மந்திரம் இவனுக்குக் கார்ய கரமாகுமோ? என்ன , அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 4 . மந்த்ரத்திலும் மந்த்ரத்துக்குள்ளீடான வஸ்துவிலும் மந்த்ரப்ரதனான ஆசார்யன் பக்கலிலும் ப்ரேமம் கநக்க உண்டானால் கார்யகரமாவது .**

விரிவுரை : அதாவது, அறிய வேண்டியவற்றை அறிவிக்கிற இம்மந்த்ரந்தன்னிலும், தலைவனாயிருக்குந்தன்மை, தஞ்சமாக அடையப்படும் தன்மை, அநுபவிப்பதற்குப் பயனாக இருக்கும் தன்மை ஆகிய இம்மூன்று நிலைகளோடு கூடி இம்மந்த்ரத்தின் பொருளாயிருக்கிற ஈச்வரன் திறத்திலும், "தந்மந்த்ரம் ப்ராஹ்மணாதீநம்" (அந்த மந்திரம் ஆசார்யன் அதீநமாயிருப்பது) என்கிறபடியே இதன் தகுதிக்கேற்ப நினைவுடையவனாய்க் கொண்டு தனக்கு உபகரித்த ஆசார்யன் திறத்திலும் அந்தந்த தகுதிகளுக்குப் பொருந்த விருப்பம் மிக உண்டானால் இம்மந்திரம் இவனுக்குக் காரியம் கூட்டுவிக்கும் என்கை.

"மந்த்ரே தத்தேவதாயாஞ்ச ததா மந்த்ரப்ரதேகுரௌ, த்ரிஷு பக்திஸ் ஸதாகார்யாஸாஹி ப்ரதம ஸாதநம்"

மந்த்ரே - மந்திரத்தினிடத்திலும் தத்தேவதாயம்ச - அதனுடைய தேவதையினிடத்திலும், ததா - அப்படியே மந்த்ரப்ரதேகுரௌ - மந்திரம் உபதேசித்தவனிடத்திலும்

*த்ரிஷு-பக்தி :- இம்மூவிடத்திலும் பக்தியானது, ஸதாகார்யா - எப்போதும் செய்யத்தக்கது, ப்ரதம ஸாதநம் ஸா ஹி - அந்தப் பக்தியானது முதல் ஸாதநமன்றோ? என்னக் கடவதன்றோ.*

*தோற்றுவாய் : இனி, இம்மந்த்ரத்தினுடைய தோற்றத்தின் முறையை சொல்லும் முகத்தாலே இதனுடைய அளவுகடந்த சிறப்பை அருளிச் செய்கிறார்.*

**மூ . சூ . 5 . ஸம்ஸாரிகள் தங்களையும் ஈச்வரனையும் மறந்து, ஈச்வர கைங்கர்யத்தையும் இழந்து, இழந்தோமென்கிற இழவுமின்றிக்கே ஸம்ஸாரமாகிற பெருங்கடலிலே விழுந்து நோவுபட, ஸர்வேச்வரன் தன்க்ருபையாலே இவர்கள் தன்னையறிந்து கரைமரஞ்சேரும்படி தானே சிஷ்யனுமாய், ஆசார்யனுமாய் நின்று திருமந்த்ரத்தை வெளியிட்டருளினான்.**

*விரிவுரை : ஸம்ஸாரிகளாகிறார் - ஆரம்பங்காண முடியாத காலமாய் (அசேதநத்தின்)அறிவற்ற ஜடப்பொருளின் தொடர்பாலே மாறிமாறி முன்னுள்ள (நாம ரூபங்களோடு) பெயர் உருவங்களோடு வருகிற அறிவின்மை, இதனால் வரும் தீயவினை, இவற்றில் நீளப்பழகின வாஸனை (தீயதில் நெஞ்சறிய முயலும் வாஸனை), இவைகளின் வயத்தராய் பிறப்பு, இறப்பு இவைகளில் கட்டுண்டு துன்பமுடைய ராய்த்திரிகிற (சேதநர்)மக்கள்.*

*தங்களையும் ஈச்வரனையும் மறந்து என்றது - "தாஸபூதா:ஸ்வதஸ் ஸர்வேஹ்யாத்மாந : பரமாத்மந : நாந்யதாலக்ஷணம் தேஷாம் பந்தே மோக்ஷதவைச". பரமாத்மந :- பரமாத்மாவான எம்பெருமானுக்கு, ஸர்வே ஆத்மாந :- எல்லா (ஆத்மாக்களும்) மக்களும், ஸ்வத :- இயல்பான ஸ்வரூபத்தாலேயே, தாஸபூதாஹி - அடிமையுடையவர்களாய் நிலைபெற்றவர்களன்றோ. தேஷாம் - அவர்களுக்கு, பந்தே - பிறப்பிறப்பில் கட்டுண்டுழலும் நிலையிலும், (அப்படியே) மோக்ஷ - முக்த நிலையிலும்*

அந்யதா - வேறான சுதந்திரம் என்கிற, லக்ஷணம் ந - லக்ஷணம் இல்லை. சேதநா சேதநங்கட்கு அடிமைத்தன்மை பொதுவா-யிருந்தாலும், ஆத்மாவுக்கு முக்கியமான ஸ்வரூபம், இயல்பா-கவே உண்டான பகவத்சேஷத்வத்தை லக்ஷணமாகவுடையரா-யிருக்கிற தங்களையும், "பதிம்விச்வச்ய"(இயல்பாகவே எல்லோருக்கும் ஸ்வாமியாயிருப்பவன்) என்றும்,

"ஸ்வாமித்வம் ப்ரஹ்மணி ஸ்திதம்" அனைத்தையும் சொத்தாகக் கொண்டு உடையவனாயிருக்குந்தன்மை ப்ரஹ்மத்தினிடம் நிலை பெற்றுள்ளது. இவை முதலானவை-களில் சொல்லுகிறபடியே தங்களுக்கு காரணமின்றி இயல்பாகவே ஆண்டானாயிருக்கிற ஈச்வரனையும் அறியாதே என்கை. ஆனால், அறியாம லென்னாதே மறந்து என்பான் என்? என்னில், முன் ஒருக்கால் நினைவிலிருந்து பின்பு மறந்தபோதன்றோ மறந்து என்று சொல்லவேண்டுவ-தென்னில்: திருமங்கையாழ்வார் "மறந்தேனுன்னை முன்னம்" என்கிறபடியே, நமக்கும் இறைவனுக்குமுண்டான இயல்பா-கவே அழிவின்றி நித்தியமாக இருக்கும் தொடர்பின் உறைப்பை உணர்ந்தால் மறந்து என்ன வேண்டி இருத்தலால் இப்படி அருளிச் செய்தாராமித்தனை. ஈச்வர கைங்கர்-யத்தையும் இழந்து என்றது, கீழ்ச் சொன்ன அறிவின்மை-யாலே தகுந்த ஆண்டானான பகவத்விஷயத்தில் தொண்டா-ற்றுகையாகிற மேலாம்பயனையும் பெறப்பெறாதே என்கை. பயனினுடைய கௌரவத்தையும், அதுக்கென்றிட்டுப் பிறந்து வைத்து இழந்து கிடந்தபடியையுங்குறித்து இழந்து என்கிறார். இழந்தோமென்கிற இழவுமின்றிக்கே என்றது, தன்னிய-ல்பும், பரனியல்பும், பயனின் இயல்பும் ஆகிய நல்லறிவு இல்லாமையாலே, தன் அடிமைக்குப் பொருந்திய ஆண்டான் முகமலர்த்திக்குறுப்பாக தொண்டாற்றுகையாகிற பயனை இழந்தோமென்கிற துன்பந்தானுமின்றிக்கே என்கை.

ஸம்ஸாரமாகிற பெருங்கடலிலே விழுந்து நோவுபட - என்றது; "ஸம்ஸார ஸாகரம் கோரம் அநந்தக்-லேச பாஜநம்". ஸம்ஸார ஸாகரம் - ஸம்ஸாரமாகிற பெருங்கடல், கோரம் - பயத்துக்குரிய கோரமாய், அநந்தக்-லேச - எல்லை காண்பரிய துன்பத்துக்கு, பாஜநம் -

இருப்பிடம் என்கிறபடியே, அளவிட முடியாத துன்பத்துக்கிருப்பிடமாய், யாவராலும் தன் முயற்சியால் கரைகாண அரிதாம்படி இருக்கிற பிறவிப் பெருங்கடலிலே விழுந்து தன்னால் நேரும் துன்பங்களால் தபிக்கப்படுவதும், பிறஉயிர்களால் வரும் துன்பங்களால் தபிக்கப்படுவதும், தெய்வீகமாக வரும் துன்பங்களால் தபிக்கப்படுவதுமாகிய தாபத்ரயங்களால் (மூன்று தாபங்களால்) வருந்துவார்கள் என்கை. இத்தால் தங்களையும், ஈச்வரனையும் அறியாமை-யாலும், ப்ரயோஜநத்தை அறியாமையாலும், ஸம்ஸார ஸமுத்திரத்துக்குள்ளே கிடந்து நோவுபடாநிற்கிற விரோதி-யான ஸம்ஸாரந்தன்னையும், அத்தைக் கடத்தற்கு மார்க-மறியாமையாலும், அறிய வேண்டியதான தன்னியல்பு பரனியல்பு, உபாயத்தினியல்பு, பயனியல்பு, விரோதியினி-யல்புகளாகிய (அர்த்த பஞ்சகஜ் ஞாநத்தில்) ஐந்து பொருள்-களைப்பற்றி அறிவதில் ஒன்றையும் அறியாதவர்களாய்க் கிடந்தார்களென்கை. "ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோரூபம்" என்ற சான்றுகளின்படி ஸகல சாஸ்த்திரங்களும் இந்த அர்த்த பஞ்சகத்தை அன்றோ சொல்வது. இவ்வர்த்தங்களை இவர்களுக்குத் தெளிய அறிவிக்கைக்காக அனைத்து சாஸ்த்ர சுருக்கமான திருமந்த்ரத்தை ஸர்வேச்வரன் வெளியிட்ட விதத்தைச் சொல்லுகிறது மேல், "ஸர்வேச்வரன் தன் க்ருபையாலே" என்றது, "ஈசேசிதவ்யஸம்பந்தாத் அநிதம்ப்ரதமாதபி:" (இப்பொழுது உண்டாயிற்றென் பதின்றி அநாதியான ரக்ஷகன், ரக்ஷ்யன் என்ற ஸம்பந்தம்) என்கிறபடியே காலாரம்பம் அறிய முடியாதபடி அநாதியாக அனைவரோடும் உண்டான உடையவன் உடைமை என்ற ஸம்பந்தத்தை உடையவனான எம்பெருமான்.

"ஏவம் ஸம்ஸ்ருதி சக்ரஸ்தே ப்ராம்யமாணே ஸ்வகர்மபி: ஜீவேதுःகாகுலே விஷ்ணோ: க்ருபாகாப்யு-பஜாயதே"

ஏவம் - இவ்விதமாக, ஸம்ஸ்ருதி சக்ரஸ்தே - ஸம்ஸாரமாகிற சக்கரத்திலிருந்து கொண்டு, ஸ்வகர்மபி : ப்ராம்யமாணே - தன்னுடைய கர்மங்களால் சுழன்று, துக்கா குலே - துக்கத்தினாற் கலங்கின. ஜீவே - ஜீவனிடத்தில்.

விஷ்ணோ : - விஷ்ணுவுக்கு. காபி - சொல்ல முடியாத, க்ருபா - உபஜாயதே - கருணையானது உண்டாகிறது. என்கிறபடியே, எம்பெருமான் இவர்கள் படுகிற துன்பத்தைக் காண்பது மாத்திரத்தாலுண்டான தன் காரணமில்லாத கருணையாலே என்கை.

இவர்கள் தன்னையறிந்து கரைமரஞ்சேரும் படி என்றது - இப்படி ஸம்ஸார ஸாகரத்திலே கிடந்து நோவுபடுகிற இவர்கள் "த்வாமேவ சரணம் ப்ராப்ய நிஸ்தரந்திமநீஷிண :"

மநீஷண:- புத்திமான்கள், த்வாம்ஏவ - தேவரீரையே, சரணம் - உபாயமாக, ப்ராப்ய - அடைந்து, நிஸ்தரந்தி - கடக்கிறார்கள். என்றும்,

"ஸம்ஸாரார்ணவ மக்நாநாம் விஷயாக்ராந்த சேதஸாம் விஷ்ணுபோதம் விநாநாந்யத்கிஞ்சி தஸ்திபராயணம்". ஸம்ஸார அர்ணவ - ஸம்ஸாரமாகிற ஸமுத்திரத்திலே. மக்நாநாம் - முழுகி. விஷய ஆக்ராந்த சேதஸாம் - ஸப்தாதி விஷயங்களாலே ஆக்ரமிக்கப்பட்ட மநஸ்ஸை உடையவர்களுக்கு, விஷ்ணுபோதம்விநா - ஸர்வவ்யாபகனான ஸர்வேச்வரனாகிற தெப்பத்தைத் தவிர. அந்யத் கிஞ்சித் - மற்று எதுவும், பராயணம் - முக்கியமான ஆச்ரயமாக, நாஸ்தி - இல்லை. என்றும் சொல்லுகிறபடியே, ஸம்ஸாரமாகிற கடலைத் தாண்டுவதற்கு உபாயமான தன்னை அறிந்து, அந்த ஸம்ஸார கடலைக் கடந்து அக்கரைப்படும்படி என்கை. தானே சிஷ்யனுமாய் ஆசார்யனுமாய் நின்று என்றது, நரநாரணனாயுலகத்தறநூல் சிங்காமை விரித்தவன் என்கிறபடியே, நரநாராயண ரூபத்தால் அவதரித்து நரனான தான் சிஷ்யனுமாய், நாராயணனான தான் ஆசார்யனுமாய் நின்று என்கை.

திருமந்திரத்தை வெளியிட்டருளினான் என்றது, ஸகல சாஸ்திர சுருக்கமாய், அந்த சாஸ்திர தாத்பர்யமான அர்த்த பஞ்சகத்தை தெளிவாகச் சொல்லாநிற்கும் திருமந்திரத்தை வெளியிட்டருளினானென்கை. அருளிச் செய்தானென்னாதே வெளியிட்டருளினானென்றது, இப்போது, தான்

ஒன்றை நிர்மித்துச் சொன்னானல்லன், ஏற்கனவே அநாதியாயுள்ளதொன்றை வெளிப்படுத்தினானென்னுமிடமும், மிக்க ரஹஸ்யமாகையால் மறைந்திருந்ததை இவர்கள் துர்க்கதிகண்டு பொறுக்க மாட்டாதே வெளிக் கொணர்ந்தானென்னுமிடமும் தோற்றுகைக்காக என்கிறார்.

தோற்றுவாய்: ஆனால், ஆசார்யனாய் நின்று வெளியிட்டமை போதாவோ? சிஷ்யனாய் நின்றது எதற்காக? என்ன : அருளிச் செய்கிறார்.

**மூ. சூ. 6 . : சிஷ்யனாய் நின்றது, சிஷ்யனிருக்குமிருப்பு நாட்டாரறியாமையாலே அத்தை அறிவிக்கைக்காக.**

விரிவுரை : அதாவது, ஆசார்யனாய் நின்று வெளியிட்டருளின அளவன்றிக்கே தானே சிஷ்யனுமாய்க் கொண்டு நின்றது, "ஆஸ்திகோ தர்மசீலச்சசீலவாந் வைஷ்ணவச்சுசி : கம்பீரச்சதுரோ தீரச் சிஷ்ய இத்யபிதீயதே " ஆஸ்திக : சாஸ்திரத்தில் நம்பிக்கை உள்ளவனும், தர்மசீலச்ச - நல்வினைகளில் ஈடுபாடுடையவனும், சீலவாந் - நல்வினைகளை மேற்கொண்டொழுகுபவனும், வைஷ்ணவ:- விஷ்ணுவிடத்தில் பக்தியுடையவனும், விஷ்ணுவையே ஆறும் பேறுமாகப் பற்றினவனும். சுசி :- தற்பெருமையில்லாதவனும், கம்பீர: ஆசார்யனிடத்தில் ஆழ்ந்த பக்தியுள்ளவனும், சதுர: (ஆசார்ய முகமலர்த்திக்குறுப்பான கைங்கர்யத்தில்) சாதுர்யமுடையவனும், தீர :- (சிரமப்பட்டு செய்யக்கூடிய ஆசார்ய கைங்கர்யத்தில்)மனோதைர்யமுடைய. இத்யபிதீயதே - சிஷ்யனென்று சொல்லுதற்குரிய லக்ஷணமென்பதாகும். "சரீரம் வஸுவிஜ்ஞாநம் வாஸ : கர்மகுணான ஸுிந் குர்வர்த்தம் தாரயேத் யஸ்து ஸ சிஷ்யோ நேதர: ஸ்ம்ருத :" சரீரம் - உடலையும், வஸு - பொருளையும், விஜ்ஞாநம் - அறிவையும், வாஸ : வஸிக்குமிடத்தையும். கர்ம- செயலையும், குணாந் - குணங்களையும், அஸுந் - ப்ராணன்களையும், குர்வர்த்தம் - குருவின் நிமித்தமாகவே, ய : - எவன், தாரயேத் - தரிக்கிறானோ, ச : சிஷ்ய - அவனே சிஷ்யன் என்னத் தக்கவன், இதர:-

வேறுவகையாக இருப்பவன், ந ஸ்ம்ருத:- சிஷ்யனென்று சொல்லத்தகாதவன்.

"ஸத்புத்திஸ்ஸாது ஸேவீ ஸமுசித சரிதஸ்தத்வ போதா பிலாஷீ சுச்ருஷிஸ்த்யக்தமாந : ப்ரணிபத நபர : ப்ரச்ந கால ப்ரதீக்ஷ: சாந்தோ தாந்தோ S நஸூயு : சரணமுபகதச் சாஸ்த்ர விச்வாஸ சாலீ சிஷ்ய : ப்ராப்த : பரீக்ஷாம் க்ருதவிதபி மதஸ்தத்வதஸ் சிக்ஷணீய :"

ஸத்புத்தி:- விடுகை பற்றுகை முதலானவைகளை அறியும் நற்புத்தியையுடையவனும், ஸாது ஸேவீ - அதற்கடியாகப் பெரியோர்களை (அநுவர்த்திப்பவனும்) அடி-பணிபவனும். ஸமுசித சரித : ஜ்ஞாநத்துக்கேற்ற ஒழுக்கமு-டையவனும். தத்வபோதாபிலாஷீ - முத்தத்துவங்களுடைய உண்மையறிவதில் ஆசையுடையவனும். சுச்ருஷு:- ஆசர்ய-னுக்குத் தொண்டு செய்வதில் இச்சை உடையவனும். த்யக்தமாந : - அதற்கு விரோதியான அஹங்காரத்தை விட்ட-வனும், ப்ரணிபத ந பர:- ஆசார்யனிடத்து நமஸ்காராதி-களைச் செய்பவனும். ஸாந்த :- மனம் முதலான அகக்கரண-ங்களை அடக்குபவனும். தாந்த :- புறக்கரணங்களை அடக்கு-பவனும். அநஸூயு : ஆசர்யனிடத்து பொறாமையில்லாத-வனும். சரணம் உபகத :- ஆசார்யன் திருமாளிகையில் காத்திருப்பவனும். சாஸ்திர விச்வாஸ சாலீ - சாஸ்திரங்-களில் விச்வாஸமுடையவனுமான. சிஷ்ய : சிஷ்யன் - பரீ-க்ஷாம் ப்ராப்த:- உபதேசிக்கப்பரிக்ஷை செய்யப்பட்டு, க்ருதவித் அபிமத :- (ஆசார்யன் செய்த) உபகாரத்தை மறவாத பெரியோர்களாலே (இவன் உபதேசிக்கத்தக்க-வனென்ற அங்கீகரிக்கப்பெற்றவனாய்க் கொண்டு. தத்வத : உண்மையாக "சிக்ஷணீய :- (சிக்ஷைக்குத்தக்கவன்) ஞானோ-பதேசத்திற்குதகுதியானவன் என்று, இவை முதலானவைகளிற் சொல்லுகிறபடிகளும், ஆசார்ய (அநுவர்த்தநமாகிற)அடிமை செய்தலாகிற பயனுக்குப் புறம்பானவையானவேறுபயனில் விருப்பத்தைத் தவிர்க்கையும், ஆசார்ய உகப்புக்குப்பாத்ர-மான பலனுக்குச் சாதநமான ஆசார்யத் தொண்டும், ஆர்த்தியும், விருப்பமும், பொறாமையில்லாதவனாயிருக்கை-யாகிற சிஷ்ய லக்ஷணம் உலகத்தவர்க்குத் தெரியமையாலே

அதைத்தன் ஒழுக்கத்தால் காட்டுகைக்காக சிஷ்யனாய் நின்றது என்கிறார். ஆசாரியனாய் சொல்லுமளவில் தன் மேன்மை தேடிக் கொள்கிறானென்று நினைக்கவும் கூடும். ஒழுகிக் காட்டுமளவில் இது நமக்கும் வேண்டுமென்று உலகோர் கைக் கொள்வதற்கு ஏதுவாயிருக்கும்.

தோற்றுவாய் : இப்படி சிஷ்யனாய் நின்று இந்த மந்த்ர சிக்ஷை பண்ணி இதன்மூலமாக ஜ்ஞாநம் பிறக்க வேணுமோ? "ஞாநக் கலைகள்" என்கிறபடியே, ஸகல சாஸ்த்ரங்களும் ஜ்ஞாந சாதநமாயன்றோ இருப்பது. அவற்றைப் பயின்று அவ்வழியாலே ஜ்ஞாநம் பிறந்தாலோ? என்ன, சாஸ்திரப் பயிற்சியால் பிறக்கும் ஜ்ஞாநத்துக்கும், இந்த திருமந்த்ர உபதேச மூலமாக பிறக்கும் ஜ்ஞாநத்துக்கும் உண்டான வேற்றுமையை உதாரண முகத்தாலே காட்டுகிறார்.

**மூ. சூ. 7. ஸகல சாஸ்த்ரங்களாலும் பிறக்கும் ஜ்ஞாநம் ஸ்வயமார்ஜிதம்போலே; திருமந்த்ரத்தால் பிறக்கும் ஜ்ஞாநம் பைத்ருகதநம் போலே.**

விரிவுரை : அதாவது, தத்வஜ்ஞாநமாம் மெய்யுணர்வை விளக்குமதான வேதங்கள் அறநூல்கள் இவை முதலான அனைத்து சாஸ்திரங்களாலும் உண்டாகும் ஜ்ஞானம் தானே முயன்று வருந்திச் சம்பாதிக்கும் திரவியம் போன்று மிகச் சிரமப்பட்டும் பெறுவதும் பெறாதிருப்பதும் போலுமாயிருக்கும். ஆசார்ய உபதேசம் மூலமாக திருமந்த்ரத்தால் உண்டாகும் ஜ்ஞாநம் பிதாசேமித்துவைத்த திரவியத்தை பிறந்த உரிமைதானே காரணமாகத் தான் பெறும் திரவியம் போலும் எளிதில் பெறலாமாயிருக்கும் என்கிறார். " சாஸ்த்ரஜ்ஞாநம் பஹு¬க்லேசம் புத்தேச்சலநகாரணம், உபதேசாத்ஹரிம் புத்தவா விரமேத்ஸர்வகர்மஸு¬." சாஸ்த்ரஜ்ஞாநம் - சாஸ்த்ர நூல்களைப் படித்துப் பெறும் மெய்யுணர்வு, பஹு¬க்லேசம் - மிகச் சிரமமுடைத்தாயிருக்கும். புத்தே : - புத்திக்கு, சலந காரணம் - கலக்கத்தை உண்டாக்குமாதயிருக்கும். (ஆகையாலே) உபதேசாத் - உபதேசத்தாலே. ஹரிம்புத்வா - ஈச்வரனை (உபாயமாக) அறிந்து, ஸர்வகர்மஸு¬ - உபாயாந்த்ரமாகிற எல்லாக் கர்மங்களிலிருந்தும்,

விரமேத் - ஒழியக்கடவன். இத்தால் சாஸ்திரங்களிற் காட்டில் இவைகளின் ஸாரமான திருமந்த்ரத்தின் ஏற்றஞ் சொல்லிற்றாம் என்பது.

தோற்றுவாய் : சாஸ்திரங்களின் நிலையிதுவானால் மற்றுமுண்டான பகவந்மந்த்ரங்கள் மெய்யுணர்வை பிறப்பிக்காதோ? என்ற கேள்வியிலே மற்ற மந்த்ரங்களிற் காட்டில் இந்த மந்த்ரத்துக்குண்டான ஏற்றத்தை அருளிச் செய்வதாகத் திருவுள்ளம் பற்றி,

## மு • சூ • 8 • பகவந்மந்தரங்கள் தான் அநேகங்கள் •

விரிவுரை : பகவந்மந்தரங்கள்தான் அநேகங்கள் என்கிறார். அதாவது,

"ஆஸ்தாந்தே குணராசிவத் குணபரீவாஹாத்மநாம் ஜந்மநாம் ஸங்க்யா"

குணராசிவத் - (உமது - ஜ்ஞாநம் சக்தி முதலிய) குணங்கட்கு (எல்லையில்லாமை) போலவே. குணபரிவாஹ ஆத்மநாம் (தயை, வாத்ஸல்யம் முதலிய) குணங்களுடைய பிரவாஹ ரூபங்களான (தேவரீரது தயாதி குணங்களைப் பிரகாசப்படு த்துவதான). ஜந்மநாம் - பிறவிகளுடைய, ஸங்க்யா - எண்ணிக்கையானது. ஆஸ்தாம்- (எல்லையில்லாத தாக) இருக்கும்.

"பஹவோந்ருப கல்யாண குணா: புத்ரஸ்ய ஸந்திதே. " ந்ருப :- ராஜாவே!, தே - உன்னுடைய. புத்ரஸ்ய - பிள்ளைக்கு. பஹவ : கல்யாணகுணா : - பலவான கல்யாண குணங்கள், ஸந்தி - இருக்கின்றன.

"தவாநந்த குணஸ்யாபிஷடேவப்ரதமே குணா:" அநந்த குணஸ்யா அபி - எல்லையில்லாத குணங்களையுடையவனாக இருந்தாலும். தவ - உனக்கு. ஷட்குணா: ஏவ- ஆறுகுணங்களே. ப்ரதமே- முதன்மையானவை.

"பஹூநிமேவ்யதீ தாநி ஜந்மாநி தவ சார்ஜூந "

அர்ஜுந - அர்ஜுநனே. மே - எனக்கு, பஹூநி - அளவிறந்த, ஜந்மாநி - ஜந்மங்கள், வ்யதீதாநி - கடந்து போயின. தவ ச - உனக்கும் அப்படியே, "எண்ணில் தொல் புகழ்" (எண்ணிக்கையில்லாத குணங்கள்) "எந்நின்ற யோநியு-மாய் பிறந்தாய்" (எல்லாவித பிறப்புக்களும் பிறந்தாய்) என்றும் இவை முதலானவைகளில் சொல்லுகிறபடியே, பகவத் குணங்களும் - குணங்களுக்குப் போக்கு வீடான அவதாரங்களும் எல்லையில்லாதனவாயிருக்குமாப்போலே இவைகளைச் சொல்லும் மந்த்ர விசேஷங்களும்,

"அநந்தாவை பகவந் மந்த்ரா:" (பகவன் மந்த்ரங்கள் எல்லையில்லாதன) என்கிறபடியே அநேகங்களாயிருக்கு மென்கை.

தோற்றுவாய் : அவை எல்லாம் ஒரே வர்க்கத்தில் சேர்ந்ததோ என்ன?

**மு - சூ - 9. அவைதான், வ்யாபகங்களென்றும் அவ்யாபகங்களென்றும் இரண்டு வர்க்கம் -**

விரிவுரை : அதாவது, எல்லா இடத்திலும் உள்ளும் புறமும் பரவி வ்யாபித்திருக்கும் பகவத் ஸ்வரூபத்தைச் சொல்லுகையால் வ்யாபகங்களென்றும், பகவதவதாரமான, குணம் செயல்கள் இவைகளில் ஒவ்வொன்றைச் சொல்லுகை-யாலே அவ்யாபகங்களென்றும் இரண்டு வர்க்கமாயிருக்கும் என்கை.

தோற்றுவாய் : இருவர்க்கங்களும் ஒத்திருக்குமோ-யென்னில்?

**மு - சூ -10- அவ்யாபகங்களில் வ்யாபகங்கள் மூன்றும் ச்ரேஷ்டங்கள் -**

விரிவுரை : அதாவது, அவ்யாபகங்களாயிருந்துள்ள எல்லா மந்த்ரங்களிலும் "நாராயணாய வித்மஹே, வாஸுதேவாய தீமஹி, தந்நோவிஷ்ணு : ப்ரசோதயாத்" என்றும் விஷ்ணு காயத்ரியில் ஓதப்படுகிற வ்யாபகங்கள் மூன்றும்

சிறந்தவைகளாயிருக்குமென்கை. இந்த விஷ்ணு காயத்ரியிலே நாராயண வாசுதேவ விஷ்ணு சப்தங்கள், அந்த மூன்று மந்த்ரங்களுக்கும் ப்ரதானமான மூன்று நாமங்கள் ஆகையாலே, பொதுவில் ப்ரணவ - நமஸ்ஸுக்களோடே கூடின மூன்று மந்த்ரங்களுக்கும் (உபலக்ஷணமாக) விடுபட்டதைக் கூட்டிச் சொல்லக் கடவது.

தோற்றுவாய் : இந்த மூன்று வ்யாபக மந்த்ரங்களும் தம்முள் ஒக்குமோ என்ன? அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 11. இவை மூன்றிலும் வைத்துக் கொண்டு பெரிய திருமந்த்ரம் ப்ரதாநம்.**

விரிவுரை : அதாவது, அவ்யாபகங்களில் காட்டில் சிறந்ததாயிருந்துள்ள இந்த வ்யாபக மந்த்ரங்கள் மூன்றையும் வைத்துப் பார்க்கும்போது. "நாராயணாய வித்மஹே" என்று தைத்-நாரணவல்லி உபநிஷத்தில் முதலில் இந்த நாராயண மந்த்ரதை ஓதுவதாலும், முழுமையான அர்த்தங்களை உடையதாகையாலும், "நாஸ்தி சாஷ்டாக்ஷராத்பர:" (பலமந்திரங்களில் அஷ்டாக்ஷரமந்த்ரமான நாராயண மந்திரத்தைக் காட்டிலும் மேலானதில்லை) என்னும்படியான பெருமையுடையதாகையாலே பெரிய திருமந்த்ரம் முதன்மையாக இருக்கும் என்கை.

**மூ . சூ . 12. மற்றையவை இரண்டுக்கும் அசிஷ்ட பரிக்ரஹமும், அபூர்த்தியுமுண்டு .**

விரிவுரை : அதாவது, வாஸுதேவ விஷ்ணு சப்தங்களான மற்ற வ்யாபக மந்த்ரங்களிரண்டுக்கும் நாராயண சப்தம் போலே (ஸ்வரூபம்) இயற்கை வடிவம், உருவம் (ரூபம்), குணம் முதலானவைகளெல்லாம் சொல்லாதே ஸ்வரூப மாத்திரத்தைச் சொல்லுகையாலே யாதொரு லக்ஷணமுமின்றி "ஜ்ஞாந மாத்ரமாயிருப்பது ப்ரஹ்மம்" என்று வேதாந்தங்களுக்குப் பொருந்தாத வேற்றுப்பொருள் கொள்ளுகிற குத்ருஷ்டிகள் மிகவும் விரும்பிக் கொள்ளுகையாகிற சிஷ்டரல்லாதார் ஏற்பதாலும், வ்யாபிக்கப்பட்ட

பொருள்கள் இன்னது என்று சொல்லாமையாலும், இதற்காக 'ஸர்வம்' என்ற சொல்லை இசை எச்சமாகக் கொள்ள வேண்டியிருத்தலாலும், வாஸுதேவ மந்திரம் முற்றுஞ்-சொல்லாமையாகிற அபூர்த்தியும், மாயாவாதிகள் ஆதரிப்ப-தாகிய அசிஷ்டர் கொள்ளுகையாகியற குறைபாடும் உண்டு. "ஓம் நமோ விஷ்ணவே" என்ற ஆறு எழுத்துக்களாலாய இம்மந்திரம் : வ்யாப்தி என்ற இம்மாத்திரமே சொல்லி, வ்யாபிக்கப்படும் பொருள்களைச் சொல்லாமை, இன்னபடி வ்யாபித்திருக்கிறான் என்று சொல்லாமை, வ்யாபித்திருப்-பவன் குணங்களைச் சொல்லாமை, வ்யாபித்தலால் வரும் பலத்தையும் சொல்லாமையாகிற குறைபாடுகளும், அதோடு இதுவும் அசிஷ்டர் விரும்புவதாகிய குறைபாடும் உண்டு.

இன்னமும், வாஸுதேவ மந்த்ரம் : "ஸர்வத்ர வஸதி இதி வாஸுதேவ :" என்று வ்யாபிக்கும் ப்ரகாரம் "வஸதி" என்று சொல்லியதால் எந்தப் பொருளில் வஸிக்கிறான் என்பது சொல்லாமை. இதற்கு "எங்கும்" என்ற அர்த்தம் தோன்ற "ஸர்வம்" என்ற இசை எச்சம் கூட்டிக் கொண்டாலும் வ்யாபகனுடைய குணம் சொல்லாமையால் இந்த குணத்துக்காக "ஓம் நமோபகவதே வாஸுதேவாய" என்று பகவச் சப்தம் கூட்டிக் கொள்ள வேண்டுகையாலும் வ்யாபித்தலின் பலஞ் சொல்லாமையாலும் திருத்வாதசாக்ஷர மந்த்ரமும், குறைபாடுகளுடையதேயாம். இந்த நாராயண மந்த்ரமாகிற அஷ்டாக்ஷரி வ்யாபகத்தைச் சொல்லி, வ்யாபிக்கப்படும் பொருள்களைச் சொல்லி, வ்யாபிக்கும் விதம் சொல்லி, வ்யாபித்தலின் பலன் சொல்லி, வ்யாபிக்கின்றவன் குணங்களைச் சொல்லி, இவைகளை எல்லாம் சப்த்தாலே சொல்லியிருக்கையாலே இதற்கு அர்த்த பூர்த்தியின் காரணமான ஆதிக்யம் உண்டு என்று, மற்ற வ்யாபக மந்த்ரங்களிரண்டினுடைய குறைபாடாம் அபூர்த்தியையும் திருமந்த்ரமாம் நாராயண மந்திரத்தினுடைய பூர்த்தியையும் தெளிய பெரியவாச்சான் பிள்ளைப் பரந்த ரஹஸ்யத்தில் காட்டியருளினார் என்கை.

தோற்றுவாய் : மற்ற வ்யாபக மந்திரங்கள் மாயாவாதி அத்வைத மதங்கள்ாம் குத்ருஷ்டிகள்

விரும்பும் குறைபாடு, விசிஷ்டாத்வைதிகளாம் சிஷ்டர்கள் விரும்புவதாகிய மேம்பாடு உண்டோ? இந்த நாராயண மந்த்ரத்துக்கு என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 13. இத்தை வேதங்களும், ருஷிகளும், ஆழ்வார்களும், ஆசார்யர்களும் விரும்பினார்கள்.**

விரிவுரை : அதாவது, விஷ்ணு காயத்ரியிலே வ்யாபகமந்த்ரம் மூன்றைஞ்சொல்லும் போது முதற்கண் நாராயண சப்தத்தை ப்ரதாநமாகச் சொல்லுகையாலும், "விச்வம் நாராயணம்" என்று தொடங்கி "நாராயண பரம்ப்ரஹ்ம தத்வம் நாராயண: பர: நாராயண பரோஜ்யோதி: ஆத்மா நாராயண: பர: யச்ச கிஞ்சித் ஜகத்யஸ்மின் த்ருச்யதே ச்ரூயதே பிவா, அந்தர் பஹிச்ச தத்ஸர்வம் வ்யாப்ய நாராயணஸ் ஸ்தித:" என்று ஸகல வேதாந்த ஸாரமான நாராயண அநுவாகத்திலும்,

விச்வம்நாராயணம்- அனைத்துச் சேதந அசேதநகங்களுக்கும் ஆத்மாவானவன் நாராயணன் என்றும்,

நாராயணபரம்ப்ரஹ்ம- பரப்ரஹ்மமும் நாராயணனே. தத்வம் நாராயண:பர:-பரதத்துவமும் நாராயணனே ஆத்மா நாராயண: பர: - பரமாத்வாவும் நாராயணனே, அஸ்மிந் ஜகதி - இந்த உலகத்திலே. யச்சகிஞ்சித் - யாதானுமொன்று, த்ருச்யதே- காணப்படுகிறதோ, ச்ரூயதேபிவா - கேட்கப் படுகிறதோ, தத்ஸர்வம் - அந்த வஸ்துக்கள் எல்லாவற்றினுடையவும். அந்த :- உள்ளும், பஹிச்ச - புறமும், வ்யாப்ய - நிறைந்து, நாராயண : ஸ்தித : - நாராயணன் இருக்கிறான்.

"ஏகோஹவை நாராயண ஆஸீத் நப்ரஹ்மா
நேசாந : நேமே த்யாவாப்ருதிவீ"

மஹாப்ரளயத்தில், ஏகோஹவைநாராயண:- நாராயணன் ஒருவன் மாத்திரமன்றோ, ஆஸீத் - இருந்தான், ப்ரஹ்மா - ப்ரம்மாவும், ந - இல்லை, ஈசாந : - சிவனும், ந - இல்லை, இமே - இந்த, த்யாவாப்ருதிவீ - ஆகாசமும் பூமியும்,

ந - இல்லை, "சக்ஷுஸ்ச த்ரஷ்டவ்யஞ்ச நாராயண: ச்ரோத்ரஞ்ச ச்ரோதவ்யஞ்ச நாராயண :"

சக்ஷுச் ச - பார்க்கிற கண்களும், த்ரஷ்டவ்யஞ்ச - பார்க்கப்படும் பொருள்களும், நாராயண :- நாராயணனே, ச்ரோத்ரஞ் ச - கேட்கிற செவிகளும், ச்ரோதவ்யஞ்ச - கேட்கப்படும் சப்தமும், நாராயண :- - நாராயணனே.

"திசச்ச ப்ரதி சச்ச நாராயண :"

(திக்குகளும் மூலை திக்குகளும் நாராயணனே) என்று முடிவாக, நடுவுடைய ஸுபாலோப நிஷத்திலும்,

"யஸ்யாத்மா சரீரம் யஸ்ய ப்ருதிவீ சரீரம்" (யஸ்ய - எவனுக்கு, ஆத்மா சரீரம் - ஆத்மா சரீரமாக இருக்கிறதோ, யஸ்ய - எவனுக்கு, ப்ருதிவீ சரீரம் - பூமியானது சரீரமாக இருக்கிறதோ, யஸ்ய - எவனுக்கு, ம்ருத்யுச்சரீரம் - ம்ருத்யுவானவன் சரீரமாக இருக்கிறோனோ, என்பதிறாக நடுவுள்ள இடங்கள் தோறும்.

"ஏஷஸர்வ பூதாந்தராத்மா அபஹதபாப்மாதிவ்யோ தேவ ஏகோ நாராயண :"

ஏஷ : இவன், ஸர்வபூதஅந்தராத்மா - எல்லா ஆத்மாக்களுக்கும் அந்தராத்மாவாயும், அபஹதபாப்மா - அவற்றின் தோஷம் தீண்டாதவனாயும், திவ்ய: பரமபதநிலயனாயும், தேவ :- உபயவிபூதிக்கும் நாதனாயும், ஏக : நிகரற்றவனாயும் உள்ள, நாராயண :- நாராயணன். என்று, அந்தர்யாமி ப்ராஹ்மணத்திலும், வாஸுதேவ விஷ்ணு சப்தங்களை அநாதரித்து நாராயண சப்தத்தையிட்டு பகவத் ஸ்வரூபாதிகளை நிர்தேசிக்கையாலும், அபௌருஷேயமாய், நித்யநிர்தோஷமாய், தனக்குத்தானே ப்ரமாணங்களான வேதங்களும் விரும்பின.

"யதா ஸர்வேஷு தேவேஷு நாஸ்தி நாராயணாத்பர :
ததா ஸர்வேஷு மந்த்ரேஷு நாஸ்தி சாஷ்டாக்ஷ ராத்பர :"

யதாஸர்வேஷு தேவேஷு - எப்படி எல்லாத் தேவர்களிலும், நாராயணாத்பர: நாராயணனைக் காட்டிலும் உயர்ந்தவர்களும் ஒத்தவர்களும், நாஸ்தி - இல்லையோ, ததாஸர்வேஷு மந்த்ரேஷு- அப்படியே எல்லா மந்த்ரங்களிலும், நாஸ்திசாஷ்டாக்ஷராத்பர:- அஷ்டாக்ஷர மந்த்ரத்தோடு மிக்கதும் ஒத்ததுமில்லை.

"பூத்வோர்த்வ பாஹுரத்யாத்ர ஸத்ய பூர்வம் ப்ரவீமிவ:
ஹேபுத்ர சிஷ்யா : ஸ்ருணுத நமந்த்ரோஷ்டா க்ஷராத்பர :"

ஹேபுத்ரசிஷ்யா : ஏபுத்ரர்களே சிஷ்யர்களே, அத்ர - இவ்விடத்தில், ஊர்த்வ பாஹு : பூத்வா - உயரத்தூக்கின கையை உடையவனாய். அத்ய - இப்பொழுது. ஸத்யபூர்வம் - சபத பூர்வகமாக, வ :- உங்களுக்கு, ப்ரவீமி - சொல்லுகிறேன். (யூயம்)ஸ்ருணுத - நீங்கள் கேளுங்கள். பர :- மேலான, அஷ்டாக்ஷர மந்த்ர : - எட்டெழுத்து மந்த்ரமானது ந - இல்லை.

"ஸர்வவேதாந்த ஸாரார்த்தஸ் ஸம்ஸாரார்ணவ தாரக :
கதிரஷ்டாக்ஷரோ ந்ருணாம் அபுநர்ப்பவகாங்க்ஷிணாம்".

ஸர்வவேதாந்தஸாரார்த்த:- அனைத்து வேதங்களினுடைய ஸாரமான அர்த்ததைச் சொல்லுவதும். ஸம்ஸாரார்ணவதாரக:- ஸம்ஸாரமாகிற கடலைக் கடத்துவதுமான. அஷ்டாக்ஷர:- திருவஷ்டாக்ஷர மந்திரமானது. அபுநர்ப்பவகாங்க்ஷிணாம்- மீண்டும் பிறவாமலிருக்கும்படி விரும்பும் முமுக்ஷுக்களான, ந்ருணாம் - மனிதர்களுக்கு, கதி : புகலாகும்.

"ஆர்த்தா விஷண்ணாஸ் சிதிலாச்ச பீதா : கோரேக்ஷுச வ்யாதிஷு வர்த்த மாநா : ஸங்கீர்த்ய நாராயண சப்தமாத்ரம் விமுக்த து:காஸ் ஸுகிநோ பவந்தி".

ஆர்த்தா : ஐச்வர்யம்நஷ்ட மடைந்தவரும், விஷண்ணா :- நூதநமாகசெல்வத்தை விரும்புபவரும். ஸிதிலா:- மனோ வியாதிகளையுடையவரும். பீதா :- சத்ருக்களிடத்தில் பயப்பட்டவர்களும். கோரேஷுசவ்யாதிஷு வர்த்தமாநா : கொடிய வியாதிகளினால் பீடிக்கப்பட்டவர்களும். நாராயண சப்த மாத்ரம் - திருமந்த்ரத்தை.

**ஸங்கீர்த்ய** - ச்ரத்தையோடு அநுஸந்தித்து. **விமுக்தது:கா :** - செல்வநாசம் முதலியவற்றாலுண்டாகும் துக்கத்தினின்றும் விடுபட்டவர்களாய், **ஸுகிந :** (செல்வம் முதலிய ஊதியத்திலுண்டான) ஸுகத்தை உடையவர்களாய் **பவந்தி** - ஆகிறார்கள். **உள்ளுறை பொருள் : ஆர்த்தா :** கைங்கர்யம் நழுவுதலைப்பொறுக்க மாட்டாதவர்களாய், **விஷண்ணா :** தற்காப்பின் தொடர்பைப் பொறாதவர்களாய். **சிதிலா :** (தேவதாந்தரங்கட்கு அடிமைப்படும் நிலை வந்த போது) மனம் இடிந்து போகும்படியானவர்களாய். **பீதா :** சுதந்திரத்திற்கு அஞ்சினவர்களும். **கோரேஷு**-தம் முயற்சியால் போக்க அரியதான. **வ்யாதிஷு**- தேஹாத்மாபிமானம், விஷய சபலம் ஆகியவற்றிலே. **வர்த்தமாநா :**- இருப்பவர்களும். **நாராயணசப்தமாத்ரம் ஸங்கீர்த்ய** - நாராயண சப்தத்தை மாத்ரம் சொன்னவர்கள். **விமுக்தது:கா:** கைங்கர்யத் தடை முதலியவற்றால் வரக்கடவ துன்பம் அடியோடு நீங்கப் பெற்றவர்களாய். **ஸுகிந:**- நித்ய கைங்கர்யத்தால் ஆநந்த பரிபூர்ணராய், **பவந்தி**- ஸ்வரூபத்தை உடையவர்களாவார்.

"நாராயணேதி சப்தோஸ்திவாகஸ்தி வசவர்த்திநீ
ததாபி நரகே கோரே பதந்தீதி கிமத்புதம்"

நாராயண இதி - நாராயணனென்கிற **சப்த : அஸ்தி** - சப்தம் இருக்கிறது. **வசவர்த்திநீ** - (அத்தைச் சொல்லுகைக்கு) ஸ்வாதீநமான **வாக்** - வாகிந்த்ரியம்.**அஸ்தி** - இருக்கிறது, **ததாபி** - அப்படி இருக்கச் செய்தேயும் **கோரேநரகே** - கோரமாந நரகத்தில், **பதந்தி** - விழுகிறார்கள். **இதிகிம்** - இது என்? (என்று சித்திரகுப்தன் யமனைக்கேட்க, யமனும் தனக்குக் காரணம் தெரியாமல்) **அற்புதம்** - இதுவும் ஓர் ஆச்சரியம் என்கிறான்.

"கிம்தத்ரபஹுபிர்மந்த்ரை: கிம்தத்ர பஹுபிர்வ்ரதை : நமோ நாராயணாயேதி மந்த்ரஸ் ஸர்வார்த்த ஸாதக:"

நமோ நாராயணாய இதி - நமோ நாராயணாய என்னும், **மந்த்ர:** மந்த்ரமானது, **ஸர்வாத்த ஸாதக :** அனைத்துப் பொருள்களையும் ஸாதித்துக் கொடுக்கும். **தத்ர**-

அப்படி இஷ்டத்தைப் பெறுவதில், பஹுபி: மந்த்ரை:- பல மந்திரங்களாலே, கிம் - என்ன ப்ரயோஜநம்? பஹுபி : வ்ரதை : அநேக விரதங்களாலே. கிம் - என்ன ப்ரயோஜநம்?

இவை முதலானவைகளாலே வேதார்த்தத்தை விளங்கச் சொல்லுகிற தத்தும் நூல்களிலே பல இடங்களிலும் இத்தைச் சிறப்பித்துச் சொல்லுகையாலே வேதார்த்தத்தை விரிவுபடுத்தும் முயற்சியுடையரான மேலான ரிஷிகளும் விரும்பினார்கள்.

'வண்புகழ் நாரணன்' 'செல்வ நாரணன்' என்று தொடங்கி, 'வாழ்புகழ்நாரணன்' என்று முதல் நடுமுடிவாக நம்மாழ்வாரும் அருளிச் செய்கையாலும், "நாடும் நகரமும் நன்கறிய நமோ நாராயணாய" என்று தொடங்கி, "ஓவாதே நமோ நாரணாவென்பன்" என்று பெரியாழ்வாரும், "நாத்தழும்பெழ நாரணா" என்று தொடங்கி, 'நலந்திகழ் நாரணன்' என்று குலசேகரப் பெருமாளும், "நான்முகனை நாராயணன் படைத்தான்" என்று தொடங்கி "எட்டெழுத்தும் ஓதுவார்கள் வல்லர்வானமாளவே" என்று திருமழிசைப்பிரானும், "நான் கண்டு கொண்டேன் நாராயணாவென்னும் நாமம்" என்று ஆரம்பத்தில் ஒருகால் சொன்னாற் போலே ஒன்பது முறை சொல்லி "நாராயணா ஓ மணிவண்ணா நாகணையாய் வாராய்" என்று திருமங்கையாழ்வாரும், முதல் கடைவாசியற அருளிச்செய்கையாலும், "நன்மாலைகொண்டுநமோ நாரணாஎன்னும்சொன்மாலைகற்றேன்" என்றும், "நாரணாவென்றோவாதுரைக்கும் உரையுண்டே?" என்றும் "ஞானச் சுடர் விளக்கேற்றினேன் நாரணற்கு" "நாரணன்தன் நாமங்கள்", "பகல்கண்டேன் நாரணனைக் கண்டேன்" என்றும் "நாமம்பலசொல்லிநாராயணா" என்றும் முதலாழ்வார்களும் அருளிச் செய்கையாலும் "மயர்வற மதிநலம் அருளினன்" என்கிறபடியே, நிர்ஹேதுக பகவத் கடாக்ஷத்தாலே செவ்வையான ஜ்ஞானத்தை அடைந்து எல்லாவற்றையும் உண்மையாம் வகை தம் ஞானக்கண்ணாலே காண்பவர்களான ஆழ்வார்களெல்லாரும் விரும்பினார்கள். மற்ற மந்த்ரங்களை

அநாதரித்து இத்தையே தந்தமக்குத்தஞ்சமாகத் குறிக் கொண்டு பிறர்க்கு உபதேசிக்கும் போதும், தந்தம்மைப் பற்றினார்க்கும் இத்தையே உபதேசிக்கையாலும், அந்த ஆழ்வார்களைப் பின் சென்ற ஆசார்யர்களெல்லாரும் விரும்பினார்களென்கை.

இத்தால் வேற்று மந்த்ரங்களிற்காட்டில் இம்மந்த்ரத்துக்குண்டான சிறப்பு சொல்லிற்றாயிற்று.

**தோற்றுவாய்:** இனி மந்த்ரத்தின் பொருளான ஈச்வரனைக்காட்டிலும், மந்த்ரத்துக்கு உண்டான சிறப்பைச் சொல்லுகிறார்.

**மூ. சூ. 14. வாச்யப்ரபாவம் போலன்று வாசக ப்ரபாவம்.**

**விரிவுரை :** அதாவது, இதற்குப் பொருளான ஈச்வரனுடைய பெருமைபோலன்று, அவன் பெயரான இம்மந்த்ரத்தின் பெருமை என்றபடி.

**தோற்றுவாய் :** அதுதான் ஏதென்ன? அருளிச் செய்கிறார்.

**மூ. சூ. 15. அவன் தூரதஸ்தனானாலும் இது கிட்டிநின்று உதவும்.**

**விரிவுரை :** அதாவது, இம்மந்த்ரத்தின் பொருளான ஈச்வரன் ஸமீபத்திலின்றிக்கேயிருந்தாலும், அவன் பெயரான இதுகிட்டிநின்று தன்னைச் சொன்னவர்களுடைய விருப்பங்களை ஸாதித்துத் தரும் என்கை.

**தோற்றுவாய் :** இப்படி இம்மந்த்ரத்துக்குப் பொருளான இறைவன் தூரவானாய் இருக்க, அவனைச் சொல்லுகிற சொல்லான இம்மந்த்ரம் அருகே நின்று உதவின இடமுண்டோ என்ன? அருளிச் செய்கிறார்.

**மூ. சூ. 16. த்ரௌபதிக்கு ஆபத்திலே புடவை சுரந்தது திருநாமமிறே.**

விரிவுரை : அதாவது, பெரிய சபையிலே துச்சாஸநன் ஆடையைக்களையும் போது திரௌபதியானவள் "மஹாத்யாபதி ஸம்ப்ராப்தேஸ்மர்த்தவ்யோ பகவாந்ஹரி :"(பேராபத்து விளைந்தபோது ஹரியான பகவானை நினைப்பாயாக) என்று ஸ்ரீவஸிஷ்ட ரிஷி சொல்லி வைத்ததை நினைத்து, "சங்கசக்ரகதாபாணே த்வாரகா நிலையஅச்யுத, கோவிந்தபுண்டரீகாக்ஷ ரக்ஷமாம் சரணாகதாம்" என்று சரணம் புகுந்த த்ரௌபதிக்கு அவ்வாபத்திலே மானக்குறைவராமல் மேன்மேலென ஆடைகளை வளரவித்தது கோவிந்தா என்ற திருநாமமன்றோ?.

(சங்க சக்ரங்களைக் கையிலேந்தியவனே! துவராகையை இருப்பிடமாக உடையவனே! அடைந்தாரை நழுவ விடாதவனே! பசுக்களைக்காப்பதையே விந்தையாக உடையவனே! தாமரைக்கண்ணனே! உன்னையே தஞ்சமடைந்த என்னைக் காத்தருள்வாயாக). என்று சரணம் புகுந்த த்ரௌபதிக்கு அந்த ஆபத்திலே "கோவிந்தேதி யதாக்ரந்தத் க்ருஷ்ணாமாம் தூரவாஸி நம்"

"ருணம் ப்ரவ்ருத்தமிவமே ஹ்ருதயாந் நாபஸர்ப்பதி" (த்ரௌபதியானவள் தூரத்தில் இருந்த என்னைக் குறித்து கோவிந்தா! என்று அழுதாள் என்பது யாதொன்றுண்டோ அது வட்டிக்கு வட்டியாக வளரும் கடனைப் போல், என்னுடைய மனத்தினின்றும் நீங்கவில்லை, என்று பாண்டவர்களை வநவாஸம் நீங்கி உபப்லாவ்யத்தில் கண்டு சொன்னது) என்கிறபடியே நாமத்துக்குப் பொருளான கண்ணன் தூரவானாயிருக்கச் செய்தேயும், ஆடையை உண்டாக்கிக் கொடுத்தது அந்த அவதாரத்தின் பேரான 'கோவிந்த' னென்கிற திருநாமமென்கை. நாராயண சப்தார்த்தப் பல்லாயிரப்பகுதியில் ஒரு பகுதியான கோவிந்த நாமம் இப்படிச் செய்த தென்றால் நாராயண நாமத்தின் ஏற்றம் சொல்லவேண்டாதாயிற்று.

தோற்றுவாய் : இன்னமும் ஒரு விதத்தாலே இதன் பெருமையைச் சொல்கிறார்.

**மூ . சூ . 17. சொல்லும் க்ரமம் ஒழியச் சொன்னாலும் தன் ஸ்வரூபம் கெடநில்லாது .**

விரிவுரை : அதாவது, யாதொரு மந்த்ரமும் தன்னைத் தஞ்சமாக மிக விருப்பத்தோடு சொன்னவர்களுக்கல்லது காப்பதாகிய தன் கார்யஞ் செய்யாதேயாகிலும், இந்த மந்த்ரம் அவ்வாறன்றிக்கே தன்னைத்தஞ்சமாக விரும்பிச் சொல்லுகையாகிற முறையன்றிக்கே "ஸாங்கேத்யம் பாரிஹாஸ்யஞ்ச, ஸ்தோபம் ஹேளஂ ந மேவ வா"

(இடுகுறியாகிய ஒருவன் பெயராகச் சொன்னாலும் அநுகூலர் விஷயத்தில் தரிக்காமல் பெயராக அழைத்தாலும், கீதம் பாடுமவர்கள் பல பெயர்களைப் பன்னுகிற முறையில் சொன்னாலும், சிசுபாலன் முதலானாரைப் போல் கோபம் பிறக்கச் சொன்னாலும் தான் நற்பலன் தருவதில் தவறாது) என்கிறபடியே, சொல்லினும் சொன்னவர்களைக் காப்பதாகிற தன்நிலை கெடாது.

தோற்றுவாய் : இத்தான் எவரெவர் எந்த எந்த பலன்களை விரும்புகிறார்களோ அவரவர்கள் விரும்பினபடியே தரும்படியான பெருமையைச் சொல்கிறார்.

**மூ . சூ . 18 . இதுதான் "குலந்தரும்" என்கிறபடியே எல்லா அபேக்ஷிதங்களையுங் கொடுக்கும் .**

விரிவுரை : அதாவது, இந்த மந்த்ரமானது "குலந்தரும்" என்று தொடங்கி, ஆழ்வார் அருளிச் செய்தபடியே அவரவர் தகுதிகளுக்கேற்ப எல்லா கோரிக்கைகளையும் கொடுக்கும் என்கை.

தோற்றுவாய் : மேற்சொன்னவற்றை விவரிக்கிறார்.

**மூ . சூ .19 . ஐச்வர்ய கைவல்ய பகவல்லாபங்களை ஆசைப்பட்டவர்களுக்கு அவற்றைக் கொடுக்கும் .**

விரிவுரை : அதாவது, "ஐஹலௌகிகம்ஐச்வர்யம். ஸ்வர்க்காத்யம் பாரலௌகிகம், கைவல்யம் பகவந்தஞ்ச மந்த்ரோயம் ஸாதயிஷ்யதி".

(இவ்வுலகச் செல்வம், ஸ்வர்க்கம் முதலான பரலோகத்துச் செல்வம், ஆத்மாநுபவமாகிய கைவல்யம், பரமாத்மாநுபவமாகிய பரமபதத்தின்பம் ஆகியவைகளை இந்த மந்திரம் ஸாதித்துக் கொடுக்கும்). என்கிறபடியே இவ்வுலகத்ததாயும், மேல் பரலோகத்ததாயும் உள்ள ஐச்வர்ய-ங்களையும், ஆத்மாவின் இயற்கைநிலை எய்துவதாகிய கைவ-ல்யத்தையும். அளவற்றதும், அழிவற்றதும், மேம்பட்டது-மாகிய பரமாத்மாநுபவமாகிய பரமபதத்தில் அநுபவ-த்தையும் ஆசைப்பட்ட அந்த அந்த தகுதியுடையார்க்கு ஜபஹோமம் முதலானவைகளாலே நேரே தானே ஸாதநமாய் நின்று அவ்வற்றைக் கொடுக்கும் என்கை.

தோற்றுவாய் : கர்மம் முதலான ஸாதநங்களுக்குத் துணை பண்ணும் இதன் சிறப்பைச் சொல்லுகிறார்.

**மூ . சூ . 20 . கர்மஜ்ஞாந பக்திகளிலே இழிந்த-வர்களுக்கு விரோதியைப் போக்கி அவற்றைத் தலைக்கட்டிக் கொடுக்கும் .**

விரிவுரை : அதாவது, கர்மயோகத்தை முக்தி ஸாதகமாகக் கொள்ளுமவர்களுக்கு கர்மயோக ஆரம்ப விரோதியான பாபத்தைத் தள்ளி அந்தக் கர்மம் நிர்விக்-நமாயிருந்து, அதை முடிவுபெறச் செய்யும். முதற்கண் ஜ்ஞாந யோகத்தை முன்னிடுமவர்களுக்குத் தன்னைத் துணை கொள்ளுமளவில், கர்மத்தால் ஸாதிக்கக் கூடிய ஜ்ஞாநாரம்ப விரோதியான பாபத்தைத் தள்ளி அந்த ஜ்ஞாநத்துக்கு நாள் தோறும் வளர்ச்சியைச் செய்து கொண்டு, அத்தை முடிவு பெறுத்துவிக்கும். பக்தியோகத்தை மோக்ஷஸாதநமாகக் கொள்ளுமவர்களுக்கு, தன்னைத் துணை கொள்ளுமளவில், பக்தியோகாரம்ப விரோதியான பாபத்தை ஒழித்து, பக்தியோக வளர்ச்சிக்குக் காரணமாய் நின்று அதை முடிவு பெறுத்துவிக்குமென்கை.

தோற்றுவாய் : இங்ஙனன்றிக்கே ப்ரபந்நர்க்கு இது செய்யும் உபகார வைபவத்தை அருளிச் செய்கிறார்.

**மூ. சூ. 21. ப்ரபத்தியிலே இழிந்தவர்களுக்கு ஸ்வரூபஜ்ஞாநத்தைப் பிறப்பித்துக் காலக்ஷேபத்துக்கும் போகத்துக்கும் ஹேதுவாயிருக்கும்.**

விரிவுரை : அதாவது, கீழ்ச் சொன்னவைபோலே செயற்கரியதாய், ஜீவர்களுடைய பரதந்த்ர ஸ்வரூபத்துக்கு முரண்பட்டதாய் இருக்கையன்றிக்கே, சுலபமாக ஒழுகுவதற்குரித்தாய், ஸ்வரூபத்துக்குப் பொருந்தியதுமான ப்ரபத்தியாகிய நிஷ்டையில் நின்றவர்களுக்கு இந்த நிஷ்டைக்குப் பொருந்தியதான, பரதந்த்ரரூப ஸ்வரூபஜ்ஞாநத்தை மிக விரிவாக உண்டாக்கி, அர்த்தா நுஸந்தாநம் பண்ணுதல் முதலியவைகளாலே போது போக்குகைக்கும் உரித்தாய், **"எனக்கென்றுந்தேனும் பாலும் அமுதுமாய திருமால் திருநாமம்"** என்கிறபடியே திருமந்த்ர பொருளான எம்பெருமான் நலமந்தமில்லாதவனைப் போலே, இது தானே சுவைமிகுத்து இனிய போகத்துக்கும் உரித்தாயிருக்கும்.

தோற்றுவாய் : அறியப் பெறுவனவாகிய அனைத்து அர்த்தங்களையும் சொல்லுகையாகிற இதன் வைபவத்தை அருளிச் செய்கிறார்.

**மூ. சூ. 22. "மற்றெல்லாம் பேசிலும்" என்கிறபடியே அறிய வேண்டும் அர்த்தமெல்லாம் இதுக்குள்ளே உண்டு.**

விரிவுரை : அதாவது **"நின்திருவெட்டெழுத்துங்கற்று, மற்றெல்லாம் பேசிலும்"** என்கிறபடியே, ஆத்மா உஜ்ஜீவனத்துக்குப் பொருந்த அறியவேண்டும் அர்த்த விசேஷங்களெல்லாம் இந்த மந்த்ரத்துக்குள்ளே உண்டென்கை.

தோற்றுவாய் : அறியவேண்டும் அர்த்தமெல்லாம் எது? என்னும், விருப்பமுடைமையாலருளிச் செய்கிறார்.

## மூ . சூ . 23 . அதாவது - அஞ்சர்த்தம் .

விரிவுரை : அஞ்சர்த்தமாவது : ஆத்மாவின் இயல்பான தன்மையையும் பரமாத்மாவின் இயல்பான தன்மையையும், பரமாத்மாவால் ஜீவாத்மா பெறும் பயனின் தன்மையையும், இப்பயனை ஸாதித்துத் தரும் ஸாதநத்தின் தன்மையையும், இவற்றை தடுக்கிற தடையின் தன்மையையும் இந்த மந்த்ரம் சொல்வதாகும். இவற்றுக்கு ப்ரமாணமாவது,

**"ப்ராப்யஸ்யப்ரஹ்மணோரூபம் ப்ராப்துச்ச ப்ரத்யகாத்மந: ப்ராப்த்யுபாயம் பலம் ப்ராப்தேஸ் ததாப்ராப்தி விரோதிச, வதந்தி ஸகலாவேதாஸ் ஸேதிஹாஸ புராணகா : முநய்சமஹாத்மாநோ வேத வேதார்த்த வேதிந :"**

(அடையத்தக்க பரப்ரஹ்மத்தினுடைய ஸ்வரூபத்தையும், அடைபவனான ஜீவனுடைய ஸ்வரூபத்தையும், அடைகிறதற்கேற்ற உபாயஸ்வரூபத்தையும், அடையும் பலனின் ஸ்வரூபத்தையும், அப்படியே அடைவதற்கு விரோதியாயிருப்பதன் ஸ்வரூபத்தையும், இதிஹாஸ புராணங்களுடன் கூடின எல்லா வேதங்களும் சொல்லுகின்றன. வேதங்களையும், வேதாந்தங்களானவற்றையும் அறிந்தவர்களான மஹாத்மாக்களான மஹரிஷிகளும் சொல்லுகிறார்கள்.) இப்படியே ஸகல வேத சாஸ்திரங்களும் சொல்லுவது இவ்வர்த்த பஞ்சகத்தையும் ஆகையாலே, அதன் சுருக்கமான இந்த மந்த்ரத்தில் சொல்லப்பெறுவதும் இதுவேயாம்.

இந்த மந்த்ரந்தான் ப்ரணவத்தாலே ஜீவஸ்வரூபத்தையும், நமஸ்ஸாலே விரோதி, உபாய ஸ்வரூபங்களையும், நாராயண பதத்தாலே பரஸ்வரூபத்தையும், அதில் நான்காம் வேற்றுமையாலே பல ஸ்வரூபத்தையும் சொல்லுவதாயிருப்பதாகும்.

தோற்றுவாய் : இந்த மந்த்ரத்தின் பொருளின் சிறப்பை அருளிச் செய்கிறார் மேல்.

## மூ . சூ . 24 . பூர்வாசார்யர்கள் இதில் அர்த்தம் அறிவதற்கு முன்பு தங்களைப் பிறந்தார்களாக

***நினைத்திரார்கள்; இதில் அர்த்த ஜ்ஞாநம் பிறந்த பின்பு, "பிறந்தபின் மறந்திலேன்" என்கிறபடியே இத்தையொழிய வேறொன்றால் கால க்ஷேபம் பண்ணி அறியார்கள் .***

விரிவுரை : அதாவது, நாதமுநிகள் ஆளவந்தார் எதிராஜர் முதலான நம் பூர்வாசார்யர்கள் "அன்று நான் பிறந்திலேன்" என்கிறபடியே இந்த மந்த்ரத்தில் அர்த்தம் அறிவதற்கு முன்பு தங்களைப் பிறந்தார்களாக நினைத்திரார்கள். இதில் அர்த்த ஜ்ஞாநம் தங்களுக்கு உண்டான பின்பு "பிறந்த பின் மறந்திலேன்" என்று ஆழ்வார் பாசுரத்திற் சொல்லுகிறபடியே இந்த மந்த்ர அர்த்தத்தைத் தவிர வேறொன்றால் காலங்கழிக்க மாட்டார்கள் என்கை.

வேத சாஸ்திரங்களிலோ, ஆழ்வார்கள் அருளிச் செயல்களிலோ பொழுதுபோக்கும் போதும் இந்த மந்த்ர அர்த்தத்தை உட்கொண்டே விசாரிப்பதாலே இத்தையொழிய வேறொன்றால் காலக்ஷேபம் பண்ணியறியார்களென்னத் தட்டில்லை.

தோற்றுவாய் : சப்த சக்திதானே அனைத்தையும் ஸாதித்துத் தருவதாயிருக்க, இவர்கள் இதன் அர்த்தத்திலே ஊன்றுகைக்குக் காரணம் என்? என்ன, அருளுகிறார்.

***மூ . சூ . 25. வாசகத்திற்காட்டில் வாச்யத்தில் ஊன்றுகைக்கடி, ஈச்வரனே உபாயஉபேயமென்று நினைத்திருக்கை .***

விரிவுரை : அதாவது, அனைத்துப்பலன்களுக்கும் இம்மந்த்ரம் தானே ஸாதநமாயும் மற்றைச் சாதனங்களுக்குத் துணையாய் நின்று தலைக்கட்டிக் கொடுக்குமதான சப்த சக்தி தானே அமைந்திருக்கச் செய்தே, இதைவிட்டு முன் சூத்திரத்தில் சொன்னபடியே இந்த மந்த்ரத்தினுடைய

அர்த்தத்திலே பூர்வாசார்யர்கள் நோக்காயிருப்பதற்குக் காரணம், எம்பெருமான் உகப்பை விட்டு வேற்றுப் பயன் கருதுமவராய் இம்மமந்திர சப்தத்தை ஸாதநமாகக் கொண்டு சாதித்தல்; வேறு ஸாதநங்களைக் கைக் கொள்ளுமவர்களாய் அதுமுற்றுப் பெறுவதற்கு இதன் சப்தத்தை துணைக் கொள்ளுமவர்களைப் போலன்றிக்கே, உபாய உபேயங்கள் இரண்டும் எம்பெருமானே என்று நினைவிற்கொண்டு ஒழுகுகை என்றபடி.

தோற்றுவாய் : இனிமேல் இம்மந்த்ரத்துக்கு அர்த்தம் இரண்டு வாக்யங்களாக அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 26. இதுதன்னில் சொல்லுகிற அர்த்தம் ஸ்வரூபமும், ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யமும்; ஸ்வரூபமும், உபாயமும், பலமும் என்னவுமாம்.**

விரிவுரை : அதாவது, இந்த மந்த்ரந்தன்னில் சொல்லு-கிற அர்த்தமாவது, இது ஆத்மாவினுடைய அடிமையும் பராதீநனாயும் இருக்கிற இயல்பான ஸ்வரூபமும், இந்த ஸ்வரூபத்துக்குப் பொருந்தியதான தொண்டாற்றுகையாகிற பலமும். (ஸ்வரூபத்துக்குப் பொருந்துகையாவது: தன்னலங் கருதுகையாகிற சுயநலமும், தான் செய்வதாகக் கருதுகையாகிற அஹங்காரமும் நீங்கிப் பகவந்நிய மநத்தால் அவனுகப்புக்கென்றே செய்கையாகிற நியமம்.) அல்லது அடி-மையாகிற ஸ்வரூபமும், இந்த ஸ்வரூபத்துக்குப் பொருந்திய உபாயமும். இந்த உபாயத்தால் ஸாதிப்பதாகிற பயனுமா-மென்கை.

இதில் முன்னர் பொருள் கொண்ட ரீதியில் ப்ரணவ நமஸ்ஸுக்களாலே ஸ்வரூபமும், நாராயண பதத்தாலே பயனுஞ்சொல்லுகிறது. பின்னர் பொருள்கோளில் ப்ரணவ-த்தாலே சேஷத்வமாகிற ஸ்வரூபமும், நமஸ்ஸாலே உபாய-மும், நாராயண பதத்தாலே பலமும் சொல்லுகிறது.

**மூ . சூ . 27 . பலம் இருக்கும்படி ப்ரமேய சேக-ரத்திலும், அர்ச்சிராதிகதியிலும் சொன்னோம் .**

விரிவுரை : அதாவது, இவ்வாத்மாவுக்குப் பெறப்பெறுகையாகிற பலந்தான் - அர்ச்சிராதிமார்க்கத்தாலே பரமபதத்திலே போய் பரிபூர்ண பகவதநுபவத்தைச் செய்து அவ்வநுபவத்தால் பிறந்த ப்ரேமை தூண்டச் செய்யும் அனைத்துத் தொண்டும் ஆகையாலே, அது இருக்கும்படியைச் சுருக்கமாக "ப்ரமேய சேகரம்" என்கிற ப்ரபந்தத்திலும், விரிவாக "அர்ச்சிராதி கதி" யாகிற ப்ரபந்தத்திலும் சொன்னோம், அவற்றிலே கண்டு கொள்வதென்கை.

தோற்றுவாய் : இந்த மந்த்ரத்துக்கு பதவுரை அருளிச் செய்வதாகத் திருவுள்ளம்பற்றி, இதனுடைய எழுத்திலக்கத்தையும், பத இலக்கத்தையும் முதலில் அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 28 . இதுதான் எட்டு திருவக்ஷரமாய் மூன்று பதமாயிருக்கும் .**

விரிவுரை : அதாவது, இந்த மந்த்ரம் தான் "ஓமித்யே காக்ஷரம், நம இதித்வே அக்ஷரே, நாராயணாயேதி பஞ்சாக்ஷராணி, இத்யஷ்டாக்ஷரம் சந்தஸா காயத்ரீ சேதி" என்றும் "ஓமித்யக்ரே வ்யாஹரேத், நம இதி பச்சாத், நாராயணாயேத்யுபரிஷ்டாத்" என்கிற படியே, எட்டு திருவக்ஷரமாய், மூன்று பதமாயிருக்குமென்கை. இதனுடைய அஷ்டாக்ஷரத்வம் சொல்லுகிற இடத்தில் "ஓமித்யே காக்ஷரம்" என்று ப்ரணவத்தை ஓரக்ஷரமாகவும் "நம இதித்வே அக்ஷரே" என்று நமஸ்ஸை இரண்டக்ஷரமாகவும், "நாராயணாயேதி பஞ்சாக்ஷராணி" என்று நாராயண பதத்தை அஞ்சக்ஷரமாகவும் வேதம் சொல்லுகையாலே ஸமஸ்த பதமான நாராயண பதத்தில் நாரபதத்தைப் பிரித்து ஆறு எழுத்தாக்கி ப்ரணவம் நீங்கலாக அஷ்டாக்ஷரத்வம் சொல்லுகையாகிற பக்ஷம் வேத மார்கம் அல்லாததாகையாலே ஏற்றுக் கொள்ளத்தக்க தன்று என்கை.

தோற்றுவாய் : இதில், மூன்று பதங்களும் எவ்வர்த்தத்தைச் சொல்லுகிறது என்னும் வேட்கையிலே அருளிச் செய்கிறார்.

**மூ. சூ. 29. மூன்று பதமும் மூன்றர்த்தத்தைச் சொல்லுகிறது.**

*விரிவுரை : மூன்று பதமும் மூன்று அர்த்தத்தைச் சொல்லுகிறது என்கிறார்.*

*தோற்றுவாய் : அவ்வர்த்தங்கள் தம்மை விரிவாக அருளிச் செய்கிறார்.*

**மூ. சூ. 30. அதாவது, சேஷத்வமும், பாரதந்த்ரியமும், கைங்கர்யமும்.**

*விரிவுரை : அதாவது, ப்ரணவத்தாலே சேஷத்வமும், நமப்பதத்தாலே பாரதந்த்ரியமும், நாராயணபதத்தாலே கைங்கர்யமும் என்று விவரிக்கிறார்.*

ஸ்வரூபமும், ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யமும் என்று முதற்சொன்ன வாக்யார்த்தம், இத்தை நினைத்துச் சொன்னதாம்.

*தோற்றுவாய் : இந்த மூன்று பதங்களில் முதற்பதம் எது என்ன? அருளிச் செய்கிறார்.*

**மூ. சூ. 31. இதில் முதல் பதம் ப்ரணவம்.**

*விரிவுரை : அதாவது, "ஓமித்யக்ரே வ்யாஹரேத்" ப்ரணவத்தை முதலில் ஓதக்கடவது, என்றன்றோ வேதஞ்சொல்லிற்று. தர்ம சாஸ்திரமாகிய ஸ்ம்ருதியும் "ப்ரணவாத்யம் நமோ மத்யம் நாராயண பதாந்திமம், மந்த்ரமஷ்டாக்ஷரம் வித்யாத் ஸர்வஸித்திகரம்ந்ருணாம்" 'ப்ரணவம்' முதற் பதமாகவும், 'நம:' பதம் மத்யமாகவும் "நாராயண" பதம் கடைசியாகவும் உடைய அஷ்டாக்ஷர மந்த்ரம், சேதநர்களுக்கு எல்லா விருப்பங்களையும் தரும் என்றறியக் கடவன் என்றது.*

*தோற்றுவாய் : இனி ப்ரணவத்துக்கு அர்த்தம் அருளிச் செய்வதாக, இதனுடைய மூன்றெழுத்தாயிருக்குமதை அருளிச் செய்கிறார்?*

**மூ. சூ. 32. இது 'அ' என்றும் 'உ' என்றும் 'ம' என்றும் மூன்று திருவக்ஷரம்.**

விரிவுரை : இந்த ப்ரணவந்தான் விபக்தமாகப் பிரிந்த நிலையிலே மூன்றெழுத்துக்களாய், மூன்று பதமாய், மூன்று அர்த்தங்கள் காட்டுமதாய், கூட்டான நிலையிலே ஓரெழுத்தாய், ஒரு பதமாய், ஓரர்த்தங்காட்டுமதாயிருக்கும்.

தோற்றுவாய் : இனி, இந்த மூன்றெழுத்துக்களும் உற்பத்தியான கிரமத்தை உபமாந முகத்தாலே காட்டுகிறார்.

**மூ. சூ. 33. மூன்று தாழியிலே தயிரை நிறைத்துக் கடைந்து வெண்ணெய் திரட்டினாற்போலே மூன்று வேதத்திலும் மூன்றக்ஷரத்தையும் எடுத்தது.**

விரிவுரை : மூன்று தாழியிலே என்று தொடங்கி **"பூரிதிரிக் வேதாதஜாயத, புவ இதி யஜுர்வேதாத், ஸுவரிதி சாம வேதாத், தாநி ஸுக்ராணி அப்யதபத், தேப்யோ அபிதப்தேப்ய ஸ் த்ரயோ வர்ணா அஜாயந்த, அகார உகார மகார இதி, தாநேகதா ஸமபரத்ததே ததோமிதி"**

"பூ:" என்பது ரிக்வேத ஸாரமாக உண்டாயிற்று; 'புவ:' என்பது யஜுர்வேத ஸாரமாக உண்டாயிற்று; 'ஸுவ:" என்பது சாமவேத ஸாரமாக உண்டாயிற்று.

தாநி - அந்த "பூ:, 'புவ:, ஸுவ:" என்கிற சாரச் சொற்களாகிற, ஸுக்ராணி - பரிசுத்தமான பொன்திவலைகளை, அப்யதபத்-மீண்டும்சுருங்க உருக்கினான். தேப்ய: "அபிதப்தேப்ய : உருக்கப்பட்டதான அந்த, 'பூ :, புவ :, ஸுவ:" மூன்றும் (லயத்தை அடைந்து) சுருங்கி, அகார, உகார, மகார இதி - 'அ' 'உ' 'ம' என்று, த்ரயோவர்ணா : மூன்று எழுத்துக்கள். அஜாயந்த - உண்டாயின, தாந் - அந்த மூன்று எழுத்துக்களையும், ஏகதாஸமபரத் - ஒன்றாகச் சேர்த்தான், தத்ஏதத் - சேர்த்த அந்த இதுதான் . ஓம் இதி - ஓம் என்பது ஆகும்.

**"அகாரஞ்சாப்யுகாரஞ்ச மகாரஞ்ச ப்ரஜாபதி : வேதத்ரயாந் நிரப்ருஹத் பூர்புவஸ் ஸுவரிதீதிச"**

அகாரஞ்சஅபி - அகாரத்தையும், **உகாரஞ்ச** - உகாரத்தையும், **மகாரஞ்ச** - மகாரத்தையும், **பூ : புவ : ஸுவ :** - வ்யாஹ்ருதிகளென்ற இந்த ஸாரமான சொற்களை ப்ரஜாபதி :- எம்பெருமான், **வேதத்ரயாத்** - மூன்று வேதங்களினின்றும், **நிரப்ருஹத்** - எடுத்தான். என்று வேதங்களிலும் தர்ம சாஸ்திரங்களிலும் சொல்லுகிறபடியே ரிக்யஜுஸ் சாமங்களான மூன்று வேதங்களினின்றும் 'பூ : புவ : ஸுவ:" என்ற ஸாரச் சொற்கள் மூன்றையும் தோற்றுவித்து, அவைகளை மீண்டும் பொன் உருக்குமாபோலே எம்பெருமான் தன் ஸங்கல்பத்தாலே சுருங்கச் செய்து அவற்றில் நின்றும் அகார உகார மகாரங்களாகிற எழுத்துக்கள் மூன்றும் முறையே தோன்ற வைத்து, இப்படி உண்டாக்கின படியைத் திருவுள்ளம் பற்றி மூன்று தாழியில் தயிரை நிறைத்து தனித்தனியே கடைந்து, அதன் ஸாரமான வெண்ணெயைத் திரட்டினாற்போலே மூன்று வேதத்திலும் மூன்றெழுத்தையும் எடுத்ததென்கிறார்.

**தோற்றுவாய் :** இத்தால் பலித்த அம்ஸத்தை அருளிச் செய்கிறார்.

**மூ .சூ . 34 . ஆகையாலிது, ஸகல வேத ஸாரம்.**

**விரிவுரை :** அதாவது, ப்ரணவத்திலுள்ள மூன்று எழுத்துக்களான அ, உ, ம, ஒவ்வொரு வேதத்தினுடைய ஸாரமாக எடுக்கப்பட்ட தாகையாலே இது, ஸகல வேத-ஸாரம் என்ற படி.

**தோற்றுவாய் :** அதாவது, மூன்றெழுத்துக்களுக்கும் முறையே அர்த்தம் அருளிச் செய்வதாகத் திருவுள்ளம் பற்றி முதற்கண் அகாரார்த்தத்தை அருளிச் செய்கிறார்.

**மூ .சூ . 35. இதில் அகாரம், ஸகல ஸப்தத்துக்கும் காரணமாய் நாராயண பதத்துக்கு ஸங்க்ரஹமாயிருக்**

***கையாலே, ஸகல ஜகத்துக்கும் காரணமாய் ஸர்வரக்ஷகனான எம்பெருமானைச் சொல்லுகிறது.***

*விரிவுரை : அதாவது - இந்த மூன்றெழுத்துக்களிலும் வைத்துக் கொண்டு முதலெழுத்தான அகாரம்,*

"நாமரூபஞ்ச பூதாநாம் க்ருத்யா நாஞ்ச ப்ரபஞ்சநம்
வேத ஸப்தேப்ய ஏவா தௌ தேவாதீ நாஞ் ச காரஸ :"

ஸ :- *பிரமன்,* ஆதௌ - *படைப்புக்காலத்தில்,* தேவாதீநாம் - *தேவர் முதலாக தாவரங்களீறாக உள்ள,* பூதாநாம் - *ப்ராணிகளுக்கு,* நாம - *பெயர்களையும்,* ரூபஞ்ச - *வடிவங்களையும்,* க்ருத்யாநாம் ப்ரபஞ்ச நஞ்ச : - *தொழில் முறைகளாகிற விரிவையும்,* வேதஸப்தேப்ய:ஏவ - *வேதத்தினுடைய சப்தங்களிலிருந்தே,* சகார - *படைத்தான், என்கிறபடியே உலகில் சப்தங்களுக்கு வேதம் காரணமாய்,*

"ப்ரணவாத்யா ஸ் ததா வேதா:"

வேதா: - *வேதங்கள்,* ப்ரணவாத்யா :- *ப்ரணவத்தை முதலாக உடைத்தாயிருக்கின்றன.*

"ஓம்கார ப்ரபவா வேதா:"

வேதா:-*வேதங்கள்,* ஓங்கார ப்ரபவா - *ப்ரணவத்தைப் பிறப்பிடமாக உடையன. இவை முதலானவைகளிற் சொல்லுகிறபடியே அந்த வேதங்களுக்கும் ப்ரணவம் காரணமாய்,*

"தஸ்யப்ரக்ருதி லீநஸ்ய"

ப்ரக்ருதிலீநஸ்ய - *தன் காரணமான அகாரத்திலே அடங்கி இருக்கிற,* தஸ்ய - *அந்த ப்ரணவத்திற்கு. என்கிறபடியே அந்தப்ரணவம் தனக்கு அகாரம் காரணமாயிருக்கையாலே,*

"அகாரோவை ஸர்வாவாக்"

ஸர்வாவாக் - *எல்லா வாக்குக்களும்,* அகாரோவை - *அகாரமாயே-அகாரத்தைத்துணைக் கொண்டே (பாண்டமெ-*

ல்லாம் மண்ணாலேயே இருக்கும்) என்பதுபோல, 'அகாரத்தின் சிதைவே எல்லா எழுத்துக்களும் என்றதென்க.

"ஸமஸ்த ஸப்த மூலத்வாதகாரஸ்ய ஸ்வபாவத:" (இயல்பாகவே அகாரம் எல்லாச் சொற்களுக்கும் காரணமாயிருக்கும்)இப்படிகளால் அகாரம் ஸகல ஸப்தங்களுக்கும் காரணமாயும், ஸர்வேச்வரன் உலகிலுள்ள அனைத்துப் பொருள்களும் தனக்கு உடலாயும், தான் அவற்றுக்கு உயிராயும் இருந்து ஸர்வ ரக்ஷகனாயிருக்கும் படியை சொல்லுகிற நாராயண பதத்துக்கு சுருக்கமாயிருக்கையாலே,

"யதோவா இமாநி பூதாநி ஜாயந்தே, யேநஜாதாநி ஜீவந்தி".

யதோவா - எவனிடத்திலிருந்து, இமாநி பூதாநி - இந்த தேவ மநுஷ்யாதி ப்ராணிகள் எல்லாம், ஜாயந்தே - உண்டாகின்றனவோ, யேந - (ஆத்மாவாயிருக்கிற)எதனால், ஜாதாநி - உண்டான பூதங்களெல்லாம், ஜீவந்தி - உயிருடன் இருக்கின்றனவோ என்றும்,

"ஸஏவஸ்ருஜ்யஸ் ஸ ச ஸர்க்ககர்த்தா ஸ ஏவ பாத்யத்தி ச பால்யதே ச"

ஸஏவ - அவனே, ஸ்ருஜ்ய:- படைக்கப் படுகின்றான், ஸர்க்க கர்த்தாச - ஸ்ருஷ்டி பண்ணுகிறவனும், ஸ :- அவனே, ஸஏவபாதி - ரக்ஷிக்கிறவனும்அவனே, பால்யதேச - ரக்ஷிக்கப்படுகிறவனும் அவனே, அத்தி - ஸம்ஹரிக்கிறவனும் அவனே என்றும்,

இவைகளிற் சொல்லுகிறபடியே எல்லா ஜகத்துக்குங் காரணமாய், எல்லார்க்கும் ரக்ஷகனாயிருக்கும் எம்பெருமானைச் சொல்லுகிறதென்கை. இத்தால் இவ்வெழுத்தில் எழுத்தினியல்பான பொருளான காரணத்வமும், பகுதியான (தாத்வர்த்தமான) வினையடியாகப் பிறந்த ரக்ஷகத்வமும், சொல்லிற்றாயிற்று. இந்த அகாரத்துக்கு நாராயண பதத்தின் சுருக்கமான ரக்ஷகத்வம் சொல்லும்போதும் தாதுவினால் கிடைத்த தன்மையை முன்னிட்டே சொல்ல வேணுமென்பதாம்.

தோற்றுவாய் : ரக்ஷிக்கும் விதம் எது? என்னும் வேட்கையிலே அருளிச் செய்கிறார்.

**மூ. சூ. 36. ரக்ஷிக்கையாவது-விரோதியைப் போக்குகையும் அபேக்ஷிதத்தைக் கொடுக்கையும்.**

விரிவுரை : அதாவது, ரக்ஷிப்பதென்பது இஷ்டமில்லாதவற்றைத் தவிர்க்கையும், இஷ்டமானதைக் கொடுக்கையும் ஆகிய இரண்டு வகையாகையாலே, ஈச்வரன் சேதநரை ரக்ஷிக்கையாவது - அவர்களுக்கு வருத்தத்துக் கேதுவான விரோதியைப் போக்குகையும் சுகத்துக்கேதுவான விருப்பத்துக்குரியதை தருகையும் என்கை.

தோற்றுவாய் : இவன் இவர்களுக்குப் போக்கும் விரோதி எது? கொடுக்கும் (அபேக்ஷிதம்) விருப்பம் எது? என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ. சூ. 37. இவை இரண்டும் சேதநர் நின்ற நின்ற அளவுக்கீடாயிருக்கும்.**

விரிவுரை : சேதநர் நின்ற நின்ற அளவுக்கீடாயிருக்கும் என்றது, தாம் தாம் நின்ற (அதிகாரத்துக்கீடான) தகுதிகளுக்குப் பொருந்த இருக்கும் என்றபடி. சேதநர் - மக்கள்.

தோற்றுவாய் : இது தன்னைத் தெளிய அருளிச் செய்கிறார் மேல்.

**மூ. சூ. 38 ஸம்ஸாரிகளுக்கு விரோதி ஸத்ருபீடாதிகள், அபேக்ஷிதம் - அந்நபாநாதிகள்; முமுக்ஷுக்களுக்கு விரோதி - ஸம்ஸார ஸம்பந்தம், அபேக்ஷிதம் - பரமபத ப்ராப்தி; முக்தர்க்கும் நித்யர்க்கும் விரோதி கைங்கர்யஹாநி, அபேக்ஷிதம் கைங்கர்யவ்ருத்தி.**

விரிவுரை : அதாவது - தேகமே ஆத்மா என்கிற நினைவும் ஐம்புலனுகர்ச்சி அநுபவமே நிரந்தர அநுபவமாக நினைத்து வாழ்க்கை நடத்துகிற ஸம்ஸாரிகளுக்கு போக்க

வேண்டிய விரோதி - ஸத்ருக்களால் வரும் நலிவு தொடக்கமானவை, பெறுகைக்குரிய விருப்பம் - சோறு தண்ணீர் முதலானவைகள். ஸம்ஸாரிகள் - மாறி மாறி பிறந்துழலும் மக்கள்.

'ஸத்ருபீடாதிகள்' என்கிற விடத்தில், ஆதிசப்தத்தாலே ஆதிவ்யாதி - மனஸங்கட முதலானவற்றால் வரும் துன்பங்களை சொல்லுகிறது.

'அந்நபாநாதிகள்' என்கிற விடத்தில் ஆதி சப்தத்தாலே மலர்மாலை, ஆடை அணிகலன், சந்தநம், பெண் சேர்க்கை முதலானவைகளைச் சொல்லுகிறது.

முமுக்ஷுக்களுக்கென்றது - இவ்வுலகத்தில் அடிக்கொதித்து பரமபதத்துக்குப் போக ஆசைப்படாநிற்குமிவர்களுக்கு போக்க வேண்டிய விரோதி, பொய்நின்ற ஞாநமாய், பொல்லா ஒழுக்குமாய், அழுக்குடம்புமாய்க் கொண்டு, இவ்வுலகிலிருக்கையாகிற ஸம்ஸார ஸம்பந்தம். முமுக்ஷுக்களுக்குப் பெறவேண்டிய விருப்பம் - பகவதநுபவம் முதலானவைகளுக்கு அநுகூலமான பரமபதத்தை அடைவதென்கை. முக்த நித்யர்களுக்கு என்றது - அதாவது, இவ்வுலகிலிருந்து விடுபட்டவர்களும், இவ்வுலகத்தொடர்பே அற்றவர்களாயும், பகவதநுபவத்தால் உண்டான ப்ரீதியால் கைங்கர்ய பரர்களாயுமிருக்கும் முக்த நித்யர்களான இவர்களுக்கு விரோதி - வகுத்த ஸ்வாமியான ஸர்வேச்வரன் திருவடிகளிலே தம்மியல்புக்கேற்றவகைசெய்து கொண்டு போகும் தொண்டுக்கு வரும் இடையூறு. இவர்களுக்கு விருப்பமாவதுமேன்மேலெனச் செய்கையாகிற கைங்கர்யவிருத்தி என்கை.

பகுதிமுடிவு : ஆக இப்படி அவரவர் தகுதிகளுக்கேற்ப விரோதியைப் போக்கி விருப்பத்தைத் தருகையால் எம்பெருமானே ஸர்வரக்ஷகனென்னுமிடம் சொல்லிற்றாயிற்று.

தோற்றுவாய் : இப்படி, எம்பெருமானொருவனேயோ எல்லாரையும் ரக்ஷிக்கிறவன்? உலகில் மாதா, பிதா, தேவதாந்-தரங்கள் (இதர தெய்வங்கள்) முதலானோர் பலரும் ரக்ஷகராக இல்லையோ என்ன? அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 39 . ஈச்வரனையொழிந்தவர்கள் ரக்ஷகரல்லர் என்னுமிடம் ப்ரபந்ந பரித்ராணத்திலே சொன்னோம் .**

விரிவுரை : அதாவது - இயற்கையான உறவாய், எல்லாக்காலத்திலும் நம்மைக் கைவிடாதே ரக்ஷித்துக் கொண்டு வரும் எம்பெருமானை யொழிந்தவர்களான தோன்றி மறையக்கூடிய ஆபாஸ பந்துக்களான தாய் தந்தை முதலானவர்களும், இடையில் தோன்றி மறையக் கூடிய மற்ற தெய்வங்களும் நம்மை காப்பவர்கள் அல்லரென்னுமிடம் பலகாரணங்களைக்காட்டி 'ப்ரபன்ன பரித்ராணம்" என்கிற நூலிலே சொன்னோம்; அந்த நூலிலே இவற்றை கண்டு கொள்ளலாம் என்கிறார்.

தோற்றுவாய் : பிறகு அர்த்த பலத்தாலே இப்பதத்தில் சொல்லப்படும் ச்ரிய: பதித்வத்தை (திருமகள் கேள்வனென்பதை) அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 40 . ரக்ஷிக்கும் போது பிராட்டி ஸந்நிதி வேண்டுகையாலே இதிலே ஸ்ரீஸம்பந்தமும் அநுஸந்தேயம் .**

விரிவுரை : அதாவது,

**"லக்ஷ்ம்யா ஸஹ ஹ்ருஷீகேசோ தேவ்யா காருண்ய ரூபயா, ரக்ஷகஸ் ஸர்வஸித்தாந்தே வேதாந்தேபிச கீயதே"**

காருண்ய ரூபயா - காருண்யத்தை (அதற்கு ஏற்ற விஷயத்திலே சேர்த்து அந்தக் காருண்யத்தை வடிவுடைய தாக்குமவளான) லக்ஷ்ம்யாதேவ்யாஸஹ - லக்ஷ்மி தேவி-யோடு கூட, ஹ்ருஷீகேச : விஷ்ணு வானவர், ரக்ஷக : - காப்பாற்றுவரான, ஸர்வஸித்தாந்தே - (ஸ்ரீ பாஞ்சராத்ரத்தில் உள்ளனவான மந்த்ரஸித்தாந்தமென்ன, ஆகமஸித்தாந்தமென்ன, தந்த்ர ஸித்தாந்தமென்ன, தந்த்ராந்தரஸித்தா-ந்தமென்ன ஆகிய) எல்லா ஸித்தாந்தங்களிலும். "வேதாந்தே அபிச - புருஷ ஸூக்தம் முதலிய உபநிஷத்துக்களிலும்,

ஸ்ம்ருதி இதிஹாஸ புராணங்களிலும், கீயதே சொல்லப்படுகிறான்.

என்கிறபடியே ரக்ஷகனான இறைவன் ஆத்மாக்களை ரக்ஷிக்கும் நிலையில், இவர்களுடைய குற்றங்களைக் கண்டாதல் தன் சுதந்திரத்தாலே யாதல், அநாதரித்துக் கைவிடாமல் காப்பதற்குறுப்பான இரக்கத்தைப் பிறப்பிக்கும் (புருஷகாரம்) சிபாரிசு செய்கிறவளான பிராட்டி சேர்ந்திருப்பது மிகமிக முக்யமாகையாலே காப்பாளனாம் அவனைச் சொல்லுகிற இவ்வகாரத்தில் அவனுடைய தேவியான லக்ஷ்மீ ஸம்பந்தமும் சொல்லவேண்டுமென்கை.

'லக்ஷ்மீ' என்னாதே 'ஸ்ரீ' என்றது (ச்ரயதஇதிஸ்ரீ:) என்கிறபடியே, அவனை நித்ய ஸேவை செய்கையாலே அவனோடு இவளுக்குண்டான பிரிவின்மையும், (ஸ்ரீயத இதி ஸ்ரீ) என்கிறபடியே சேதநர்களால் இவள் என்றும் ஸேவிக்கப் பெறுமவளாகையாலே ஸ்ரீ என்று சொல்லப்பட்டதென்கை.

தோற்றுவாய் : இன்னமும் இவ்வகாரத்திலே இறைவனுடைய லக்ஷ்மீ ஸம்பந்தம் நியமேன தோற்றும் என்னுமத்தை மெய்மைமை கூறுவார் கூற்றாலே காண்பிக்கிறார்.

## மூ . சூ . 41. அத்ர பகவத்ஸே நாபதிமிச்ரர் வாக்யம் :- அவன் மார்புவிட்டுப் பிரியில் இவ்வக்ஷரம் விட்டுப்பிரிவது .

விரிவுரை : அதாவது, இவ்விடத்தில் அறிவில் முதிர்ந்தவரான ஸ்ரீஸேநாபதி ஜீயர் அருளிச் செய்யும் வார்த்தை. "'அகலகில்லேனிறையும்' என்று அவன் திருமார்பிலே நித்யவாஸம் செய்யுமிவள், அவன் மார்பை விட்டுப் பிரியும்போது அவனுக்குப் பெயரான இந்த (அக்ஷரம்) எழுத்தை விட்டுப் பிரிவது" என்று என்கை. 'என்று' என்கிற இத்தனையும் கூட்டாதபோது கீழோட இவ்வாக்கியம் பொருந்தாது.

இத்தால், அவன் திருமார்பில் ஸம்பந்தம் இவளுக்கு நித்தியமாகையாலே அவன் தோற்றுமிடமெல்லாம் இவளும் தோற்றுகை நிச்சயமாகையாலே அவன் திருமார்பில்

தொடர்போடு அவனுக்குப் பெயரான 'அ' காரத்தில் தொடர்பும் நித்தியம் என்றதாயிற்று.

தோற்றுவாய் : இன்னமும் எம்பெருமான் தோற்றுமிடத்தில் லக்ஷ்மியும் தோற்றுவாளென்பதை நிலைநிறுத்துகைக்காக பரமாத்மா ஆத்மாக்களின் பெயர்களான அகார மகாரங்களிரண்டிலும் இவளுக்குண்டான, என்றும் உள்ளதான தொடர்பை உபமானமுகத்தாலே காட்டுகிறார்.

**மூ . சூ . 42 . பர்த்தாவினுடைய படுக்கையையும் ப்ரஜையினுடைய தொட்டிலையும் விடாதேயிருக்கும் மாதாவைப்போலே ப்ரதம சரம பதங்களை விடாதே இருக்கும் இருப்பு .**

விரிவுரை : அதாவது - பர்த்தாவுக்கு அடிமையான தன் தன்மைக்குச் சேரும்படி அவனை உகப்பிக்கைக்காக பர்த்தாவினுடைய படுக்கையை விடாதே, காக்கும் தன்மைமைக்குச் சேரும்படி காப்பதற்காக ப்ரஜையினுடைய தொட்டிலையும் விடாதே இருக்கும் மாதாவானவளைப்போலே, இந்தப் பிராட்டியும், கேள்வனான எம்பெருமானுக்குப் பெயரான முதல் பதமான அகாரத்தையும், மக்களாந்தன்மையரான ஆத்மாக்களின் பெயரான ப்ரணவத்தில் ஈற்றுப் பதமான மகாரத்தையும் அந்த அந்த விஷயத்தில் தனக்குண்டான தொடர்புகளுக்கேற்ப, உகப்பிக்கை ரக்ஷிக்கையாகிற இவற்றை முன்னிட்டு, விடாதே இருக்கும் இருப்பு என்கை.

தோற்றுவாய் : முன்பொது உபமாநத்தாலே சொன்னதை ஒரு சிறப்பு உபமாநத்தாலே சொல்லுகிறார்.

**மூ . சூ . 43. ஸ்ரீநந்தகோபரையும் க்ருஷ்ணனையும் விடாத யசோதைப் பிராட்டியைப் போலே .**

விரிவுரை : அதாவது பார்யையான தன் இயல்புக்கேற்ப உகப்பிக்கைக்காக பர்த்தாவான ஸ்ரீநந்தகோபரையும் விடாதே, மாதாவான தன்னியல்புக்கேற்ப காப்பதற்காக

புத்ரனான கண்ணனையும் விடாதே "அம்பரமே" என்கிற பாட்டிற் சொல்லுகிறபடியே இடையே நிற்கும் யசோதைப் பிராட்டியைப் போலே ப்ரணவம் முதல் பத ஈற்றுப் பதங்களின் பொருள்களான பரமாத்மா ஆத்மாக்களிருவரையும் விடாதே இவளும் பொருந்தி இருக்கும் என்பதாம்.

தோற்றுவாய் : ஈச்வர சேஷத்வமென்பதன்றி பிராட்டி-க்கும் அடிமை என்னுமிடம் இந்த அகாரத்தில் சப்தத்தால் சொல்லாதிருக்கச் செய்தேயும் இவளுக்கும் அடிமையென்று நாம் கொள்ளுகிற படி எங்ஙனே என்ன? அருளிச் செய்கி-றார்.

**மூ . சூ . 44 . ஒருவனடிமைகொள்ளும் போது க்ருஹிணிக்கென்றன்றே ஆவணவோலை எழுதுவது; ஆகிலும், பணிசெய்வது க்ருஹிணிக்கிறே அதுபோலே நாம் பிராட்டிக்கு அடிமையாயிருக்கும்படி .**

விரிவுரை : அதாவது, உலகில் ஒருவன் தாஸ தாஸிகள் முதலான ஓரடிமையைக் கொள்ளும்போது தனக்கென்றே எழுதிக் கொள்ளுமதொழிய தன் மனைவிக்கென்றல்ல விலையோலை எழுதுவது; ஆயிருக்கச் செய்தேயும் அடிமைத் தொழில் செய்வது மனைவிக்கும்தான்: அதுபோலே இந்த அகாரம் எம்பெருமானுக்கடிமை என்னுமளவைச் சொல்லிற்-றாகிலும் நாம் பிராட்டிக்கும் அடிமையாயிருக்கும்படி என்கை.

தோற்றுவாய் : கீழ்ச் சொன்ன காரணங்களை எல்லாம் (அநுவதித்து) திரும்ப சொல்லி இறைவனுக்கும் இறைவிக்கும் ஒருக்காலும் பிரிவின்மையை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 45 . ஆக, பிரித்துநிலையில்லை .**

தோற்றுவாய் : இந்தப் பிரிவின்மைக்கு இரண்டு உதா-ஹரணம் காட்டுகிறார்.

**மூ . சூ . 46. ப்ரபையையும், ப்ரபாவானையும், புஷ்பத்தையும் மணத்தையும் போலே .**

விரிவுரை : அதாவது, ஒளிக்கும் ஒளியையுடையானுக்கும் பிரிவென்பதில்லாதாப்போலேவும், மலருக்கும் மணத்துக்கும் பிரிவென்பதில்லாதாப் போலவும் "அநந்யாராக வேணாஹம் பாஸ்கரேண ப்ரபாயதா" (சூரியனை விட்டுப் பிரியாத ஒளிபோல் நான், ஸ்ரீராமனை விட்டு பிரிவின்றியே இருப்பவள்) என்று ஸீதையும், "அநந்யா ஹி மயாஸீதாபாஸ்கரேணப்ரபாயதா" (சூரியனோடு ஒளியைப் போல் சீதையானவள் என்னோடு சேர்ந்தே இருப்பவளன்றோ) என்று சீதையும் ராகவனும் சொன்னார்கள். இப்படி இருவர் வாக்காலும் சொன்னதால் பிரிவு என்பது எப்போதுமில்லை. "ப்ரஸூநம் புஷ்யந்தீமபி பரிமளர்த்திம் ஜிகதிஷு:" (மலரை மேன்மையுறச் செய்யும் மணத்துக்கு மேன்மைத் தன்மை இயல்பு. இதுபோல் இயல்பில் மங்களமான நீ பெருமானைச் சேர்ந்து மங்களகரனாக்குகிறாய் என்று பட்டரும் அருளிச்செய்தபடி). கதிரவனும் கதிரும் போன்றும் மலரும் மணமும் போன்றும் பெருமானும் பிராட்டியு ம் பிரிவின்றியே இருப்பர் என்பதாம்.

தோற்றுவாய் : இந்தப் பிரிவின்மையை அநுவதித்துக் கொண்டு இந்தச்சேர்த்தியே சேதநர்களுக்குப் பற்றுவதற்கு உத்தேச்யமாய்த்தலைக் கட்டினபடியை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 47. ஆக, இச்சேர்த்தி உத்தேச்யமாய் விட்டது .**

விரிவுரை : இந்தச் சேர்த்தியே பற்றுகைக்குத் தகுதியாய்விட்ட படியால், இவற்றுக்கு முரணாக தனித்தனியே விரும்புகை தகுதி அன்றென்றபடி. இருவரையும் பிரித்து விரும்பினால் ராவண சூர்ப்பணகைகளுக்குப் போலே அழிவே உண்டாகும். இருவரையும் பற்றினால்தான் ஸ்ரீவிபீஷணாழ்வான்போல் வாழலாவது என்பதாம்.

தோற்றுவாய் : இனிமேல், இதில் வேற்றுமை உருபின் பொருளைச் சொல்வதாக நான்காம் வேற்றுமையை எடுத்துக் கூறுகிறார்.

**மூ . சூ . 48 . இதிலே சதுர்த்தி ஏறிக்கழியும்.**

விரிவுரை : இவ்வகாரத்திலே நான்காம் வேற்றுமைப் பொருளில்தோற்றிச் சொல்லில் தோற்றாது வேற்றுமைத் தொகையாக மறையும்.

தோற்றுவாய் : எட்டு வேற்றுமைகளில் மற்ற வேற்றுமைகளெல்லாம் இருக்க நான்காம் வேற்றுமை தோற்றுவான் என்? என்று ஆட்சேபிக்கிறார்.

**மூ . சூ . 49 . சதுர்த்தி ஏறினபடி என்? என்னில்:**

தோற்றுவாய் : அதற்கு விடை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 50 . நாராயண பதத்துக்கு ஸங்க்ரஹமாயிருக்கையாலே.**

விரிவுரை : அதாவது - இந்த அகாரம், நான்காம் வேற்றுமையை ஈற்றிலே உடைய நாராயண பதத்துக்குச் சுருக்கமாயிருக்கையாலே இதிலும், (அகாரத்திலும்) நான்காம் வேற்றுமை ஏறிற்றென்கை. இப்படி அன்றாகில் இரண்டுக்கும் சுருக்கம் விரிவு என்கிற தன்மை குலையும்.

தோற்றுவாய் : இந்த நான்காம் வேற்றுமையால் சொல்லுகிற பொருள்தான் எது என்ன? அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 51 . இத்தால், ஈச்வரனுக்கு சேஷமென்கிறது .**

விரிவுரை : இதுதான் "தாதர்த்யே சதுர்த்தீ" (இது நான்காம் வேற்றுமையின் பொருட்டுப் பொருளதாம்). என்கையாலே, இந்த நான்காம் வேற்றுமையால் நாராயணனுக்கு 'அடிமை' என்று சொல்லுகிற தென்கை.

தோற்றுவாய் : 'ஸர்வம் பரவசம் து:க்கம்"(பிறர்க்கடி-மையாயிருத்தல் துன்பங்களனைத்தும் நேரும்)", ஸேவா ச்வவ்ருத்தி:" (அடிமை நாய்த் தொழில்) என்கிற உலக வழக்கைக் கொண்டு அடிமை துன்பமென்று நினைப்பவர் செய்யும் வினாவை அநுவதிக்கிறார்.

**மூ . சூ . 52 . 'சேஷத்வம் து:க்கரூபமாகவன்றோ நாட்டில் காண்கிறது' என்னில்:**

விரிவுரை : அடிமைத் தன்மை துன்ப மயமாயன்றோ நாட்டில் காண்கிறது என்றால்,

தோற்றுவாய் : இதற்கு விடை சொல்கிறார்.

**மூ .சூ.53. அந்த நியமமில்லை; உகந்த விஷயத்து-க்குச் சேஷமாயிருக்கும் இருப்பு ஸுகமாகக் காண்கை-யாலே .**

விரிவுரை : அதாவது, நாட்டில் "பணிமின் திருவருள்" என்று பரியப் பெறுமவளாம் மனைவிக்கு அந்தரங்கத்தில் அடிமையாயிருக்கும் இருப்பு இன்பமாகக் காண்கையாலே. அடிமை என்றால் துன்ப மயம் என்கிற நியமமில்லை.

தோற்றுவாய் : "மனைவி விஷயத்தில் அடிமை இன்பமாகிறது அவளிடத்துள்ள குணங்களடியாக வந்தத-ன்றோ" என்ன, அதற்கு விடை சொல்கிறார்.

**மூ . சூ .54 . அகாரத்திலே கல்யாண குணங்-களைச் சொல்லுகையாலே, இந்த சேஷத்வமும் குணத்தாலே வந்தது .**

விரிவுரை: ஈச்வரனுடைய காக்கும் தன்மையைச் சொல் -லுகிற அகாரத்திலே காப்பதற்கு உபயோகப்படும் கல்யாண குணங்களைச் சொல்லுகையாலே. நாராயணன் விஷயமான இந்த அடிமைத் தன்மையும் அந்த குணம் காரணமாக வந்த தென்கை. ஆகையால், இதுவும் இன்பமயமாயிருக்கக் குறையி-ல்லை என்று கருத்து.

*தோற்றுவாய் : ஆனால், செயற்கையாக குணங்காரண-மாக வந்த இந்த அடிமை இயற்கையான தன்னியல்புக்குப் பொருந்தியதல்லவே என்ன, அருளிச் செய்கிறார்.*

## மூ . சூ .55 சேஷத்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபம்.

**விரிவுரை :** *அதாவது, உகந்த விஷயத்தில் இதன் இன்ப-மயமாகைக்குக் குணங்களடியாகக் காரணத்தைச் சொல்-லுகையாலே, குணங்களடியாக வருகை இங்கும் உண்டென்னுமிடத்துக்குச் சொன்னது தவிர, அர்த்த ஸ்திதியை நிரூபிக்கும்போது,* **"ஸ்வத்வமாத்மநி ஸஞ்ஜாதம் ஸ்வாமித்வம் ப்ரஹ்மணி ஸ்திதம்".**

**ஸ்வத்வம்** - *சொத்தாயிருக்கும் தன்மை.* **ஆத்மநி** - *ஆத்மாவினிடத்தில்,* **ஸஞ்ஜாதம்** - *உண்டாயிருக்கிறது.* **ஸ்வாமித்வம்** - *யஜமாநத்வம்.* **ப்ரஹ்மணிஸ்திதம்** - *ப்ரஹ்மத்தினிடத்தில் நிலைத்திருக்கிறது.*

**"ஆத்மதாஸ்யம் ஹரேஸ்வாம்யம் ஸ்வபாவஞ்சஸதாஸ்மர"**

**ஆத்மதாஸ்யம்** - *ஆத்மாவினிடத்தில் அடிமைத் தன்மையும்,* **ஹரேஸ்வாம்யம்ச** - *ஹரியினிடத்தில் ஸ்வாமி-யாயிருக்குந் தன்மையுமே,* **ஸ்வபாவம்** - *இயல்பாகவே உள்ளன என்று,* **ஸதாஸ்மர** - *எப்போதும் நினைவிற் கொள்.*

**"தாஸபூதாஸ் ஸ்வதஸ்ஸர்வே ஹ்யாத்மாந: பரமாத்மந : நாந்யதா லக்ஷணம் தேஷாம் பந்தேமோக்ஷே ததைவச"**

*பரமாத்மந :* - *பரமாத்மாவுக்கு,* **ஸர்வே ஆத்மாந :** - *எல்லா ஆத்மாக்களும்,* **ஸ்வத :** - *இயல்பான ஸ்வரூபத்தா-லேயே,* **தாஸ பூதா :** - *தாஸ பூதர்களாய் நிலைபெற்றவர்கள்,* **ஹி** - *அன்றோ,* **தேஷாம்** - *அவர்களுக்கு,* **பந்தே** - *பந்த நிலையிலும்,* **மோக்ஷே** - *மோக்ஷ நிலையிலும்,* **அந்யதா** - *வேறான ஸ்வதந்திரத்தன்மை,* **லக்ஷணம் ந** - *தனக்கே உரித்-தான லக்ஷணமன்று.*

*இவை முதலானவைகளிலே (சேஷத்வத்தை) பகவா-னுக்கடிமையை ஆத்மாவுக்கு (ஸ்வாபாவிகமாக) இயல்பாகச்*

சொல்லுகையாலே (சேஷத்வமே) அடிமையே ஆத்மாவுக்கு ஸ்வரூப மென்கை.

தோற்றுவாய் : சேஷத்வமே என்று தேற்றேவகாரத்தால் சொல்லுவானென்? ஜ்ஞாநம், ஆநந்தம் இவைகளை ஸ்வரூபமாக உள்ள ஆத்மாவுக்கு அடிமை அல்லாத போதும் ஸ்வரூபம் இல்லையோ? என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 56 . சேஷத்வமில்லாதபோது ஸ்வரூபமில்லை .**

விரிவுரை : (சேஷத்வமில்லாதபோது) பகவானுக்கு அடிமையில்லாதபோது ஆத்மாவை அபஹரிப்பதான ஸ்வாதந்த்ரிய புத்தி நடக்கையாலே, (ஸ்வரூபம்) ஆத்மாவின் இயல்பு அழிந்துவிடும் என்னுமத்தைச் சொல்லுகிறார் மேலிரண்டு வாக்யத்தாலே.

**மூ . சூ . 57 . ஆத்மாபஹாரமாவது - ஸ்வதந்த்ரமென்கிற நினைவு; ஸ்வதந்த்ரமாம்போது இல்லையாய் விடும் .**

விரிவுரை : அதாவது, "யோந்யதாஸந்தமாத்மாநம் அந்யதாப்ரதிபத்யதே, கிம்தேந நக்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா"

ய: - எவன், அந்யதாஸந்தம் - வேறுவகையாயிருக்கிற (பகவச் சேஷமாயிருக்கிற), ஆத்மாநம் - ஆத்ம வஸ்துவை, அந்யதா - ஸ்வதந்த்ரமாக, ப்ரதிபத்யதே - நினைக்கிறானோ, ஆத்மாபஹாரிணா - ஆத்மாவை அபஹரித்தவனான, தேந சோரேண - அந்தத் திருடனால், கிம்பாபம் - எந்தப் பாபம், நக்ருதம் - செய்யப்படவில்லை. அதாவது, ஆத்மாபஹாரஞ் செய்தவன் எல்லாப் பாபங்களும் செய்தவனாகிறான் என்றபடி.

ஆக, 'அ' காரத்தின் இயல்பாலே சொல்லப்பட்ட பொருளான ஈச்வரனுடைய காரணத்வமும், வினைப் பகுதி அர்த்தமான ரக்ஷகத்வமும், அர்த்த பலத்தால் வந்த திருமகள்

கேள்வனாந்தன்மையும், வேற்றுமையுருபால் கிடைத்த சேதநனுடைய சேஷத்வ எதிர்த்தலையான சேஷித்வமும் ஆகிற அகாரார்த்தத்தை அருளிச் செய்தாராயிற்று.

தோற்றுவாய் : பிறகு, ப்ரணவத்திலிருக்கும் மூன்றெழுத்துக்களில் நடுவெழுத்தான உகாரத்துக்கு அர்த்தம் அருளிச் செய்வதாக ஆரம்பிக்கிறார்.

**மூ . சூ . 58 . ஸ்தாந ப்ரமாணத்தாலே உகாரம் அவதாரணார்த்தம் .**

விரிவுரை : அதாவது, "**ததேவபூதம் ததுபவ்யமா இதம்" பூதம்** - கழிந்த காலத்துப் பொருளும், **ததேவ** - அந்த ப்ரஹ்மமே, **பவ்யமாயிதம்** - எதிர்கலப் பொருளாக இருப்பதும் (நினைப்பதும்,) **தது** - அந்த ப்ரஹ்மமே.

**"ததேவாக்நிஸ் தத் வாயுஸ் தத் ஸூர்யஸ்தது சந்த்ரமா:"**

**அக்நி :-** அக்நியும், **ததேவ** - அந்த ப்ரஹ்மமே, **வாயு :** - காற்றும், **ததேவ** - அந்த ப்ரஹ்மமே, **ஸூர்ய :-** சூர்யனும், **ததேவ** - அந்த ப்ரஹ்மமே, **சந்த்ரமா :-** சந்திரனும், **தது** - அந்த ப்ரஹ்மமே.

இவைகளில், கழிந்த காலப் பொருளைக் காட்டும்போது, '**ததேவ**' அந்த ப்ரஹ்மமே என்றும், எதிர்காலப் பொருளைக் காட்டும் போது, '**தது-ததேவ**' என்று முன் சொன்ன ஏவகாரமே, '**தது**' என்று உகாரமாக மாறிவந்துள்ளதும்,

அக்நியும், ததேவ - அந்த ப்ரஹ்மமே என்றும், வாயுவும், ததேவ - அந்த ப்ரஹ்மமே என்றும், ஸூர்யனும், ததேவ - அந்த ப்ரஹ்மமே என்றும் சொல்லி சந்திரனும் அந்த ப்ரஹ்மமே என்றும் சொன்ன இடத்தில், 'தது' என்று உகாரமாக மாறி வந்ததுங் காண்க.

இவை முதலான இடங்களிலே ஏவ்காரத்தை உபயோகிக்குமிடத்தில் உகாரத்தை உபயோகிக்கக் காண்கை-

யாலே, ஸ்தாந ப்ரமாணத்தாலே உகாரம் ஏவகாரார்த்தத்தை உடைத்தாயிருக்குமென்கை.

*ஸ்தானப்ரமாணமாவது* :- ஒரு பதம் இருக்க வேண்டிய இடத்தில் ஒரே பொருளைத்தருகிற வேறே ஒரு பதம் உபயோகித்தால் முன்னிருந்த பதத்தின் பொருளே அந்த பதத்துக்கும் ஆகிவருவது. ஏவகாரம் இருக்க வேண்டி-யிடத்தில் உகாரம் இருத்தலால், உகாரத்துக்கு ஏவகாரத்தின் பொருளைக் கொள்ள வேண்டியதென்கை.

**தோற்றுவாய்** : ஏவகாரத்துக்கு அயோக வ்யவச் சேதமாதல், அந்யயோக வ்யவச்சேதமாதல், அர்த்தம் ஆகையாலே, இந்த ஏவகாரத்துக்கு எது? அர்த்தம் என்ன, அருளிச் செய்கிறார். இங்கு அயோக வ்யவச்சேதம் என்றும் அந்யயோக வ்யவச் சேதம் என்றும் உள்ளதாவது: ஒரு பொருளுக்கு உள்ள தொடர்பை இல்லையென்று சொன்-னால், இல்லை என்றதைத் தள்ளி உள்ளதை உண்டென்று குறிப்பிடுவது யாதோ அதுவே அயோக வ்யவச் சேதம்.

**உதாரணம்** : *'சங்கம்'* வெண்மை அல்ல என்று சொன்னால் அதைத்தள்ளி 'சங்கம்' வெண்மையே என்று நிர்ணயிப்பதுவே இது. சங்கம் ஆகிய முதற்பொருளோடு கூடியுள்ள வெண்மையாகிற கருப்பொருளின் தொடர்பு உண்டென்பது கருப்பொருளோடு கூடிய ஏவகாரம்.

ஒரு முதற் பொருளுக்கேயுள்ள கருப்பொருளின் தொடர்பை அங்ஙனமில்லாத பிறிதொன்றுக்குத் தொடர்பு படுத்தினால் அதைத் தள்ளிக் குறிப்பிட்ட பொருளுக்கே உள்ளதென்று நிரூபிப்பது அந்யயோக வ்யவச்சேதம். உதாரணம் : அர்ச்சுனனே வில்லில் வல்லவன். அதாவது, மற்றவர்களும் வில்லில் வல்லவர்கள் என்றதைத்தள்ளி 'அர்ச்சுனனே வில்லாளி' என்று அர்ச்சுனன் என்ற முதற் பொருளோடு கூடிய முழு வல்லமை இல்லை என்று பிறிதின் இயல்வை நீக்கிக் குறிப்பிட்டவனுக்கே உண்டென்பதாம் இந்த ஏவகாரம். இங்கு முதற்பொருள் என்பதை விசேஷ்யம் என்றும் கருப்பொருள் என்பதை விசேஷணம் என்றும் சொல்லுவர்.

தோற்றுவாய் : அவதாரணத்துக்கு (பிரிநிலை ஏவகாரத்திற்கு)அர்த்தம் அயோக வ்யவச்சேதமாதல், அந்யயோக வ்யவச்சேதமாதல் ஆகையாலே, இவ்வதாரணத்தால் சொல்கிறது எது? என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 59 . இத்தால், பிறர்க்கு சேஷம் அன்று என்கிறது .**

விரிவுரை : அதாவது, ஏவகாரமான இந்த உகாரத்தால் கீழ் ஈச்வர சேஷமாகச் சொன்ன இந்த ஆத்மாவானது, பிறர்க்கு சேஷம் அன்று என்னுமிடத்தைச் சொல்லுகிறது என்கை.

நான்காம் வேற்றுமையால் எம்பெருமானுக்கு அடிமை என்று சொல்லியிருக்கப் பிறர்க்கு அடிமை என்பது உண்டாகுமோ? என்னில், உலகிலே ஒருவனுக்கு அடிமையான வீடு, நிலம், பிள்ளை, வேலைக்காரி, வேலைக்காரர் இவைகள் பிறர்க்கும் அடிமையாகக் காண்கையாலே அத்தகைய பிறர்க்கு அடிமை இந்த இடத்திலும் உண்டோ? என்று ஒரு ஐயம் உண்டாகுமன்றோ? ஆகையாலே அத்தகைய பிறர்க்கு அடிமை இங்கு இல்லை என்பதைச் சொல்லுகிறது உகாரம்.

தோற்றுவாய் : அங்ஙனன்றிக்கே அந்த உகாரத்தால் பிராட்டிக்கு அடிமை என்று சொல்லுகிறது என்பாரும் உண்டென்கிறார்.

**மூ . சூ .60. பெரிய பிராட்டியாருக்கு சேஷமென்கிற தென்றுஞ் சொல்லுவர்கள் .**

விரிவுரை : அதாவது,

**"அகாரச்சித்ஸ்வரூபஸ்ய விஷ்ணோர் வாசக இஷ்யதே,
உகாரச்சித்ஸ்வரூபாயா; ஶ்ரீயோ வாசீததாவிது:
மகாரஸ்துதயோர் தாஸ இதி ப்ரணவ லக்ஷணம்"**

**"அகாரேணோச்யதே விஷ்ணுஸ் ஸர்வலோா கேச்வரோஹரி: உத்த்ருதா விஷ்ணு நா லக்ஷீமீ : உகாரேணோச்-**

யதே ஸதா மகாரஸ்து தயோர்விப்ர ஸ்ரீநாராயண யோஸ்ஸதா ஆத்மநஸ்சேஷ பூதஸ்ய வாசக: ச்ருதி சோதித:"

*அகார:- அகாரமானது, சித்ஸ்வரூபஸ்யா - ஜ்ஞாநஸ்வரூபனான, விஷ்ணோர்வாசக: - விஷ்ணுவுக்குப் பெயராக, இஷ்யதே - இச்சிக்கப் படா நின்றது, ததா - அப்படியே, உகார: - உகாரமானது, சித்ஸ்வரூபாயா - ஜ்ஞாந ஸ்வரூபையான, ச்ரய : வாசீ - ஸ்ரீதேவிக்குப் பெயராக, விது - அறிகிறார்கள், மகாரஸ்து - மகாரமோவென்றால், தயோ : தாஸ : - அவ்விருவருக்கும் தாஸ பூதனான, ஆத்மாவாகச் சொல்லப்படுகிறது, இதி ப்ரணவ லக்ஷணம் - இது ப்ரணவ லக்ஷணம், விப்ர - ப்ராஹ்மணனே! ஸர்வலோகேச்வர: - அனைத்துலகங்களுக்கும் இறைவனாம், விஷ்ணு :- ஸர்வவ்யாபகனும் ஆன, ஹரி :- ஹரியானவன், அகாரேண உச்யதே - அகாரத்தாலே சொல்லப்படாநின்றான், விஷ்ணுநா - அந்த விஷ்ணுவாலே, உத்த்ருதா - எப்போதும் திருமார்பிலே தரிக்கப்படுகிற, லக்ஷ்மீ - லக்ஷ்மியானவள், ஸதா உகாரேண உச்யதே - எப்பொழுதும் உகாரத்தாலே சொல்லப்படா நின்றாள், மகாரஸ்து - மகாரமோவென்றால், தயோ : ஸ்ரீநாராயணயோ :- அந்த ஸ்ரீ நாராயணர்களாகிய இவர்களிருவர்க்கும், ஸதா சேஷபூதஸ்ய ஆத்மாந :- எப்போதும் சேஷ பூதனான ஆத்மாவுக்கு, வாசக:- பெயராக, ச்ருதிசோதித : வேதங்களால் சொல்லப்பட்டிருக்கிறது என்றும், இவை முதலான பகவச் சாஸ்திரங்களிலே அகாரத்தைப் பெருமானுக்குப் பெயராகவும், உகாரத்தைப் பிராட்டிக்குப் பெயராகவும், மகாரத்தை இவ்விருவர்க்கும் அடியானான ஜீவனுக்குப் பெயராகச் சொல்லுகையாலே, உகாரத்தை ஏவகாரமாகக் கொள்ளாதே பிராட்டி பெயராகக் கொண்டு, இவ்வுகாரத்தாலே பெரிய பிராட்டியார்க்கு அடிமை என்கிற தென்றும் நிர்வஹிப்பார்களென்கை.*

**தோற்றுவாய் : இப்படிச் சொல்வதை விட முன் சொன்ன பொருளே முக்கியமென்றருளிச் செய்கிறார்.**

**மூ. சூ. 61. அதிலும், அந்ய சேஷத்வங்கழிகை-யே ப்ரதாநம்.**

*விரிவுரை :* பெரிய பிராட்டியார்க்கு அடிமை என்கிற-தைவிட கீழ்ச் சொன்ன பகவானுக்கு அடிமை என்பதற்கு விரோதியான பிறர்க்கடிமை என்பது கழிகையே முக்கியமாகக் கொள்ளக் கடவது என்கிறார்.

*தோற்றுவாய் :* பிறர்க்கடிமை என்பது இப்படி கொடி-யதோ? என்ன, அதன் கொடுமையை உதாரண முகத்தாலே காட்டுகிறார்.

**மூ. சூ. 62. தேவர்களுக்கு சேஷமான புரோ-டாசத்தை நாய்க்கிடுமாபோலே, ஈச்வரசேஷமான ஆத்ம வஸ்துவை ஸம்ஸாரிகளுக்கு சேஷமாக்குகை.**

*விரிவுரை :* அதாவது, ஆராதிக்கப்படுகிற இந்திரன் முதலான தேவர்களுக்குச் சுவைமிக்கதாக கல்பிக்கப்பெற்ற அவிர் பாகத்தைக் காணவும், தொடவும் தகுதியற்ற தாழ்மையை உடைத்தான நாய்க்கு இடுமாபோலே இருப்பதொன்று, தகுந்த எஜமானான பகவானுக்கு அடிமையான ஆத்மாவை பகவானில் மிக மிகத் தாழ்ந்தவர்களான ஸம்ஸாரிகளுக்கு அடிமையாக்குகை என்கை. இங்கு, ஸம்ஸாரி என்பது; தேவர்கள் முதலானவர்-களைக்குறிக்கும்.

*தோற்றுவாய் :* இப்படிக் கொடியதான பிறர்க்கடிமை என்பது கழிகையே முக்கியமான கொள்கை என்று கீழ்ச் சொன்ன அர்த்தத்தை திடப்படுத்துகிறார்.

**மூ. சூ. 63. பகவச் சேஷத்வத்திலும் அந்ய சேஷ-த்வம் கழிகையே ப்ரதாநம்.**

*விரிவுரை :* அதாவது, பிராட்டிக் கடிமை என்பதிலுங்-காட்டில் பிறர்க்கடிமை என்பது கழிகையே ப்ரதாநம் என்பது மட்டுமல்ல, பகவானுக்கு அடிமையாயிருக்கும் அதிலுங்-காட்டில் பிறர்க்கடிமை என்பது கழிகையே ஆத்மாவுக்கு முக்கியக் கொள்கையாகும் என்கை.

தோற்றுவாய் : இதற்கு ப்ரமாணங் காட்டுகிறார்.

**மூ . சூ . 64 . "மறந்தும் புறந்தொழாமாந்தர்" என்கையாலே .**

விரிவுரை : அதாவது, யமகிங்கர ஸம்வாதத்தைத் திருமழிசைப்பிரான் அருளிச் செய்த "திறம்பேன்மின் கண்டீர்" என்கிற பாட்டிலே பாகவத லக்ஷணஞ் சொல்லுகிற அளவில் "திருவடிதன்நாமம் மறந்தும் புறந்தொழா மாந்தர்" என்று ஸ்வாமியானவனுடைய திருநாமத்தை மறந்தார்களாகிலும், மற்றொரு விஷயத்தில் அடிமைத் தொழில் செய்யாதவர்கள் என்று சொல்லுகையாலே என்கை.

தோற்றுவாய் : பகவானுக்கு அடிமையான ஆத்மவஸ்து தனக்கும் அடிமையாயிருக்கை, பகவான் தவிர்த்த மற்றவர்களுக்கடிமையாயிருத்தல் என்ற இரண்டும் அந்யசேஷத்வமாகையாலே இவ்விரண்டையும் இந்த உகாரம் கழிக்கிறதென்று சொல்லி முடிக்கிறார்.

**மூ . சூ . 65 . இத்தால் , தனக்கும் பிறர்க்கும் உரித்தன்று என்கிறது .**

விரிவுரை : அதாவது, அந்யசேஷத்தைக் கழிக்குமதான இந்த உகாரத்தால், (அந்யரில்) பிறரில் தானும் ஒருவனாகையாலே தனக்கும்தான் உரிமை என்பது கூடாது. அதுபோல தன்னையொழிந்த மற்றவர்களான மனிதருக்கும் (மற்ற தெய்வங்களுக்கும்) உரிமைபடுதல் கூடாது என்பதை தெரிவிக்கிறது இந்த உகாரம். ஆக, உகாரார்த்தம் அருளிச் செய்தாராயிற்று.

தோற்றுவாய் : பிறகு மூன்றாம் எழுத்தாகிய மகாரார்த்தத்தை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 66 . மகாரம் இருபத்தைந்தாம் அக்ஷரமாய் (எழுத்தாய்), ஜ்ஞாநவாசியுமாயிருக்கையாலே ஆத்மாவைச் சொல்லுகிறது .**

*விரிவுரை : அதாவது, வடமொழிப்படி,*

"பூதாநிச கவர்க்கேண சவர்க்கேணேந்த்ரியாணிச
டவர்கேண தவர்கேண ஜ்ஞாந கந்தாதயஸ்ததா மந :
பகாரேணைவோக்தம் பகாரேணத்வஹங்க்ருதி:
பகாரேண பகாரேண மஹாந் ப்ரக்ருதிருச்யதே,
ஆத்மாது ஸமகாரேண பஞ்சவிம்ச : ப்ரகீர்த்தித :"

*கவர்க்கேண* - 'KA, KKA, GA, GGA, ங' என்ற பிரிவுகளுடைய கவர்க்கத்தாலே, *பூதாநிச* - 'ச, ச்ச, ஜ, ஜ்ஜ, ஞ' என்ற பிரிவுகளையுடைய சவர்க்கத்தாலே, பூதங்களைந்தும், **இந்த்ரியா- ணிச** - வாக்கு, பாதம், பாணி, பாயு, உபஸ்தம் ஆகிய கர்மேந்த்ரியங்களைந்தும், **டவர்கேண** - 'ட, ட்ட, DA, DDA, ண' ஆகிய டவர்க்கத்தால், **ஜ்ஞாந** - ஜ்ஞாநேந்திரியங்- களைந்தும், **தவர்கேண** - "THA, TTHA, DHA, DDHA, ந" என்ற தவர்க்கத்தால், **கந்தாதய** :- ஓசை, ஊறு ஒளி, சுவை, மணம் ஆகிய ஐந்து புலன்களும்.

**பகாரேண** - 'ப' என்ற எழுத்தால், **மந** : - மநஸ்ஸும், **பகாரேண** - 'ப்ப' என்ற எழுத்தால், **அஹங்க்ருதி** - அஹங்காரமும், **உக்தம்** - சொல்லப்படுகிறது, **பகாரேண** - BA என்ற எழுத்தால், **மஹாந்** - மஹத்தும், **பகாரேண** - BBA என்ற எழுத்தால், **ப்ரக்ருதி** - மூலப்ரக்ருதியும், **உச்யதே** - சொல்லப்படுகின்றன, **மகாரேண** - 'ம' காரத்தால், **ஸ : ஆத்மாது** - அந்த ஆத்மவோ, **பஞ்சவிம்ச** : - இருபத்தைந்தாம் அவனாக, **ப்ரகீர்த்தித** : - சொல்லப்பட்டுள்ளான்.

என்கிறபடியே நிலம் முதல் மூலப்ரக்ருதி ஈறாக இருபத்து நாலு தத்துவங்களுக்கும் பெயராயிருந்துள்ள ககாரம் முதல் 'ப' என்ற எழுத்தீறாக உள்ள இருபத்து நாலு எழுத்துக்கள் போலன்றிக்கே, மகாரம் இருபத்தைந்தாம் அக்ஷரமாய், மகாரம்"மந்யதே இதி மம்" என்றாவது "மநுதே இதி மம்" என்றாவது, மகாரத்துக்கு வ்யுத்பத்தி. 'மநஜ்ஞாநே' 'மந' என்ற வினைப்பகுதி, ஜ்ஞாநே - ஜ்ஞாநார்த்தத்தில், அல்லது 'மநு அவபோதநே, மநு - என்ற வினைப்பகுதி அவபோதநே'. போதம் என்ற ஜ்ஞாநார்த்தத்தில் வரும்

என்கிற தாதுவாம் வினைப்பகுதி காட்டப்பட்டிருப்பதால் ஜ்ஞாநத்துக்குப் பெயராயிருக்கையாலே, "பஞ்சவிம்சோயம் புருஷ:" - அயம்புருஷ : ஆத்மாவாகிற இந்த புருஷன், பஞ்சவிம்ச :- இருபத்தைந்தாம் தத்துவமானவன்.

"பஞ்சவிம்சஆத்மாபவதி" ஆத்மா - ஆத்மாவான-வன், பஞ்ச விம்ச : பவதி - இருபத்தைந்தாவது தத்துவமாகி-றான். இவை, இருபத்தைந்தாம் தத்துவம் ஆத்மா என்று காட்டுவதாம். " விஜ்ஞாநாத்மா புருஷ:" புருஷ: - ஜீவன், விஜ்ஞாநாத்மா - ஜ்ஞாநஸ்வரூபன், இது ஆத்மா ஞான வடிவமானவன் என்று காட்டும்.

"விஜ்ஞாதாரமரே கேந விஜாநீயாத்" அரே - ஏ, சிஷ்யனே, விஜ்ஞாதாரம் - குணமான, ஞாநத்தால் அறியுந்-தன்மையனான ஆத்மாவை, கேந - எதனால், விஜாநீயாத் - அறியவாம். (எம்பெருமானருளால் இவனை அறியலாமென்-பதனைக் காட்டுமென்பர்). இதனால் ஜீவன் ஞாந குணகன் என்றது. இவற்றால், ஆத்மா இருபத்தைந்தாம் தத்துவமாயும், ஞாநவடிவனாயும், ஞானத்தைக் கருவியாக உடைய ஞாந குணகனாயும் இருப்பான் என்பதாம்.

தோற்றுவாய் : கீழ்ச் சொன்ன அடிமைத் தன்மை அனைத்து ஆத்மாக்களுக்கும் பொதுவாகையாலே நித்ய, முக்த, பத்த என்கிற மூன்று வர்க்க ஆத்மாக்களையும் சொல்ல வேண்டுகையாலே அதை அருளிச் செய்கிறார்.

## மூ . சூ . 67 . இதுதான் ஸமஷ்டி வாசகம் .

விரிவுரை : இப்படி ஆத்மாவின் பெயரான இந்த மகா-ரந்தான் ஆத்ம கணங்கள் அனைத்துக்கும் பெயராமென்கை. அதாவது, ஆத்மாக்களின் பன்மையைச் சொல்லுகிறது.

தோற்றுவாய் : ஆத்மா என்ற ஒருமைப் பெயர் பன்-மைப் பொருள்களைக் காட்டுவதெப்படி? என்ன, அருளிச் செய்கிறார்.

## மூ . சூ . 68 . ஜாத்யேக வசநம் .

விரிவுரை : அதாவது, நெல்குவியலைச் சொல்லு-கிறவன், ‘இது ஒரு நெல்’ என்றால் அந்த ஒருமைச் சொல் இன முழுமையையும் காட்டுமாபோலே, ஒரு ஆத்மாவைச் சொன்-னால் அந்த ஆத்ம ஜாதி அனைத்தும் காட்டும் ஒருமைச் சொல்லாகும் என்றபடி.

தோற்றுவாய் : இந்த மகாரத்தால் ஆத்மாவினுடைய எந்த நிலையைச் சொல்லுகிறது? என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 69 . இத்தால், ஆத்மா ஜ்ஞாதா என்று தேஹத்தில் வ்யாவ்ருத்தி சொல்லிற்றாயிற்று .**

விரிவுரை : அதாவது, இருபத்தைந்தாம் எழுத்தாய் ஞாநத்துக்குப் பெயருமாயிருந்துள்ள இந்த மகாரத்தால் அடிமைக்குரித்தான ஆத்மா ஞாநத்துக்கு ஆதாரமா-யிருப்பவன் என்று (அசேதநமான) அறிவில்லாத தேஹத்திற் காட்டில் ஆத்மாவின் வேற்றுமையைச் சொல்லிற்றாயிற்று, என்கை.

தோற்றுவாய் : ‘நான் மநுஷ்யன், நான் தேவன், நான் இளைத்திருக்கிறேன், நான் பருத்திருக்கிறேன்’ என்று உடம்பில் ‘நான்’ என்ற புத்தி நடவா நிற்க, ‘நான்’ என்ற சொல்லுக்குப் பொருளான ஆத்மா தேஹத்தில் வேறுபட்ட-வன் என்று சொல்வதெப்படி? என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ.சூ.70 . தேஹத்தில் வ்யாவ்ருத்தி தத்வசேகர-த்திலே சொன்னோம் .**

விரிவுரை : அதாவது, பல காரணங்களாலே தேஹத்தி-ல் ஆத்ம தன்மையில்லாமையைச் சாதியா நின்று கொண்டு, ஆத்மாதேஹத்தைக் காட்டிலும் வேறுபட்டது என்பதை ‘தத்வசேகரம்’ என்ற நூலிலே தெளியச் சொன்னோம். அதிலே கண்டு கொள்வதென்கை.

தோற்றுவாய் : தர்மியான ஆத்மாவைச் முதலில் சொ-ல்லி, இதன் தர்மமான அடிமையைப் பின் சொல்வது முறையாயிருக்க, இந்த ப்ரணவத்தில் முதலில் அடிமையைச்

சொல்லி, பிறகு ஆத்மாவைச் சொல்வானென்ன? என்ற கேள்விக்கு, அப்படிச் சொல்லுகைக்குக் காரணத்தை அருளிச் செய்கிறார்.

**மூ. சூ. 71. மணத்தையும், ஒளியையுங் கொண்டு, பூவையும், ரத்நத்தையும் விரும்புமாபோலே, சேஷமென்று ஆத்மாவை ஆதரிக்கிறது; அல்லாத-போது "உயிரினாற் குறைவிலம்" என்கிறபடியே த்யாஜ்யம்; அது தோன்ற சேஷத்வத்தைச் சொல்லிப் பின்னை ஆத்மாவைச் சொல்லுகிறது.**

விரிவுரை : அதாவது, மணத்துக்கு ஆதாரமா-யிருப்பதால் பூவை விரும்புமாபோலேயும், ஒளிக்கு ஆதாரமென்று ரத்நத்தை விரும்புமாபோலேயும், அடிமைத் தன்மைக்கு ஆதாரமென்றாயிற்று ஆத்மாவை விரும்புகிறது. (சேஷத்வ) அடிமைத்தன்மை சேராதபோது "உயிரினாற்-குறைவிலம்" என்கிறபடியே 'சேஷத்வ நீக்கமான ஆத்மாவில் விருப்பமுடையோமல்லோம்' என்கிறபடியே தள்ளுபடிக்கு-ரிய னாமித்தனை. இப்படி இருந்துள்ள சேஷத்வத்தின் ஊற்-றந் தோற்ற அடிமையை முன்னர் சொல்லிப் பின்னர் ஆத்மா-வைச் சொல்லிற்றாயிற்றென்கை.

தோற்றுவாய் : மூன்று பதங்களின் கூட்டான இந்தப் ப்ரணவத்தால் சொல்லித் தலைக்கட்டின் அர்த்தத்தைத் திரள அருளிச் செய்கிறார்.

**மூ. சூ. 72. ஆக, ப்ரணவத்தால் "கண்ணபுர-மொன்றுடையானுக்கடியேன் ஒருவர்க்குரியேனோ" என்கிறபடியே ஜீவபரஸம்பந்தஞ் சொல்லிற்று.**

விரிவுரை : ஆக என்று தொடங்கி அதாவது, கீழ்ச் சொன்ன எல்லா வற்றிலும், ப்ரணவத்தால் "கண்ணபுர-மொன்றுடையானுக்கு" என்று நான்காம் வேற்றுமையை ஈற்றிலே உடைய அகாரார்த்தத்தையும் "அடியேன்" என்று அடிமைத்தன்மையைக் காட்டக் கூடிய மகாரத்திலர்த்தத்-

தையும், "ஒருவர்க்குரியேனோ" என்று; அந்யசேஷத்வத்தைக் கழிக்குமதான உகாரார்த்தத்தை அருளிச் செய்த திருமங்கை-யாழ்வார் அருளிச் செயலின் படியே, ஜீவ பரர்களுக்குண்-டான சேஷசேஷிபாவ (அடியான் ஆண்டான் என்ற) ஸம்பந்தத்தைச் சொல்லிற்றென்கை.

தோற்றுவாய் : இன்னமும் பொய்கையாழ்வாருடைய அருளிச் செயலாலே, அடியானுக்கு பற்றுக்கோடாக இருப்பது ஒரு மிதுநம் என்னுமிடந் தோற்ற, இந்த ஜீவ பரஸம்பந்தத்தை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 73 . இத்தால், "தாமரையாள் கேள்வன் ஒருவனையே நோக்கு முணர்வு" என்றதாயிற்று .**

விரிவுரை : அதாவது, இந்த ப்ரணவத்தால் "தாமரை-யாள் கேள்வன்" என்று அகாரத்தைப் பெயராக உடையவ-னாய் சேஷத்வத்துக்கு முன்னிலையான திருமகள் கேள்வனையும், 'ஒருவனையே நோக்கும்' என்று நான்காம் வேற்றுமை உகாரங்களால் சொல்லுகிற அவன் தவிர்த்த மற்றவற்றுக்குரித்தல்லாத சேஷத்வத்தோடு கூடிய ஆத்மாவி-னுடைய அவன் தனக்கே உரியனாந் தன்மையையும், "உணர்வு" என்று அந்த அடிமைக்கு ஆதாரமாக மகாரத்தால் சொல்லப்பட்ட ஜ்ஞாநமே நிரூபணியனான ஆத்மாவைஞ் சொல்லுகிற அருளிச் செயலின் படியே ஜீவப்ரஸம்பந்தம் சொல்லிற்றாயிற்றென்கை.

தோற்றுவாய் : அகாரத்தில் இயற்கையில் விளைந்த காரணத்வ - சேஷித்வ - ப்ரதாநமாக ப்ரணவார்த்தத்தை யோஜித்தார் கீழ் ; அதில், வினைப்பகுதியர்த்தப்ரதாநமாக ப்ரணவத்துக்கு இன்னமும் ஒரு யோஜனை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 74 . அகாரத்தாலும் மகாரத்தாலும் ரக்ஷகனையும் ரக்ஷ்யத்தையும் சொல்லிற்று; சதுர்த்தி-யாலும் உகாரத்தாலும் ரக்ஷணஹேதுவான ப்ராப்தி-யையும் பலத்தையும் சொல்லிற்று .**

**விரிவுரை** : அதாவது, அகாரத்தாலே ரக்ஷகனான நாராயணனாகிற ஈச்வரனைச் சொல்லிற்று; மகாரத்தாலே அவனால் ரக்ஷிக்கப்படுமதான ஆத்ம வஸ்துவைச் சொல்லிற்று; சதுர்த்தியாலே ரக்ஷிக்கைக்குக்காரணமான அடிமையான ஸம்பந்தஞ் சொல்லிற்று. இப்படி ரக்ஷிக்கைக்குப் பலம், இந்த ஆத்மாவானது அத்தலைக்கே உரித்தாக விநியோகப்படுகையாலே அவனுக்கே அர்ஹமென்றதுக்குப் பெயரான உகாரத்தாலே ரக்ஷண பலத்தைச் சொல்லிற்று.

ஆக, இம்மந்த்ரத்தில் முதல் பதமான ப்ரணவார்த்தத்தை அருளிச் செய்தாராயிற்று.

**தோற்றுவாய்** : இனி, மேலிற் பதங்களுக்கும் அர்த்தம் அருளிச் செய்வதாக (மந்த்ர சேஷமும்) மந்த்ரத்தின் மிச்சமான பாகமும் இந்த ப்ரணவத்துக்கு விவரணமாயிருக்கும் படியை முந்துற அருளிச் செய்கிறார்.

### மூ . சூ . 75 . இனிமேல் ப்ரணவத்தை விவரிக்கிறது .

**விரிவுரை** : அதாவது, இவ்விடத்தில் விவரணமாகிறது, சொல்லப்பட்ட அர்த்தத்துக்குப் பொருந்தியதான அர்த்தத்தைச் சொல்லிக் கொண்டு முன் சொன்ன அர்த்தத்தை விரிவு படுத்துகை என்று தீப ப்ரகாசத்திலும்,

**"உக்தார்த்த விசதீகார யுக்தார்த்தாந்தர போதநம் மதம்
விவரணம் தத்ர மஹிதாநாம் மநீஷிணாம்".**

(**உக்தார்த்த விசதீகார** - சொல்லிய அர்த்தத்தைத் தெளிவிப்பதென்ன, **யுக்தார்த்தாந்தரபோதநம்** - அவ்விடத்துக்குத்தக்க வேறு அர்த்தம் சொல்வதென்ன,

(இவை) **விவரணம்** - விவரணமென்று, **தத்ர** - அவ்விடத்தில், **மஹிதாநாம்** - மேன்மையுடையவரான, **மநீஷிணாம்** - பெரியோர்களுக்கு, **மதம்** - கொள்கையாகும் என்று ரஹஸ்யத்ரயார்த்த விவரணக்ரமம் அருளிச் செய்த

ப்ரபந்தத்திலும், விவரண லக்ஷணத்தை வாதிகேஸரி அழகிய மணவாளச் சீயர் அருளிச் செய்தார்.

தோற்றுவாய் : விவரிக்கிறபடிதான் எது? என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 76 . உகாரத்தை விவரிக்கிறது நமஸ்ஸு; அகாரத்தை விவரிக்கிறது நாராயண பதம்; மகாரத்தை விவரிக்கிறது சதுர்த்தி; நாரபதமென்றுஞ் சொல்லுவர்கள் .**

விரிவுரை : அதாவது, (அந்யசேஷத்வத்தை) பிறர்க்கடிமையாயிருக்கிற இவற்றைக் கழிக்கிற விடத்தில், பகவத் விஷயத்துக்கு வேறானவனென்பதில் தானும் சேர்ந்தவனாகிய தன்னை வெளிப்படையாகச் சொல்லிக் கழிக்கையாலே உகாரத்தை விவரிக்கிறது நமஸ்ஸு.

ரக்ஷிக்கிறவனான ஈச்வர ஸ்வரூபத்தையும், ரக்ஷிக்கப்படுகிற சேத நாசேதநங்களையும், ரக்ஷகத்வத்துக்கு உபயோகப்படுகிற அவன் குணம் முதலானவைகளையும், ரக்ஷிக்கும் விதத்தையும், விரியச் சொல்லுகையாலே அகாரத்தை நாராயணபதம் விவரிக்கிறது.

"நாகிஞ்சித் குர்வதச் சேஷத்வம்" - **அகிஞ்சித் குர்வத:**- கைங்கர்யம் செய்யாதவனுக்கு, **சேஷத்வம்** - சேஷத்வ -மானது, **ந** - இல்லை

**"அகிஞ்சித்கரஸ்ய சேஷத்வ அநுபபத்தி:"**

**அகிஞ்சித் கரஸ்ய** - கைங்கர்யம் செய்யாதவனுக்கு, **சேஷத்வ அநுபபத்தி:**- அடிமைத்தன்மையில்லை.

என்கிறபடியே அடிமையாகிற கிஞ்சித்காரமில்லாதபோது அடியானென்ற சேஷத்வ தன்மை இல்லாமையால் அந்த சேஷத்வ ஸித்திக் குறுப்பான அடிமையைச் சொல்லுகிற நான்காம் வேற்றுமை உருபு அடிமைக்குரியனான ஆத்மாவைச் சொல்லுகிற மகாரப் பொருளான ஆத்மாவினுடைய

நித்யத்வமாகிய அழிவின்மை, மாறுதலற்ற ஏகரூபத்வம், பன்மை முதலானவற்றைச் சொல்லுகையாலே மகாரத்தை விவரிக்கிறது நார பதமென்று ஞ் சொல்லுவார்கள் என்கை.

தோற்றுவாய் : ப்ரணவத்தின் அக்ஷரங்களமைந்த முறையில் விவரிக்காதே முரணான முறையில் விவரிப்பா-னேன்? என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 77 . அடைவே விவரியாதொழிகிறது, விரோதிபோய் அநுபவிக்க வேண்டுகையாலே .**

விரிவுரை : அதாவது, அக்ஷரங்களமைந்த முறையிலே விவரியாதொழிகிறது. அகாரவிவரணமான நாராயண பதத்-தில் சொல்லும் பகவதனுபவத்துக்கு விரோதியான அஹங்-கார, மமகாராதிகள் நமஸ்ஸாலே கழியுண்டு போய்ப் பின்னை அநுபவிக்க வேண்டுகையாலே என்கை.

தோற்றுவாய் : இனி, இரண்டாம் பதமான மத்ய பதமாம் நமஸ்ஸுக்கு அர்த்தம் அருளிச் செய்வதாக அதினுடைய உட்பிரிவை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 78 . நமஸ்ஸு, 'ந' என்றும் 'ம:'என்-றும் இரண்டு பதம் .**

விரிவுரை : அதாவது, 'நம :'- என்கிறபதம் 'ந' என்றும், 'ம:' என்றும் இரண்டு பதமாகவுள்ளது என்கிறார்.

தோற்றுவாய் : இவ்விரண்டு பதங்களுக்கும் அர்த்தம் எது? என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 79.'ம:' என்கிற இத்தால், தனக்குரியன் என்கிறது; 'ந' என்று அத்தைத் தவிர்க்கிறது .**

விரிவுரை : அதாவது, 'ம:' என்று ஆறாம்வேற்றுமை-யுருபை ஈற்றிலேயுடைய இந்த மகாரத்ததால், மகாரத்தின் பொருளான ஆத்மாவுக்குக் கீழ்ச்சொன்ன நான்காம் வேற்றுமையால் 'பகவத்விஷயத்தின் பொருட்டு' என்றதுக்கு எதிர்த்தட்டான 'தன்பொருட்டு' என்று தோற்றுகையாலே,

'தனக்குரியன்' என்னுமத்தைச் சொல்லுகிறது. 'ந' என்ற எதிர்மறைப் பொருளாகிற நஞ்சாலே (நகாரத்தாலே) அதைக்கழிக்கிறது என்று.

தோற்றுவாய் : இரண்டு பதங்களாலும் சொன்ன அர்த்தத்தைச் சேரப்பிடித்து அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 80 . ஆக, 'நம :' என்கிற இத்தால், 'தனக்கு உரியனன்று' என்கிறது .**

*விரிவுரை : அதாவது, 'நம :' என்ற முறையில் பொருள் சொல்லாதே "ம:ந" என்ற முரணான முறையில் சொன்னது. 'தனக்குரியன்' என்பது கொடுமைமிக்க தொன்றாகையாலே; கொடுமையை முன் சொல்லி அன்று என்பதைப் பின் சொன்னதாம். முறையில் சொல்லும்போது "வீடுமின்முற்றவும்" என்னுமாபோலே விடுகையை முன் சொல்லி விடவேண்டியதைப் பின் சொல்லுகிறதென்று யோஜிக்க வேணுமென்று பரந்தபடியிலே இவர்தாமே அருளிச் செய்தார்.*

தோற்றுவாய் : *'தனக்கும் பிறர்க்கும் உரித்தன்று' என்று, பகவத் விஷயம் தவிர்த்த மற்றவற்றுக்கு உரித்தன்று என்ற அந்ய சேஷத்வத்தைக் கழித்த உகாரத்தை விவரிக்கிறதாகில், பிறர்க்கு உரித்தன்றென்றத்தையும் விவரியாமல் 'தனக்குரியனன்று' என்று இத்தையே விவரிப்பானேன்? என்கிற ஐயத்திலே அருளிச் செய்கிறார்.*

**மூ . சூ . 81 . *பிறர்க்கு உரியனான அன்று தன் வைலக்ஷண்யத்தைக் காட்டி மீட்கலாம்; தனக்கென்னுமன்று யோக்யதையுங்கூட அழியும் .***

*விரிவுரை : அதாவது, பிறர்க்குரியனென்றபோது, அடிமைக்கு இசைகையாலே, பிறரில் காட்டில் பகவானுக்கு உண்டான ஸர்வகாரணத்வ, ஸர்வரக்ஷகத்வ, ஸர்வசேஷித்வம் முதலான மேம்பாடுகளைக்காட்டி, அந்நிலையில் நின்றும் மீட்கலாம். 'தனக்குரியன்' என்று நிற்குமன்று, 'நீ எனக்குரியன் என்றால், இல்லை; நான் எனக்கே உரியன்' என்னுமது*

அடிமைக்கு இசையாமையாலே மீட்கைக்குரிய தகுதியும் கூட இல்லையாய் விடுமென்கை. அதனால்தான் 'தனக்குரியன்' என்பதை முதலில் தவிர்க்க வேண்டுமென்கிறார்.

தோற்றுவாய் : இந்த நமஸ்ஸால் செய்யப்படுகிற செயல்தான் எது? என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ. சூ. 82. இத்தால், விரோதியைக் கழிக்கிறது.**

விரிவுரை : இத்தால் என்பது நமஸைக்குறிக்கும். அதுதான் விரோதியைக் கழிக்கிறது என்கிறார்.

தோற்றுவாய் : அதுதான் ஒன்றோ? பலவோ? என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ. சூ. 83. விரோதிதான் மூன்று.**

விரிவுரை : அந்த விரோதி தான் மூன்று என்கிறார்.

தோற்றுவாய் : அம்மூன்றுந்தான் எவை? என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ. சூ. 84. அதாவது, ஸ்வரூப விரோதியும், உபாய விரோதியும், ப்ராப்ய விரோதியும்.**

விரிவுரை : இத்தால், முதல் பதமாம் ப்ரணவத்தில் சொன்ன ஆத்ம ஸ்வரூபத்துக்கு விரோதியும், இந்த நமப்பதத்தில் அர்த்த பலத்தால் கிடைத்த உபாய விரோதியும், கடைசி பதத்தில் சொன்ன பயனுக்கு விரோதியுமென்கை. இந்த நமப் பதந்தான் காகாக்ஷிந்யாயத்தாலே முன்பின் பதங்களில் சொல்லுகிற ஸ்வரூப பலங்களின் விரோதிகளைக் கழிக்கக் கடவதாயன்றோ? இருப்பது.

தோற்றுவாய் : இந்த விரோதி மூன்றுங் கழிகையாவது தான் எது? என்ன, அது தன்னை அடைவே அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 85 . ஸ்வரூப விரோதி கழிகையாவது - "யானே நீ என்னுடைமையும் நீயே" என்றிருக்கை; உபாய விரோதிகழிகையாவது - "களைவாய் துன்பங்களையாதொழிவாய் களைகண்மற்றிலேன்" என்றிருக்கை; ப்ராப்ய விரோதிகழிகையாவது - "மற்றை நங்காமங்கள் மாற்று" என்றிருக்கை .**

விரிவுரை : ஸ்வரூபவிரோதி கழிகையாவது: தன்னியல்பான ஸ்வரூபத்துக்கு விரோதி, "யானே என்றனதே" என்றிருக்கையாகிற சுதந்திர புத்தியாகையாலே. இது கழிகையாவது, "யானே நீ என்னுடையையும் நீயே" என்று தானும் தன்னுடைமைகளும் எம்பெருமானுக்குச் சரீரங்களாக சேஷமாயிருக்கும் என்றிரு க்கை.

உபாயவிரோதி கழிகையாவது: அவனுக்குப் பரதந்திரனாய் அவனையே ரக்ஷகமாகக் கொள்ள வேண்டியதான ஆத்மா தற்காப்பில் தொடர்பு கொள்ளுதல் உபாய விரோதியாகையால், "**களைவாய் துன்பங்களையா தொழிவாய் களைகண்மற்றிலேன்**" என்று **என் துன்பங்களைப் போக்குவாய் போக்கா தொழிவாய். ஆனால்,** என்னையோ, பிறரையோ காப்பாக உடையேனல்லேன் என்றிருக்கை என்கை. பலத்துக்கு விரோதியாவது: பரதந்த்ரனானதான் தன்னலங்கருதுகையால் "**மற்றை நங்காமங்கள் மாற்று**" என்று உன்னுகப்புக்குப் புறம்பான என் ஆசையைப் போக்கு, என்றிருக்கை என்கை.

**தோற்றுவாய் :** இப்படி ஸ்வரூப, உபாய, பலங்களாகிய மூன்றுக்கும் விரோதியாகிறது, இவனுடைய அஹங்கார, மமகாரங்களாகையாலே இதனுடைய கொடுமையையும், இது கழிகையிலுண்டான நன்மையையும் அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 86 . "ம": என்கை ஸ்வரூபநாசம்;" நம:" என்கை ஸ்வரூப உஜ்ஜீவனம் .**

விரிவுரை : - அதாவது,

**"சேத நஸ்ய யதா மம்யம் ஸ்வஸ்மிந் ஸ்வீயே ச வஸ்துநி மம இத்யக்ஷரத்வந்த்வம் ததா மம்யஸ்ய வாசகம்."**

*சேதநஸ்ய - சேதநனுக்கு, யதா - எப்பொழுது, ஸ்வஸ்மின்-தன்னிடத்திலும், ஸ்வீயே ச வஸ்துநி - தன்னுடைமைமைகளின் பக்கலிலும், மம்யம் - (மம) என்னது என்ற புத்தி நடையாடுகிறதோ, ததா - அப்பொழுது, மம இதி - (மம) என்னது என்கிற, அக்ஷரத்வந்தவம் - இரண்டெழுத்-துக்களும், மம்யஸ்ய வாசகம் - அஹங்கார மமகாரத்துக்குப் பேராயிருக்கும், அஹம்மம - நான் எனக்கு உரியன், இதம் மம - இது எனக்கு உரியது என்று இரண்டிடங்களிலும் வருகிற அஹம் என்பதும், இதம் என்பதும் முறையே அஹங்கார மமகாரங்களென்று கொள்ளக் கூடாது; முறையே அவ்விரண்டிடங்களிலும் வருகிற 'மம' என்பதே அஹங்கார மமகாரத்துக்குப் பெயரென்றபடி. 'மம' என்ற இரண்டெழுத்-துக்களே அஹங்கார மமகாரங்களைத் தோற்றுவிக்கும். ம: என்கிற இதிலே அஹங்கார மமகாரங்கள் இரண்டும் உண்டாகையாலே இதிலே தொடர்புடையனாகை இந்த ஆத்மாவினுடைய பரமனுக்குவசப்பட்டிருக்கும் பரதந்த்ரமாம் ஸ்வரூபத்துக்கு நாசம். "நம:" என்று அதில் தொடர் பற்றிருக்கை ஸ்வரூபத்துக்கு உஜ்ஜீவநம்.*

**"த்வ்யக்ஷரஸ்து பவேந் ம்ருத்யுஸ் த்ர்யக்ஷரம் ப்ரஹ்மண : பதம், மமேதீத்வ்யக்ஷரோ ம்ருத்யுர் ந மமேதி ச சாச் வதம்"**

*த்வ்ய க்ஷ ரஸ்து - இரண்ட க்ஷ ரங்களோ, ம்ருத்யு: பவேத்-ஆத்மாவை அழிப்பது, த்ர்யக்ஷரம் - மூன்றக்ஷர-ங்களோ, ப்ரஹ்மண:பதம் - பரப்ரஹ்மஸ்தாநத்தை அளிப்பதாம்.*

*(அப்படிப்பட்ட இரண்டும் மூன்றுமாகிய அக்ஷரங்கள் தாம் எவை என்னில்?) மம இதி - மம என்கிற, த்வ்யக்ஷரம் - இரண்டு அக்ஷரங்களும், ம்ருத்யு:- மரணத்தை யளிப்பது, நமம இதிச - நமம என்கிற மூன்று அக்ஷரங்களும், சாச்வதம் - ஆத்மாவிற்கு நிலை நின்ற ஸ்வரூபம். என்று சொல்லிற்றன்றோ.*

தோற்றுவாய் : இப்படி ஸ்வரூப, உபாய, பல விரோதி-களைக்கழிக்கிற அளவன்றிக்கே இந்த நமஸ்ஸு தான், ஸ்வரூபம் முதலான மூன்றையும் தெற்றெனக் காட்டும் என்கிறார்.

**மூ . சூ . 87 . இதுதான்-ஸ்வரூபத்தையும், உபா-யத்தையும் பலத்தையும், காட்டும் .**

தோற்றுவாய் : இதுதன்னைச் சொல்லுகிறார் மேல் மூன்று வாக்யங்களாலே.

**மூ . சூ . 88 . "தொலைவில்லிமங்கலம் தொழும்" என்கையாலே ஸ்வரூபம் சொல்லிற்று; "வேங்கடத்-துறைவார்க்கு நம" என்கையாலே, உபாயஞ்சொல்-லிற்று; "அந்திதொழும்சொல்" என்கையாலே, பலம் சொல்லிற்று .**

விரிவுரை : "தொலை வில்லிமங்கலம்" இத்யாதி, "தொலைவில்லிமங்கலம் தொழும்" என்று, அவன் உகந்தருளின நிலத்தளவும் செல்ல சேஷமாயிருக்கும் படியைச் சொல்லுகிற அளவில், "தொழும்" என்று நமஸ்காரத்தைச் சொல்லுகையாலே, ஸ்வரூபம் சொல்லிற்று என்கை. "வேங்கடத்துறைவார்க்கு நம" என்று, 'திருவேங்கடமுடை-யானுக்கு அடிமை நான். எனக்குரியேனல்லேன்' என்று தற்காப்பில் தொடர்பில்லாத ஸ்வரூப பாரதந்த்ரயத்தைச் சொல்லுகையாலே, அவனே உபாயமென்னுமிடம் ஸித்திக்-கையாலே, உபாயஞ் சொல்லிற்று. "அந்திதொழும் சொல்" என்று அடிமைச் சுவை மிகுத்து, அதனுடைய முடிவெல்லை-யிலே தன்னலந்தோற்றிற்றோ என்று பயந்து சொல்லக் கடவ "தொழுஞ்சொல்" என்று நமஸ் சப்ததத்தைச் சொல்லுகை-யாலே, பலஞ்சொல்லிற்று என்கை.

இந்த நமஸ்ஸு தான் தனக்குரியன் என்ற சுதந்திரம் போய் பகவத் விஷயத்துக்கே (அர்ஹம்) உரியவன் என்ற பரதந்த்ரத்தைத் தோற்றுவிப்பதாலே சேஷத்வ பாரதந்த்ர்ய-மாகிற ஸ்வரூபத்தைக் காட்டும்.

எம்பெருமானருளையே எதிர்பார்த்திருப்பதாகிற பாரதந்த்ரியம் ஸித்திப்பது, தற்காப்பில் தான் கைவாங்கித் தொடர்பற்றபோதேயாகையால், அதனைத் தெரிவிக்கும் இது உபாயத்தையும் காட்டும்.

பகவத் விஷயத்தில் தொண்டாற்றும்போது தன்னலங்கழிந்தாலல்லது எம்பெருமான் திருவுள்ளத்துக்கு உகப்பாகாது ஆகையால், கைங்கர்ய பலமாகிய அவன் உகப்பை விளைவிக்கும் தன்னலங்கழிக்கும் இந்த நமஸ்ஸு பலத்தையுங் காட்டும் என்பதாம்.

தோற்றுவாய் : இந்த நமப்பதத்தில், அடியார்க்கடிமை என்பது அர்த்த பலத்தால் சித்திப்பதாலே அத்தை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 89 . "உற்றதும் உன்னடியார்க்கடிமை" என்கிறபடியே இதிலே பாகவத சேஷத்வமும் அநுஸந்தேயம் .**

விரிவுரை : அதாவது, "நின் திருவெட்டெழுத்துங்கற்று நானுற்றதும் உன்னடியார்க்கடிமை" என்று திருமந்திரம் கற்றதால் 'நான் உற்றதும் உன் அடியார்க்கு அடிமை' என்கிறபடியே, அஹங்கார மமகாரங்கள் கழிந்து பகவச் சேஷத்வம் உள்ளபடி தெளிவிக்கிற இந்த நமஸ்ஸிலே, பகவச் சேஷத்வத்தின் முடிவெல்லையான பாகவத சேஷத்வமும் சொல்ல வேணுமென்கை.

தோற்றுவாய் : இப்படி அர்த்த பலத்தால் சொல்லப்படுகிற பாகவத சேஷத்வம், இந்நமஸ்ஸிலன்றிக்கே வேறிடங்களிலும் சொல்லுவாருமுண்டாகையாலே அத்தை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 90 . இது - அகாரத்திலே என்றும் சொல்லுவர்கள்; உகாரத்திலே என்றும் சொல்லுவர்கள் .**

விரிவுரை : அதாவது, நான்காம் வேற்றுமையாலே ஆத்மாவினுடைய பகவச் சேஷத்வத்தைச் சொல்லுகையாலே, அந்த சேஷத்வத்தின் முடிவெல்லையான இந்த பாகவத சேஷத்வம் சொல்லுவது அகாரத்திலே என்றும் சிலர் சொல்லுவர்கள். அவன் தவிர்த்த பிறர்க்கு சேஷமன்று என்பதான அநந்யார்ஹ சேஷத்வத்துக்கு முடிவெல்லை அடியார்க்கடிமை என்ற அளவு நிற்கையாகையாலே, உகாரத்திலே என்றுஞ்சிலர் சொல்லுவார்கள். அர்த்த பலத்தால் சொல்லப்படுவதாகையாலே அவ்வவ்விடங்களிலும் சொல்லலாமாயிருந்ததேயாகிலும், அஹங்கார மமகாரங்களாகிய விரோதியாகிற கந்தல் கழிவது நமஸ்ஸிலேயாகையாலே இங்குச் சொல்லுவதே பொருந்தும் என்கிறார்.

தோற்றுவாய் : இந்த நமஸ்ஸுக்கு முந்திப்பிறந்த நினைவை முன்னிட்டு இதில் பிறந்த நினைவுக்கு உண்டான வாசியை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 91 . ஈச்வரன் தனக்கேயாயிருக்கும்; அசித்துப் பிறர்க்கேயாயிருக்கும்; ஆத்மா தனக்கும் பிறர்க்கும் பொதுவாயிருக்கும் என்று முற்பட்ட நினைவு; அங்ஙனன்றிக்கே, அசித்தைப் போலே" தனக்கேயாக எனைக் கொள்ள வேணும்" என்கிறது நமஸ்ஸால் .**

விரிவுரை : அதாவது "ஸ்வரூபம் ஸ்வாதந்த்ர்யம் பகவத:"

பகவத:- பகவானுடைய, ஸ்வரூபம் - இயல்பான வடிவமானது. ஸ்வாதந்த்ரியம் - தன்ஸ்வாதீநமாக சுதந்திரமாகவே இருக்கும். என்கிறபடியே ஸ்வாதந்த்ரியமே ஸ்வரூபமான ஈச்வரன் தன்பொருட்டேயாயிருக்கும்.

அசித்து, ஞாநமில்லாததாகையாலே தனக்கு என்கைக்குத் தகுதியின்றிக்கே பரதந்தரஸ்வரூபமாயிருக்கும் ஆகையால், இது பிறர் பொருட்டேயாயிருக்கும். அகார-

த்தில் (லுப்த சதுர்த்தியில்) மறைந்த நான்காம் வேற்றுமையில் சொன்ன சேஷத்வத்தையும், மகாரத்திற் சொன்ன ஜ்ஞாத்ருத்வத்தையும் உடையனான ஆத்மா ஜ்ஞாநமுண்மை-யால் தன் பொருட்டும், சேஷத்வமாம் அடிமையுடைமையால் பிறர் பொருட்டுமாகப் பொதுவாயிருக்கும் என்று நமஸ்ஸுக்கு முன்பதமான ப்ரணவத்தில் பிறந்த நினைவு. அப்படி அன்றிக்கே பிறர் பொருட்டேயான அசித்தைப்-போலே "தனக்கேயாக எனைக்கொள்ளு மீதே" என்கிற-படியே பகவத்விஷயத்துக்கே சுவை உடைத்தாம்படி ஆத்மாவை உபயோகித்துக் கொள்ள வேணும் என்கிறது நமஸ்ஸாலென்கை.

தோற்றுவாய் : 'தனக்கேயாக' - என்றத்தை விவரித்து-ரைக்கிறார்.

**மூ . சூ . 92 . அதாவது, போகதசையில் ஈச்வரன் அழிக்கும் போது, நோக்கவேணுமென்று அழியா தொழிகை.**

விரிவுரை : இத்தால், அத்தலைக்கே சுவையுடை-த்தாம்படி உபயோகப் படுகையாவது, தன்னோடே (ஆத்மா-வோடே) கலந்து பரிமாறும் நிலையில் அநுபவிக்கிறவனான ஈச்வரன் "ஆட்கொள்வானொத்தென்னுயிருண்டமாயன்" என்கிறபடியே அடிமைகொள்வாரைப் போலே புகுந்து, தன் ப்ரேமை மிகுதியாலே தாழ நின்று பரிமாறி ஆத்மாவினிட-த்தில் உள்ள அடிமையை அழிக்கும் போது, 'நம் அடிமைத் தன்மையை நாம் காத்துக் கொள்ள வேணும்' என்று தாழ்மையைப் பாரித்துப் பின்வாங்கி அவனுக்குப் பிரியமான சுவையான இன்பத்தைத் தடுக்காதொழிகை என்கை.

தோற்றுவாய் : 'இப்படி இவன் அழிக்கைக்குக் கார-ணம் எது? என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 93 . அழிக்கைக்கு ஹேது கீழே சொல்-லிற்று; மேலும் சொல்லும் .**

*விரிவுரை :* அதாவது, எம்பெருமான் மேல் விழுந்து விநியோகம் கொள்ளும்போது இவன்தன் அடிமைத் தன்மையாகிற தாழ்மையைப் பாவித்துப் பின்வாங்கி அவன் இஷ்டத்தை அழிக்கைக்குக்காரணம், "சேஷத்வமே ஆத்மாவு-க்கு ஸ்வரூபம்" என்கையாலே கீழே ப்ரணவத்திலே சொல்லி-ற்று, மேலே நாராயண பதத்தில் உள்ள நான்காம் வேற்றுமை தொண்டாற்றும் அடியானாகச் சொல்லுகையாலே மேலும் சொல்லும் என்கை.

*தோற்றுவாய் :* இனி, இந்தப் பரதந்த்ரமாம் சிறப்பை அருளிச் செய்யா நின்று கொண்டு நமப்பத அர்த்தத்தை முடிவு செய்கிறார்.

**மூ. சூ. 94. இந்நினைவு பிறந்த போதே க்ருதக்-ருத்யன்: இந்நினைவு இல்லாதபோது எல்லா துஷ்க்ரு-தங்களும் க்ருதம்: இந்நினைவிலே எல்லா ஸுக்ருதங்-களும் உண்டு. இது இன்றிக்கே இருக்கப் பண்ணும் யஜ்-ஞாதிகளும் ப்ராயச்சித்தாதிகளும் நிஷ்ப்ரயோஜ-நங்கள்: இது தன்னாலே எல்லா பாபங்களும் போம், எல்லா பலங்களும் உண்டாம்.**

*விரிவுரை :* 'இந்நினைவு பிறந்தபோதே க்ருதக்ருத்யன்' என்றது, "தனக்கேயாக எனைக்கொள்ளவேணும்" என்னும் பரமாத்மாவுக்கு வசப்படுகிற மிகவும் சிறப்புடைய தான இந்த பாரதந்த்ரியம் ஆகிய நினைவு பிறந்த போதே தன்னுடைய நன்மைக்கு உரித்தாகச் செய்ய வேண்டுவதெல்லாம் செய்து முடித்தவனென்கை.

"இந்நினைவு இல்லாதபோது எல்லா துஷ்க்ருதங்களும் க்ருதம்" என்றது - இந்தப் பரதந்த்ரமாம் நினைவு இல்லாதபோது "கிம்தேந நக்ருதம் பாபம் சோரேணாத்மாப ஹாரிணா" என்கிறபடியே, சோரேணா த்மாப ஹாரிணா - (பகவச் சேஷமான தன்னைச் சுதந்திரனாக நினைத்திருக்கி-றவன்) பகவச் சொத்தான ஆத்மாவைத் திருடிய திருடனாகிறான். தேந - இவனால், நக்ருதம் - செய்யப்படாத,

கிம்பாபம் - எந்தப் பாபம் உண்டு? எல்லாப் பாபங்களும் செய்தவனாகிறான். என்கிறபடியே சகல தீமைகளும் செய்தவனாகிறான் - என்கை.

"இந்நினைவிலே எல்லா ஸு்க்ருதங்களும் உண்டு" என்றது- இந்த பாரதந்ரிய நினைவு உண்டாகவே எல்லா நற்செயல்களும் செய்தால் உண்டாகும் ப்ரீதி எம்பெருமானுக்கு விளைகையாலே, இந்தப் பாரதந்ரிய நினைவிலே எல்லா நற்செயல்களும் உண்டு என்கை. "இது இன்றிக்கே இருக்கப்பண்ணும் யக்ஞாதிகளும் ப்ராயச் சித்தாதிகளும் நிஷ்ப்ரயோஜநங்கள் என்றது, இந்தப் பாரதந்த்ரிய நினைவு இல்லாமலிருந்து கொண்டு பகவத் ப்ரீதி உண்டாவதன் பொருட்டுச் செய்யும் யாகயக்ஞங்கள் முதலான -வைகள், சுதந்திர புத்தியோடு செய்வதால் பகவானுக்குப்ரீதி உண்டாகாது கோபமே உண்டாகும். முன்பு நாம் செய்த பாபங்களின் விமோசத்தின் பொருட்டுச் செய்யும் க்ருச்ரம், சாந்த்ராயணம் முதலான ப்ராயச்சித்தங்களாகிய ஸாந்திகளும் சுதந்திர புத்தியோடு செய்வதால் பாபவிமோசனம் உண்டாகாமல் பயனற்றுப்போகுமென்கை.

"இது தன்னாலே எல்லா பாபங்களும் போம்" என்றது- இந்தப் பரதந்திர நினைவிலே எம்பெருமான் இவனள விலே கருணை மிகுந்து அருள் செய்வதாலே, அவன் இவனைத் தண்டித்தற்குரித்தான எல்லாப் பாபங்களும் போமென்றும். "எல்லாப் பலன்களும் உண்டாம்" என்றது, "உன்னடியார்க்கு என் செய்வனென்றேயிருத்தி நீ" என்கிறபடியே, இவனுக்கு எந்த நன்மையைச் செய்வோ-மென்று எம்பெருமான் மேன்மேலும் உபகரிக்கையாலே பிறவிக்கடலினின்றும் கரையேற்றி பரமபதத்திற்கொண்டு போய் அழகோலக்கத்திலே தன்னைக் கண்டு களித்து வாழ்த்துவதாகிய நிரந்தரத்தொண்டுக்குரியனாம்படி செய்கை-யாகிய எல்லாப்பலன்களும் உண்டாம் என்கிறார்.

ஆக, மத்திய பதமான நமப் பதார்த்தத்தை அருளிச்செய்தாராயிற்று.

தோற்றுவாய் : இனி, நாராயண பதார்த்தத்தை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ.95. நாராயணனென்றது - நாரங்களுக்கு அயநமென்றபடி .**

விரிவுரை : அதாவது, நாராயண பதந்தான் "நாராணாம் அயநம் ய: ஸ: நாராயண:" (நாரங்களுக்கு இடமாக இருப்பவன் எவனோ அவனே நாராயணன்) என்று வேற்றுமைத் தொகையாகவும், "நாரா: அயநம் யஸ்ய ஸ: நாராயண:" (நாரங்களை இடமாக உடையவன் எவனோ அவனே நாராயணன்) என்று அன்மொழித்தொகையாகவும் சொல்லவேண்டுகையாலே அதில் முதலில் (தத்புருஷஸமா-ஸம்,) வேற்றுமைத் தொகையில் அர்த்தத்தை 'நாரங்களுக்கு அயநம்' என்றபடி' என்று அருளிச் செய்கிறார்

தோற்றுவாய் : நாரங்களாகிறவைதாம் எவை? என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ. சூ. 96 . நாரங்களாவன- நித்யவஸ்துக்களு-டையதிரள் .**

விரிவுரை : அதாவது, நாரபதம், 'நர' என்றும் "நார" என்றும் "நாரா:" என்றுமாய் "ரிங்க்ஷயே" என்கிற வினைப்பகுதியிலே 'ர' என்று அழியும் பொருளைச் சொல்லி, 'ந' காரம் அழிவது என்பதைக் கழித்து, 'நர' என்று அழிவற்ற நித்ய வஸ்துவைக் காட்டி, கூட்டம் என்ற பொருளிலே 'அண்' என்ற விகுதியும் ஆதி நீளுதலுதாய் 'நார' என்று நித்திய வஸ்துக்களின் கூட்டத்தைச் சொல்லி 'நாரா:' என்று கூட்டங்களின் பன்மையுஞ் சொல்லுகையால் 'நித்ய வஸ்துக்களுடைய திரள்' என்கிறார்.

இதில், 'நித்ய' என்றதாலே நரசப்தார்த்தமும், 'வஸ்துக்கள்' என்கையாலே 'நார' சப்தார்த்தமும், அவற்றி-னுடைய 'திரள்' என்கையாலே 'நாரா:' சப்தார்த்தமாகிற பன்மைப் பொருள்களும் சொல்லப்பட்டது.

தோற்றுவாய் : அப்படிப்பட்டவைதாம் எவை? என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 97. அவையாவன ஜ்ஞாநாநந்தாமலத்வாதிகளும், ஜ்ஞாந சக்தியாதிகளும், வாத்ஸல்ய ஸௌசீல்யாதிகளும், திருமேனியும், காந்தி ஸௌகுமார்யாதிகளும், திவ்ய பூஷணங்களும், திவ்யாயுதங்களும், பெரிய பிராட்டியார் தொடக்கமான நாச்சிமார்களும், நித்ய ஸூரிகளும், சத்ரசாமராதிகளும், திருவாசல் காக்கும் முதலிகளும், கணாதிபரும், முக்தரும், பரமாகாசமும், ப்ரக்ருதியும், பத்தாத்மாக்களும், காலமும், மஹதாதி விகாரங்களும், அண்டங்களும், அண்டத்துக்கு உட்பட்ட தேவாதி பதார்த்தங்களும் .**

விரிவுரை : ஜ்ஞாநாநந்தாமலத் வாதிகளாவன: ஸ்வரூப நிரூபக தர்மங்கள். அதாவது, ஈச்வர ஸ்வரூபம் இன்னபடியானது என்று நிரூபித்துக்காட்டும் தர்மங்களான குணங்கள். ஆதி சப்தத்தாலே, கணக்கி லடங்காத கல்யாணகுணங்களைச் சொல்லுகிறது.

**ஜ்ஞாந சக்தியாதிகள் ஆவன** - முன் சொன்ன குணங்களால் நிரூபிக்கப்பட்ட ஸ்வரூபத்தை ஆதாரமாகக் கொண்டிருக்கும் அனைத்து நற்குணங்களுக்கும் ப்ரதாநமாயிருந்துள்ள ஜ்ஞாநம், சக்தி, பலம், ஐச்வர்யம், வீரியம், தேஜஸ் ஸூக்களாகிற ஆறு குணங்கள். **வாத்ஸல்ய ஸௌசீல்யாதிகளாவன** - இவை முன் சொன்ன ஆறு குணங்களிலிருந்து தோன்றக்கூடிய வாத்ஸல்யம் ஸ்வாமித்வம் ஸௌசீல்யம், ஸௌலப்யம் ஆகியவை. இதில் **ஜ்ஞாநத்தின் தன்மையாவது** - ஸ்வரூபத்தாலேயே எப்போதும் ஒரே காலத்தில் அறியக்கூடியவற்றை எல்லாம் காண்கை. **சக்தியாவது** - நினைவாலேயே எண்ணிக்கையற்ற புவனங்கட்கு எல்லாம் தானே முதற் காரணமாயிருக்கை. **பலமாவது** - அனைத்துச் சேதநாசேதநங்களையும் இளைப்பின்றித் தாங்கும் ஆற்றல். **வீர்யமாவது**-தான் உபாதாந காரணமாகிய

முதற்கருவியாகி சேதநாசேதநங்களை உண்டாக்கித் தனக்கொரு மாறுபாடு இன்றிக்கே இருக்கை. **ஐச்வர்யமாவது**- சுதந்திரத்தோடு எங்கும் தடையின்றிச் செல்லுகின்ற நினைவுடைமை. **தேஜஸ்ஸாவது**- வேறொரு உதவியின்றி அடைந்தாரது தாபங்களைப் போக்கியும், எதிரிகட்குத் தாபங்களைத் தந்து போருந்தன்மை, ஜ்ஞாநம் முதலான ஆறுகுணங்களினின்று தோன்றிய **வாத்ஸல்ய- மாவது** - குற்றங்களைக் குணமாகக் கொள்ளுந் தன்மை. **ஸ்வாமித்வம்** - எப்பொருட்கும் தலைவனாகை. **ஸௌசீல்யம்** உயர்ந்தோனாயிருந்தும் தாழ்ந்தாரோடு கலந்தும் வேற்றுமையின்றியிருக்கை. **ஸௌலப்யம்** - எல்லா மநுஷ்யர் கண்களுக்கும் தன்னை காணக் கொடுக்குங்குணம். **திருமேனியாவது** - தனக்கே உரித்தான திவ்ய மங்கள விக்ரஹம். ஒருமை ஜாத்யேக வசநமாய் நித்யமான திவ்ய மங்கள விக்ரஹத்தையும், இச்சையால் ஏற்கும் திருமேனிகளையும் சொல்லுகிறது. அல்லாத போது கூட்டமாக எண்ணி வருவதற்குச் சேராது. இதுதான் நடுவில் திருவீதிப்பிள்ளை பட்டர், ஆச்சான் பிள்ளை முதலானோர் அருளிச் செய்த நூல்களிலும் தெளியக் காணலாம். **காந்திஸௌகுமார் யாதிகள் ஆவன** - அந்தத் திருமேனியின் பண்புகளான பேரழகும், மென்மையும், இயல்பிலான மணமும், மெருகிட்ட பொன்னின் ஒளிபோல் மேனியின் மீது தவழும் ஒளியும், பதினாறு வயதென மதிக்கலாம் படியான யௌவனத்வமும் ஆகிய இவை முதலான பண்புகளாம்.

**திவ்ய பூஷணங்களாவன** - எம்பெருமானார் கத்யத்தில் ஆபரண சூர்ணையாக வர்ணித்துச் சொன்ன மகுடம் முதல் பாதச் சிலம்பீறாக அந்தத் திருமேனிக்குச் சாத்தும் கணக்கற்ற திருவாபரணங்கள். **திவ்விய ஆயுதங்களாவன** - அழகுக்கும், அடியவர் பகைகளைவதற்கும் உரித்தான சங்கம், சக்ரம், நாந்தகவாள், கௌமேதகியாம் கதை, சார்ங்கம் முதலான கணக்கற்ற ஆயுதவிசேஷங்கள். **பெரிய பிராட்டியார் தொடக்கமான நாச்சிமார் ஆவார்** - **"ஸ்ரீவல்லப ஏவம் பூத பூமி நீளா நாயக!" ஸ்ரீவல்லப** - மகாலக்ஷ்மியை இஷ்டையாக உடையவனே!

ஏவம் பூத பூமி நீளாநாயக - இப்படிப்பட்ட இவளுக்குச் சமாநர்களான பூமிதேவிக்கும், நீளாதேவிக்கும் நாயகனே! "தேவி த்வாம் அநு நீளயா ஸஹ மஹீதேவ்ய ஸ் ஸஹஸ்ரம் ததா" தேவி - லக்ஷ்மிதேவியே, த்வாம் அநு - உன்னை அநுஸரித்து, நீளயா - நீளாதேவியோடு, மஹீ - பூமிதேவியும், ததா - அப்படியே, ஸஹஸ்ரம் தேவ்ய : - ஆயிரம் தேவி மார்களும் (இருக்கின்றனர்) என்கிற படியே, முதன்மையுடைய பெரிய பிராட்டியார் முதலாக இந்தப் பிராட்டிக்குச் சமாநர்களான பூமிநீளைகளும், மற்றும் அநேகராகச் சொல்லப்படுகிறவர்களும், "லக்ஷ்மீ முதலான தேவிமார் வர்க்கமும்" என்றே பெரிய வாச்சான்பிள்ளை அருளிச் செய்தது.

நித்ய ஸூரிகளாவார் - அந்த கருட விஷ்வக்ஸேநர் முதலாயிருந்துள்ள கணக்கற்ற ஸூரிஜனங்கள். சத்ர சாமராதிகளாவன - கைங்கர்ய உபகரணங்களான குடை, கவரி, விசிறி, வெற்றிலைப்பெட்டி, தாம்பலப்படிக்கம் முதலானவைகள். திருவாசல் காக்கும் முதலிகளாவார் - சண்டப்ரசண்ட பத்ர ஸுபத்ர, ஜய விஜயர் முதலானோர். கணாதிபராவார் -குமுதர், குமுதாக்ஷர், புண்டரீகர், வாமநர், சங்குகர்ணர், ஸர்வநேத்ரர், ஸுமுகர், ஸுப்ரதிஷ்டிகர் முதலானவர்களாவார்.

முக்தராவார் - "கரைகண்டோர்" என்கிறபடியே ஸம்ஸாரஸாகரத்தைக் கடந்து அக்கரைப்பட்டு, நித்ய ஸூரிகளோடு ஸமமான உருவுடையராய் அனைத்துத் தொண்டும் செய்கையே தொழிலாக உடையராயிருக்கும் எண்ணிலடங்காத சேதநர்.

பரமாகாசமாவது - பரமேஷ்டி, புமாந், விச்வ:, நிவ்ருத்த, ஸர்வ: என்ற பெயர்களையுடைய பஞ்சோப-நிஷத்மயமான பரமபதம். இந்த லீலா விபூதியில் பஞ்சபூதங்களைப் போன்று பரமபதமாகப் பரிணமிப்பதாய் சுத்த ஸத்வமாயிருப்பதொரு அசேதநம். இதுவும் பஞ்ச உபநிஷந் மயமாகையாலே கூட்டமாயிருக்கும்.

ஆக, ஜ்ஞாநாநந்தா மலத்வாதிகளும் என்று தொட-ங்கி இவ்வுளவும் ஸ்வரூப நிரூபக தர்மங்களையும், இப்படி

நிருபித்த ஸ்வரூபத்தைச் சார்ந்துள்ள கல்யாண குணங்களையும், அக்குணங்களுக்கு விளக்கமான திவ்ய மங்களமான திருமேனியையும், இந்தத் திருமேனியின் குணங்களான அழகு முதலானவைகளையும், இந்த அழகு முதலானவற்றோடு புஷ்பம் பூத்தாற்போலே சாத்தின திருவாபரணங்களையும், அந்த ஆபணரங்களோடு (விகல்பிக்கலாம் படியான) ஒளியில் போட்டியிட்டு எதிர் நிற்கும் படியான திவ்யாயுதங்களையும், இவை இத்தனையும் காட்டிலெரித்த நிலவாகாதபடி அருகே இருந்து கண்டுகளிக்கிற நாச்சிமாரையும், அச்சேர்த்தியிலே அடிமை செய்கிற நித்ய ஸூரிகளையும், அவர்களுக்குக் கைங்கர்ய (உபகரணங்களான) துணைக்கருவிகளான குடை, சாமரம் முதலான- வைகளையும், இச் சேர்த்திக்கு என்ன தீங்கு நேருகிறதோ என்று அஞ்சும் திருவாசல் காக்கும் முதலிகளையும், இவ்விதமாகவே மங்களாசாஸநபரராய்த் திருப்படை வீட்டுக்கு முழுக்காவலாயிருக்கும் கணாதிபரை- யும், ஸம்ஸாரமாம் பிறவியை நீத்தவராய் நித்தியரோடு ஒரு கோவையாய் அடிமை செய்கிற முக்தரையும், அவ்வடிமையை வளர்ப்பதான பரமபதத்தையும் அருளிச் செய்தாராயிற்று.

இனி, லீலா விபூதியிலுள்ளவற்றை அருளிச் செய்கிறார் மேல்: **ப்ரக்ருதியாவது** - ஸத்வரஜஸ் தமஸ்ஸு- க்களாம் முக்குணக் கூட்டமாயிருக்கும் மூலப்ரக்ருதி. "முக்குணமயமாகையாலே மூலப்ரக்ருதியும் கூட்டமாயிரு- க்கும்" என்றல்லவா இதுக்கும் பெரிய வாச்சான்பிள்ளை அருளிச் செய்தது. **பத்தாத்மாக்களாகிறார்** - உரைகல்லில் ஒற்றியெடுத்த மெழுகில் பொன்போலே இந்தப்ரக்ருதிக்- குள்ளே பந்திக்கப்பட்டு உருமாய்ந்து கிடக்கிற ஆத்மாக்கள்.

**காலம் ஆவது** - இரவு பகல் முதலான பிரிவுகளால் கூட்டமாயிருக்கும் அசேதநப் பொருள். இராப்பகல் முதலான வேற்றுமைகளாலே காலமும் கூட்டமாயிருக்கும் என்றே இதுக்கும் பெரியவாச்சான் பிள்ளை அருளிச் செய்தது.

ஆக, இவ்வளவும் இயல்பாகவே நித்யமாயிருக்- கும்வற்றைச் சொல்லினார். இனி மாறுபாட்டோடு கூடியே நித்யங்களாயிருக்கும் அவற்றைச் சொல்லுகிறார். மாறுபாட-

ற்று நித்யமாயிருக்கையாவது - உண்டாவது, அழிவது என்ற மாறுபாடு அடியோடில்லாமை. மாறுபாடுற்றும் நித்திய மாகையாவது - உண்டாவதும், அழிவதுமாக நிற்கச் செய்தேயும் முன்காலத்திலுண்டான பெயர், உரு, குறி இவைகள் வேறாகாமல் இருக்கை. இதில் மஹத்து முதலான விகாரங்களாவன - மஹத் தத்வந்தொடங்கி ப்ருதிவி என்ற பூமி பர்யந்தமாக உண்டான இருபத்துமூன்று தத்துவங்களும். அண்டங்களாவன - இந்த மஹத்து முதலானவைகளாலே உண்டானதாய், "அண்டாநாந்து ஸஹஸ்ராணாம் ஸஹஸ்-ராண்யயுதாநிச" பல்லாயிரக்கணக்காக அளவின்றியே இருக்-கும் பல அண்டங்கள். அண்டத்துக்குட்பட்ட தேவாதி பதா-ர்த்தங்களாவன- தேவ, மநுஷ்ய, (திர்யக்) விலங்குகள், ஸ்தா-வரங்கள் என்பனவாகும்.

ஆக, நாரபதத்தின் அர்த்தம் அருளிச் செய்தாரா-யிற்று.

தோற்றுவாய் : மேல், அயந பதார்த்தத்தை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 98 . அயநமென்றது - இவற்றுக்கு ஆச்ரயமென்றபடி .**

விரிவுரை : 'அயநமென்பது' தங்கும் இடம் என்ப-தாலே, சேதநாசேதநமான இவற்றுக்குத்தான் இடமென்றபடி என்கை.

தோற்றுவாய்:அன்மொழித் தொகையாலான அர்த்த-த்தை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 99 . அங்ஙனன்றிக்கே, இவை தன்னை ஆச்ரயமாகவுடையனென்னவுமாம் .**

விரிவுரை : அதாவது - 'இவற்றுக்கு இடம்' என்ற வேற்றுமைத் தொகையாகச் சொன்னதன்றி, 'இவைதன்னை இடமாக உடையவன்' என்று அன்மொழித்தொகையாச் சொல்லவு மாமென்கை.

'இவற்றுக்கு ஆச்ரயம்' என்கிறவிடத்தில் குணங்க-ளையும் சொல்லிற்றேயாகிலும், 'இவைதன்னை ஆச்ரயமாக

உடையவன்' என்கிற விடத்தில், குணங்களைத் தவிரச் சொல்லவேணும். அக்குணங்களுக்கு வ்யாபிக்கப்படு பொருள் என்று சொல்லுமளவில் 'தன்னில் தானிருக்கை என்ற குற்றமும், முடிவின்மை என்ற குற்றமும் வருமாகையாலே, "ஈச்வரன் தன் குணங்களில் வ்யாபிக்கும்போது குணத்-தோடுசேர்ந்தே வ்யாபிக்கவேணும். குணமில்லாமல் ஒருபொருளும் இல்லாமையாலே; அப்போது, வ்யாபிக்கப்-பட்ட குணங்களே வ்யாபக குணங்களாய், வ்யாபக குணங்களே வ்யாபிக்கப்பட்ட குணங்ளாயறுகை யாலே, 'தன்னில்தான் வ்யாபித்தல்' என்ற குற்றம் உண்டாகும். அதற்கு மேலே, 'தன் குணங்களிலே குணி வ்யாபிக்கப்-புகுந்தால், அதைச் சேர்ந்த குணங்களையும் குணி வ்யாபிக்கவேண்டும்.' இப்படி வ்யாபித்த குணத்துக்குள்ளும் வேறொருகுணமும் அதற்குள் மற்றொன்றும் என்று இவ்வாறு வரும். ஆதலால், ஒரு முடிவு ஏற்படாதென்று" இவற்றைத் தெளிவாக பெரியவாச்சான்பிள்ளையும் அருளிச்செய்தார் என்கிறார்.

*தோற்றுவாய் :* வேற்றுமைத்தொகை, அன்மொழித்-தொகை என்ற இருவகை தொகையாக வந்த பொருளில் பலித்தவை எவை? என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 100 . இவை இரண்டாலும் பலித்தது, பரத்வ ஸௌலப்யங்கள் .**

*விரிவுரை :* அதாவது, நாரங்களுக்கு அயநம் என்றும் நாரங்களை அயநமாக உடையன் என்றும் சொன்ன இவை இரண்டாலும் தேர்ந்தபொருள், தன்னைத் தவிர்த்த மற்ற அனைத்துக்கும் தான் ஆதாரமாயிருக்கிற மேன்மையும், இப்படிப் பெரியனானதான் அனைத்துச் சேதனாசேதநங்க-ளிலும் தன்னை அமைத்துக் கொண்டு புகுந்திருக்கையாகிற எளிமைத்தன்மையும் கூறப்படுகிறது என்கை.

*தோற்றுவாய் :* இன்னமும் ஒரு முறையாலே இந்தத் தொகைகளிரண்டாலும் தேர்ந்த பொருள்களை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 101 . அந்தர்யாமித்வமும், உபாயத்வமும், உபேயத்வமுமாகவுமாம் .**

விரிவுரை : அதாவது, அன்மொழித் தொகையும் வேற்றுமைத் தொகையும் ஆகிய இரண்டாலும் தேர்ந்தது, அந்தர்யாமித்வஞ் சொல்லுகிற நூல்களிலே அனைத்துச் சேதநாசேதநங்களிலும் அந்தராத்மாவாய் இருப்பவனாய், நியமிக்கிறவனாய் இருக்கிற அந்தர்யாமித்வமும், 'இண்கஃதெள' என்கிற வினைப்பகுதியிலே யாதல், அயகதெள என்கிற வினைப்பகுதியிலே யாதல் நிர்ணயிக்கப்பட்ட அயநபதத்தில் கருவியாகக்காட்டும் முறையிலும், செயப்படுபொருளாகக் காட்டும் முறையிலும், சொல்வதான உபாயத்வமும் உபேயத்வமும் ஆமென்கை. நாரங்களை அயநமாக உடையன் என்னும் அன்மொழித்தொகையில் யோக்யதாநு குணமாக நாரசப்தத்தைக் குணங்களைத் தவிர்த்த பொருள்களுக்கு வாசகமாகக் கொண்டாற்போலே, வேற்றுமைத் தொகையிலும் நாரங்களுக்கு அயநமாயிருப்பவன் என்பதில் உபாயமாகவும், உபேயமாகவும் இருப்பவன் என்னும் போது நாரசப்தம் சேதநாசேதநங்களைக் காட்டுமதே யாயினும் தகுதிக்கேற்ப அசேதநங்கள் தவிர்த்த சேதநங்களையே காட்டுவதாகக் கொள்ளவேண்டும். உபாயம் - இறைவனை அடையும் வழி.

"நாரஸ்த்விதி ஸர்வபும்ஸாம் ஸமூஹ: பரிகத்யதே, கதிராலம்பநம் தஸ்ய தேந நாராயணஸ் ஸ்ம்ருத:" நார: துஇதி - நார என்கிற சப்தத்தாலே, ஸர்வ பும்ஸாம் ஸமூஹ :- அனைத்துச் சேதநங்களும், பரிகத்யதே - சொல்லப்படுகிறது, தஸ்ய - அந்த ஜீவசமூகத்துக்கு கதி :- அடையத் தகுந்த, ஆலம்பநம் - ஆச்ரயமாகையால், தேந - அதனால், நாராயணஸ்ஸ்ம்ருத :- நாராயணனென்று சொல்லப்படுகிறான். "நாரசப்தேந ஜீவாநாம் ஸமூஹ: ப்ரோச்யதே புதை: தேஷாமயந பூதத்வாந் நாராயண இஹோச்யதே".

புதை:- புத்திமான்களாலே, நாரசப்தேந- நாரசப்தத்தால், ஜீவாநாம்ஸமூஹ:- ஜீவர்களுடைய கூட்டமானது, ப்ரோச்யதே - சொல்லப்படுகிறது. தேஷாம் - அந்த ஜீவர்களுக்கு, அயந பூதத்வாத் - உபாயோபேயமாயிருக்-

கையாலே, இஹ - இவ்விடத்தில், (எம்பெருமான்), நாராயண:- நாராயணனென்று, உச்யதே - சொல்லப்படுகிறான். என்று உபாயோபேயமாகக் கொள்ளும்போது அசேதநங்கள் தவிர்த்த இவை முதலானவைகளிலே சேதநங்களையே சொல்லா நின்றதல்லவா.

**தோற்றுவாய்:-** செயப்படுபொருளைக் காட்டும் விருத்தியால் தேர்ந்த பலத்துக்கு வரம்பில்லாமையாலே எல்லாவிதத்தோடும் கூடியுள்ளதாலும், உறவு முறையார் என்ற இதுவும் ஒரு பயனாயிருக்கையாலும், எல்லா உறவு முறையும் உள்ள எம்பெருமானுடைய உறவுகளையும் இப்பதத்திலே சொல்லும் படியை அருளிச் செய்கிறார்.

## மூ . சூ . 102 . "எம்பிரானெந்தை" என்கையாலே, ஈச்வரனே எல்லாவுறவு முறையுமென்று சொல்லும் .

**விரிவுரை:-** அதாவது - நாராயண சப்தார்த்தத்தைச் சொல்லுகிற திருமங்கையாழ்வார் **"எம்பிரானெந்தை என்னுடைச் சுற்றம் எனக்கரசு என்னுடைய வாழ்நாள்"** என்கையாலே எம்பெருமானே இந்த ஆத்மாக்களுக்கு எல்லாவித உறவுமுறையுமென்று இப்பதத்திலே சொல்லுமென்கை.

**தோற்றுவாய்:** இப்படி உறவுடையனாய்க் கொண்டு இவ்வாத்மாக்களுக்கு அவன் செய்யுமவை எவை? என்ன, அருளிச் செய்கிறார்.

## மூ . சூ . 103. நாம் பிறர்க்கான அன்றும் அவன் நமக்காயிருக்கும் .

**விரிவுரை:-** அதாவது - நாம் எம்பெருமானை வெறுத்து அவனோடு ஒட்டற்றுப்பிறர்க்கு நல்லவராயிருந்த காலத்திலும், அவன் நமக்கு நல்லவனாயிருக்கு மென்கை.

**தோற்றுவாய்:-** நாம் பிறர்க்கான அன்றும் அவன் நமக்கேயாயிருந்து செய்யுமவைதான் எவை? என்ன, அருளிச்செய்கிறார்.

**மூ. சூ.104. இராமடம் ஊட்டுவாரைப் போலே உள்ளே பதிகிடந்து ஸத்தையே பிடித்து நோக்கிக் கொண்டுபோரும்.**

*விரிவுரை:* அதாவது - நேராக தங்கள் பக்கல் வந்து விருப்பங்களைப் பெற்று ஜீவியாதே துர்மாநத்தாலே பட்டினியே திரியுமவர்களையும் விடமாட்டாமையாலே, பிறரறியாதபடி இரவில் ஊர்ச்சாவடியில் உண்பிப்பாரைப்போலே, தன் பக்கல் தலைவணங்கோம் என்று இந்த சேதநர்கள் சுதந்திரம் பாராட்டித் திரியா நிற்க, இவர்கள் கண்காணாதபடி அந்தராத்மாவாய்க் கொண்டு உள்ளே மறைந்திருந்து இவர்கள் நிலைபேற்றையே தொடங்கிக் காத்துக் கொண்டு போரு மென்கை.

ஆக, நாராயண பதத்தால் இவன் செய்யும் தொண்டுகளை ஏற்பவனான எம்பெருமான் தன்மையை அருளிச் செய்தாராயிற்று.

**தோற்றுவாய்:** இனி, இதில் வேற்றுமை உருபாலே இவன் தொண்டு செய்ய ப்ரார்த்திப்பதை அருளிச்செய்கிறார்.

**மூ . சூ . 105. "ஆய" என்கிற இத்தால் "சென்றாற்குடையாம்" என்கிறபடியே எல்லா அடிமைகளும் செய்ய வேணுமென்று அபேக்ஷிக்கிறது .**

*விரிவுரை:* அதாவது **"ஆய"** என்கிற இந்த நான்காம் வேற்றுமையாலே **"சென்றால் குடையாம்"** என்கிற பாட்டில் சொல்லுகிறபடியே, திருவநந்தாழ்வானைப்போலே எல்லா அடிமைகளையும் செய்ய வேணுமென்று விரும்புகிறது என்கை.

**தோற்றுவாய்:** 'நமஸ்ஸாலே தனக்கென்று ஒன்றை விரும்புகைக்கு உரிமையில்லை என்று பாரதந்த்ரியம் சொல்லியிருக்க, இந்தக் கைங்கர்யத்தைத் தான் விரும்பிக் கோருவது பொருந்தாது' என்று இருக்குமவர்கள் செய்யும் வினாவை அநுவதிக்கிறார்.

**மூ . சூ . 106 . 'நமஸ்ஸாலே தன்னோடு உறவில்லை என்று வைத்துக் கைங்கர்யத்தை ப்ரார்த்திக்கக் கூடுமோ?' என்னில் :**

தோற்றுவாய்: அதற்கு விடை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 107 . "படியாய்க்கிடந்து உன் பவளவாய் காண்பேனே" என்கிறபடியே கைங்கர்யப்ரார்த்தனை வந்தேறி அன்று; ஸ்வரூப ப்ரயுக்தம் .**

விரிவுரை: அதாவது, "படியாய்க்கிடந்து உன் பவளவாய் காண்பேனே" என்று, மிக்கமுடிந்த நிலையான பாரதந்த்ரியத்தோடே கைங்கர்ய ப்ரார்த்தனையையும் சொல்லுகிறபடியே, கைங்கர்யப்ரார்த்தனை - தன்னலங்கருதுவதான அஹங்காரமடியாய்க் கொண்டு இடையில் வந்தேறியானது அன்று. ஆண்டானுக்கு மிக்க உகப்பை விளைவித்தல்லது தரியாதபடியான தன் இயல்பான ஸ்வரூபத்தைப் பற்றி வந்தது என்கை.

மேற்சொன்ன வினாவிடைகளாவன - நமச்சப்தம் நாராயணாய என்பதோடு சேர்ந்து "நாராயணாய நம:" என்று மகாரத்தில் சொன்ன ஜ்ஞாத்ருத்வத்தால் தொண்டாற்றுவதில் வரும் என்னது என்ற மமகாரத்தை விளைவிக்கும் என்று நமச்சப்தார்த்தப்பகுதியில் சொல்லிவிட்டு, இங்கே கைங்கர்யப்ரார்த்தனையைச் சதுர்த்தி காட்டு மென்பது பொருந்துமோ? என்று வினாவுக்குக்கருத்து.

இந்த ஐய வினாவுக்குத் தெளிவான விடையாவது: இங்கே சொல்லுகிற கைங்கர்ய ப்ரார்த்தனை, அறிவற்ற அசேதநத்துக்கு வேறாக அறிவுடைய சேதநனாயிருந்தும், அறிவில்லாதான ஜடப்பொருளுக்குச் சமமான பகவத் பரதந்திரத்தை நமப்பதம் சொல்லுவதால், தன்னலம் சிறிதும் கொள்ளாது ஆண்டானின் முகமலர்த்தியே குறிக்கொண்டதாயும், அசித்துக்கு வேறான மகாரத்தில் சொல்லுகிற தன்னியல்பான அறிவுடைமைக்குப் பொருந்திய தாயிருப்பதால்

சமாதாநம் கண்டு கொள்வது.

**தோற்றுவாய்:** முன் சொன்னதைக் காரணமாகக் கொண்டு நான்காம் வேற்றுமையின் கைங்கர்ய ப்ரார்த்தனையின் விளக்கத்தை அருளிச்செய்கிறார்.

**மூ . சூ .108. ஆகையால் "வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்" என்கிற ப்ரார்த்தனையைக் காட்டுகிறது .**

**விரிவுரை:** அதாவது - கைங்கர்யப்ரார்த்தனை இடையில் வந்ததன்றிக்கே, பகவானுக்கு அடியவன் என்ற தொடர்பாலே வந்ததாகையாலே "வழுவிலாஅடிமை செய்ய வேண்டும் நாம்" என்று, 'அடிமையில் ஒன்றும் நழுவாதபடி எல்லா அடிமைகளும் செய்ய வேண்டும் நாம்' என்கிற ப்ரார்த்தனையை இந்த நான்காம் வேற்றுமை காட்டுகிறதென்கை.

**தோற்றுவாய்:** இந்தக் கைங்கர்ய ப்ரார்த்தனை இடைவிடாமல் நடக்கைக்கு உறுப்பான பயனில் மிக்க சுவையுடையார் தன்மையை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ .109. "கண்ணாரக்கண்டு கழிவதோர் காதலுற்றார்க்குமுண்டோ கண்கள் துஞ்சுதல்" என்கிறபடியே காண்பதற்கு முன்பு உறக்கமில்லை, கண்டால் "ஸதா பச்யந்தி" ஆகையாலே உறக்கமில்லை.**

**விரிவுரை:** அதாவது, "இமையோர்கள் குழாம் தொழுவதும் சூழ்வதுஞ் செய் தொல்லைமாலைக் கண்ணாரக்கண்டு கழிவதோர் காதலுற்றார்க்கும் உண்டோ கண்கள் துஞ்சுதல்" என்று 'நித்ய ஸூரிகளுடைய திரளானது நிரந்தரம் அநுபவம் பண்ணுகிற ஸர்வேச்வரனைக் கண்கள் நிறையும்படி கண்டொழியக்கழியாத படியான காதலிலே நிலை நின்றவர்களுக்கும் கண்கள் உறங்குதல் உண்டோ' என்னுமாப்போலே, பகவத்விஷயத்தைக் காண்பதற்கு முன்பு அறிவு சுருங்குவதால் வரும் உறக்கமில்லை; கண்டகாலத்தில்

"ஸதா பச்யந்தி" (எப்போதும் பரமபதத்தில் பகவானைக்-காண்கிறான்) என்பதாலே உறக்கமில்லை.

தோற்றுவாய் : இன்னமும் ஒரு காரணத்தினாலே இவனுக்கு உறக்கமில்லாமையை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 110 . "பழுதே பல பகலும் போயின" என்று இழந்த நாளுக்குக் கூப்பிடுகிறவனுக்கு உறங்கவிரகில்லை .**

விரிவுரை: அதாவது "செங்கணடலோத வண்ணரடி அரவணைமேல் கண்டு தொழுதேன், பல பகலும் பழுதே போயின வென்று அஞ்சி அழுதேன்" என்று 'விஷயத்தைக் கண்டு அநுபவித்த வாறே இப்படி அநுபவிக்கைக்கு உடலான அநேக காலமொல்லாம் வீணே போய்விட்டதே' என்று இழந்த நாளை நினைத்து வருந்திக் கூப்பிடுகிறவனுக்கு மேலுள்ள நாளில் உறக்கம் வரவழிஇல்லை என்கை.

தோற்றுவாய்: இன்னமும் (இவ்விஷயத்தில்) பகவத்-விஷயத்தில் அறிவு பிறந்தார்க்கு மறக்கப்போகாது என்னுமத்தைப் பொருத்துவிக்கிறார்.

**மூ . சூ . 111 . "அன்று நான் பிறந்திலேன் பிறந்த பின் மறந்திலேன்" என்னா நின்றார்களிறே .**

விரிவுரை: அதாவது, 'அவன் என்னைப் பெறுவதற்குத் திருப்பதிகளிலே நிற்பது இருப்பது கிடப்பது ஆகாநிற்க, அக்காலத்தில் ஜ்ஞாநலாப ரூபமான ஜன்மத்தையுடைய-னாகப் பெற்றிலேன்; அந்த ஜன்மமுண்டான பின்பு, அவனை ஒருக்காலும் மறந்திலேன்' என்று சொல்லா நின்றார் களென்கை. ஆக, சிறப்புடைய பயனில் அறிவு பிறந்தார் தன்மை இதுவாகையாலே இந்தக் கைங்கர்ய ப்ரார்த்தனை இடைவிடாமல் நடக்குமென்று கருத்து.

தோற்றுவாய்: இனி, இந்தக் கைங்கர்யத்துக்கு தேச காலம் முதலான நியமமில்லாமையை அருளிச்செல்கிறார்.

**மூ. சூ. 112. இவ்வடிமைதான் "ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி" என்கிறபடியே ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் அநுவர்த்திக்கும்.**

*விரிவுரை:* அதாவது, இவ்வாத்மாவினுடைய இயல்பான தன்மைக்குப் பொருந்திய அரும்பயனான இந்தக் கைங்கர்யந்தான், "ஒழிவில் கால மெல்லா முடனாய் மன்னி" என்று 'ஒழிவில்லாத காலமெல்லாம் எல்லா இடத்திலும் உடனாய் எல்லாநிலைகளிலும் பிரியாது நின்று' என்கிறபடியே எல்லாத்தேசத்திலும் எல்லாக் காலத்திலும், எல்லா நிலைகளிலும் நடந்து செல்லுமென்கை.

*தோற்றுவாய்:* 'மணாட்டிக்குத் திருமாங்கல்ய தாரணம், மணாளனுக்கே உரித்தானவள்' என்று காட்டுமாபோலே, திருமந்த்ரதாரணம் (சேதநர்க்கு) மக்களுக்கு, 'பகவான் ஒருவனுக்கே உரிமைப்பட்டவர்கள்' என்பதை விளக்க இத்தை ஒரு மங்கள ஸூத்ரமாக நிரூபித்து அருளிச் செய்கிறார்.

**மூ. சூ. 113. எட்டிழையாய் மூன்று சரடாயிருப்பதொரு மங்கள ஸூத்ரம் போல திருமந்த்ரம்.**

*விரிவுரை:* அதாவது, பதினாறிழையாய், இரண்டு சரடாயிருப்பதொரு லௌகிகமான மங்கள சூத்திரம் போலன்றிக்கே, வைதிகமான மங்கள சூத்திரம் 'எட்டிழையாய் மூன்று சரடாயிருப்பதொரு மங்கள சூத்திரம் போலே' எட்டுத் திருவக்ஷரமாய் மூன்று பதமாயிருக்கிறது இத்திருமந்த்ரமென்கை.

*தோற்றுவாய்:* 'இப்படி நிரூபித்துச் சொன்ன இத்தால் எவ்வர்த்தம் சொல்லுகிறது?' என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ. சூ. 114. இத்தால், ஈச்வரன் ஆத்மாக்களுக்குப் பதியாய் நின்று ரக்ஷிக்கும் என்கிறது.**

*விரிவுரை:* அதாவது, மங்கள சூத்ரமாகச் சொன்ன இத்திருமந்த்ரத்தால், (ஈச்வரன்) நாராயணன் இந்த திருமந்த்ரத்தை ஆசார்யனாலே உபதேசிக்கப்பெற்ற ஸம்பந்த-

முடைய ஆத்மாக்களுக்குப் பதியாய் நின்று கொண்டு ரக்ஷிக்-கும் என்று சொல்லுகிறது என்கை.

தோற்றுவாய்: இனி, இந்த மந்த்ரத்தால் சொல்லப்-பெற்ற அர்த்தத்தைத் தொகுத்துச் சொல்லி இத்தை முடிக்கி-றார்.

**மூ. சூ. 115. ஆக, திருமந்த்ரத்தால் 'எம்பெரு-மானுக்கே உரியேனான நான் எனக்கு உரியனன்றிக்கே ஒழிய வேணும்; ஸர்வசேஷியான நாராயணனுக்கே எல்லா அடிமைகளும் செய்யப்பெறுவேனாக வேணும்' என்றதாயிற்று.**

*பிள்ளை லோகாசார்யர் திருவடிகளே சரணம்.*

*திருமந்த்ர ப்ரகரணம் முற்றிற்று.*

விரிவுரை: 'ஆக' என்றது, கீழே விரிவாக அருளிச்-செய்த எல்லாவற்றையும் தொகுத்து அருளிச் செய்கி-றாரென்னுமிடந்தோற்ற **'எம்பெருமானுக்கே உரியேனான நான்'**- இதில், 'எம்பெருமானுக்கு' என்ற நான்காம் வேற்றுமையை ஈற்றிலுடைய முதல் அக்ஷரத்தின் அர்த்தத்-தையும், ஏவகாரத்தாலே மத்யம அக்ஷரத்தின் அர்த்தத்தையும், 'உரியேனான நான்' என்று மூன்றாமக்ஷரத்தின் அர்த்தத்தை-யும் சொல்லுகையாலே, ப்ரணவத்தின் முதல் பதத்தைத் தொகுத்ததாகும். **எனக்குரியனன்றிக்கே ஒழியவேணும்** - இதில், எனக்குரியன் என்று ஆறாம் வேற்றுமையை ஈற்றிலே உடைய மகாரார்த்தத்தையும், அன்றிக்கே ஒழிய என்கையாலே 'ந'காரார்த்தத்தையும் வேணும் என்கையாலே இவ்வர்த்தம் சேதநனுக்கு ப்ராத்திக்கப்படுமது என்னுமத்தை-யும் சொல்லுகையாலே 'நம:' என்ற மத்யம பதார்த்தத்தைத் தொகுத்ததாகும்.

**ஸர்வ சேஷியான நாராயணனுக்கே எல்லா அடிமைகளும் செய்யப்பெறுவேனாக வேணும்:**- இதில், 'ஸர்வ சேஷியான நாராயணனுக்கே' என்று அடிமையை ஏற்கும் ஆண்டானை-யும், கைங்கர்ய ப்ரார்த்தனையின் விளக்கமான (ஆய)

என்ற நான்காம் வேற்றுமைமையும், 'எல்லா அடிமைகளும் செய்யப்பெறுவேனாக வேணும்' என்று கைங்கர்யப்ரார்த்த-னையின் விதத்தையும் சொல்லுகையாலே, மூன்றாம் பதம் தொகுத்ததாம். 'என்றதாயிற்று' என்றது - என்று சொல்லிற்-றாயிற்றென்கை.

இப்படி விரிவாக அருளிச் செய்ததை மீண்டும் சுருக்கமாக அருளிச்செய்தது, இந்தத் திருமந்த்ரார்த்தத்தை எல்-லோரும் அறிந்து நினைவிற்கொள்வதற்காக. ஆகையாலே, எல்லோருக்கும் இவ்வர்த்தம் எப்போதும் நினைவில் கொள்ளவேண்டும்.

**திருமந்த்ர ப்ரகரண வ்யாக்யானத்தின் தெளிவுரை முற்றிற்று.**

**ஜீயர் திருவடிகளே சரணம்.**

# முமுக்ஷுப்படி த்வய ப்ரகரணம்
# வ்யாக்யாந அவதாரிகையின் தெளிவுரை

முதல் மந்த்ரமான திருமந்த்ரத்தினுடைய அர்த்தத்தை அருளிச் செய்த பிறகு, அதில் இரண்டாம் பதத்தாலும் மூன்றாம் பதத்தாலும் சொன்ன உபாய உபேயங்களை விரிவாகச் சொல்லா நின்றுள்ள த்வயத்தினுடைய அர்த்தத்தை அருளிச்செய்கிறார்.

**முன்பு அருளிச் செய்த ச்ரிய:பதிப்படி யாத்ருச்சிகப்படி பரந்தபடி என்ற மூன்று ப்ரபந்தங்களிலும் திருமந்த்ர அர்த்தத்துக்குப் பிறகு சரமச்லோக அர்த்தத்தை அருளிச் செய்து பின்பு த்வயார்த்தம் அருளிச் செய்தவர், இப்போது த்வயத்தின் அர்த்தத்தை முன்னம் அருளிச் செய்வானென்? என்னில், இரண்டு விதங்களும் அருளிச் செய்யலாயிருக்கையாலே. பெரியவாச்சான்பிள்ளை, வாதிகேஸரி அழகிய மணவாளச்சீயர் முதலானாரும் இந்த விதமாக வன்றே அருளிச் செய்தது.**

**இந்த இரண்டு விதங்களுக்கும் கருத்து என்ன? என்னில்:** சரமச்லோகார்த்தம் முன்னாகவும், த்வயார்த்தம் பின்னாகவும் சொன்னது, சரமச்லோகத்தில் **'சரணம் வ்ரஜ'** 'உபாயமாகப் பற்று' என்று விதிக்க, த்வயத்தில் **'சரணம் ப்ரபத்யே'** என்று அநுஷ்டானத்தை மேற்கொண்டு 'உபாயமாகப்பற்றுகிறேன்' என்று சொல்லிப் பற்றுகையாலே, விதிக்கவும் அதை மேற்கொண்டு பற்றுகையுமாயிருக்கையாலே, இப்படி விதி முன்னாகவும் (அநுஷ்டானம்) மேற்கொண்டொழுகுவது பின்பாகவும் முறையாகையாலும் சரமச்லோகம் முன்பும் த்வயம் பின்பும் சொன்னதாம். திருமந்த்ரம் பயனைச் சொல்லுமதாய், சரமச்லோகம் அந்தப்பயனைத் தரும் சாதனத்தைச் சொல்லுமதாயிருக்கையாலே

முன் மூன்று ப்ரபந்தங்களில் சரமச்லோகம் முன்னும் த்வயம் பின்னுமாகச் சொன்னார்.

இந்த முமுக்ஷுப்படியில், திருமந்த்ரார்த்தம் த்வயார்த்தம் சரமச்லோகார்த்தம் இப்படிச் சொல்லியிருப்பதாவது: திருமந்திரத்தில் நடுப்பதத்துக்கும் மூன்றாம் பதத்துக்கும் இரண்டு வாக்கியங்களையுடைய த்வயம் விவரணமாய், அந்த த்வயத்துக்கு சரமச்லோகத்தில், முற்பாதி பிற்பாதி இரண்டு வாக்கியங்களையுடைய சரமச்லோகம் விவரணமாய் இருக்கும் ஆகாரத்தாலே அப்படி சொல்லப்பட்டது. இப்படி இருமுறைகளும் சொல்லலாயி ருக்கையாகையாலே, முன்மூன்று ப்ரபந்தங்களும் சரமச்லோகம் முன்னாக த்வயம் பின்னாகச் சொன்னவர், மற்றமுறையும் சொல்லவேண்டியதாகையாலே இந்த ப்ரபந்தத்தில் த்வயம் முன்னாகச் சொல்லுகிறார் என்றபடி.

**அவதாரிகையின் தெளிவுரை முற்றிற்று.**

**தோற்றுவாய்:** அதில் முதலிலே வைஷ்ணவனாயிருப்பானொருவனுக்குத் தன் அதிகாரார்த்தமாக அவச்யம் மேற்கொண்டொழுக வேண்டியவற்றைச் சுருங்கவும், தெளிவாகவும் அருளிச் செய்கிறார்.

**மூ - சூ - 116. புறம்புண்டான பற்றுக்களையுடைய வாசனையோடே விடுகையும், எம்பெருமானையே தஞ்சமென்று பற்றுகையும், பேறுதப்பாதென்று துணிந்திருக்கையும், பேற்றுக்கு த்வரிக்கையும், இருக்கும் நாள் உகந்தருளின நிலங்களிலே ப்ரவணனாய் குணாநுபவ கைங்கர்யங்களே பொழுது போக்காகையும், இப்படி இருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் ஏற்ற மறிந்து உகந்திருக்கையும், திருமந்த்ரத்திலும் த்வயத்திலும் நியதனாகையும், ஆசார்ய ப்ரேமம் கனத்திருக்கையும், ஆசார்யன் பக்கலிலும் எம்பெருமான் பக்கலிலும் க்ருதஜ்ஞனாய்ப் போருகையும், ஜ்ஞாநமும், விரக்தியும்,**

***சாந்தியும் உடையவனாயிருக்கும் பரமஸாத்விக-னோடே ஸஹவாஸம் பண்ணுகையும் வைஷ்ணவாதி-காரிக்கு அவச்யாபேக்ஷிதம்.***

*விரிவுரை : புறம்புண்டான பற்றுக்களையுடைய வாச-னையோடே விடுகையாவது,*

"பிதரம் மாதரம் தாராந் புத்ராந் பந்தூந் ஸகீந்குரூந், ரத்நாநி தநதாந்யாநி க்ஷேத்ராணி சக்ருஹாணி ச, ஸர்வதர்மாம்ச்ச ஸந்த்யஜ்ய ஸர்வகாமாம்ச்ச ஸாக்ஷராந், லோக விக்ராந்த சரணௌ சரணம் தேऽவ்ரஜம் விபோ"

*பிதரம் - பிதாவையும், மாதரம் - மாதாவையும், தாராந்-மனைவியையும், புத்ராந்--பிள்ளைகளையும், பந்தூந்-பந்துக்களையும், ஸகீந்-ஸ்நேஹிதர்களையும், குரூந்-ஆசார்யர்-களையும், ரத்நாநி- ரத்தினங்களையும், தநதாந்யாநி-தநதாந்யங்களையும், க்ஷேத்ராணிச-வயல்களையும், க்ருஹா-ணிச-வீடுகளையும், ஸர்வ தர்மாம்ச்ச (உபாயாந்தரங்-களான) அனைத்து தர்மங்களையும், ஸாக்ஷராந் - கைவல்ய-த்தோடு கூடிய, ஸர்வகாமாம்ச்ச - (மற்ற) அனைத்துப்பயன்-களையும், ஸந்த்யஜ்ய-நன்றாக விட்டு, விபோ-ஸ்வாமி! தே-தேவரீருடைய, லோக விக்ராந்த சரணௌ-உலகளந்த திருவடிகளையே, சரணம்-உபாயமாக, அவ்ரஜம்-பற்றி-னேன்.*

*இவை முதலானவற்றின் படியே எப்பெருமானைத் தவிர்ந்த விஷயங்களில் பற்றுக்களெல்லாவற்றையும், மீண்டும் வாராதபடி வாசனையோடு விடுகை. எம்பெருமானையே தஞ்சமென்று பற்றுகையாவது, வேறொன்று தஞ்சமென்கிற நினைவு கலசாதபடி, காரணமில்லாது இயல்பாகவே ரக்ஷகனான ஸர்வேச்வரனையே தஞ்சமாகப் பற்றுகை.*

*இந்த இரண்டு வாக்யத்தாலும் சரமச்லோகத்தில் முற் -பாதியில் அர்த்தத்தைச் சொல்லுகிறது. எவ்வாறெனில்? புறம்புண்டான பற்றுக்களையுடைய என்று 'ஸர்வதர்மாந்' என்கிற பதத்தில் அர்த்தத்தையும், வாசனையோடே விடுகை-யும் என்று 'பரித்யஜ்ய' என்கிற பதத்திலர்த்தத்தையும், எம்பெ ருமானை என்று 'மாம்' என்கிற பதத்தில் அர்த்தத்தையும்*

'ஏ' என்ற ஏவகாரத்தாலே 'ஏக' பதார்த்தத்தையும், தஞ்சம் என்கையாலே 'சரண' பதத்தில் அர்த்தத்தையும், பற்றுகையும் என்று 'வ்ரஜ' பதத்திலர்த்தத்தையும் அடைலே சொல்லுகை-யாலே.

பேறுதப்பாது என்று துணிந்திருக்கையாவது, உபாயத்தின் எளிமையையும் பெறவேண்டிய பலத்தில் நம்பிக்கை கொள்வதில் உண்டான அருமையையும், தன் திறத்துண்டான குறைபாடுகளையும், இதன் மூலமாக வரும் மூன்று ஐயங்களும் இல்லாமல், பலம் தப்பாமல் கிடைக்குமென்று நம்பிக்கையோடிருக்கை. பேற்றுக்கு த்வரிக்கையாவது: இப்படி நம்பிக்கையோடிருந்து பலம் கிடைத்த போது கிடைக்கட்டுமென்று ஆறி இராமல் "மாக வைகுந்தம் காண்பதற்கு என் மனம் ஏகமெண்ணும்" என்று-ம் " தாவிவையங்கொண்ட தடந்தாமரைகட்கே கூவிக் கொள்-ளுங்காலம் இன்னங்குறுகாதோ?" என்கிறபடியே முறைப்படி வரட்டும் என்று பொறுத்திருக்காமல் பதறுகை. இருக்கும் நாள் உகந்தருளின நிலங்களிலே ப்ரவணனாய் குணாநுபவ கைங்கர்யங்களே பொழுது போக்காகையாவது: அதாவது, பரமபதத்திலே போய் பகவதநுபவ கைங்கர்யங்களைப் பண்ணுகையாகிற பேற்றில் வேட்கை நடவாநிற்கச் செய்தேயும், இந்தச் சரீரத்தோடே இருக்கும் நாள் "தானுகந்த ஊர்" என்கிற படியே எம்பெருமான் உகந்து கோயில் கொண்டுள்ள திவ்விய தேசங்களிலே "கண்டியூரரங்கம் மெய்யம் கச்சிபேர்மல்லை" என்று மண்டுகையாகிற வேட்கையுடையவனாய், அவ்வோதிவ்விய தேசங்களிலே நிற்கிறவனுடைய கல்யாண குணாநுபவமும், அதன் மூலமாக முக்கரணங்களாலும் அவன் விஷயத்தில் செய்யுங் கைங்கர்யமுமே காலக்கழிவுக்கு விஷயமாம்படி இருக்கை.

இப்படி இருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் ஏற்றமறிந்து உகந்திருக்கையாவது: கீழ்ச் சொன்ன இந்த நிலைமைக ளெல்லாம் உடையராயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டால் நெருப்புச் சட்டியில் தாமரை பூத்தாற்போலே இந்த இருள் தருமா ஞாலத்திலும் இப்படியும் சிலருண்டாவதே! என்று அவர்கள் வைபவமறிந்து அவர்களளவில் பேரன்பு-

டையனாயிருக்கை. கீழ்ச்சொன்னவை எல்லாம் உண்டானா-லும் இது உண்டாவ தரிதாயிருப்பதொன்றன்றோ.

**திருமந்த்ரத்திலும் த்வயத்திலும் நியதனாகை-யாவது:-** வேறு மந்த்ரங்களின் திறத்தில் மறந்தும் போகாதே விடவேண்டியவற்றையும், பற்ற வேண்டியவற்றையும் தெளிய அறிவிக்குந் திருமந்த்ரத்திலும், அதன் அர்த்தத்துக்கு விவரணமான த்வயத்திலும் நிலைத்த நிஷ்டையுடையனாகை.

**ஆசார்ய ப்ரேமம் கனத்திருக்கையாவது:-** கீழ்ச்-சொன்ன நிலைமைகளெல்லாம் உபதேசத்தாலே தனக்குண்-டாக்கின ஆசார்ய விஷயத்தில், **"யஸ்ய தேவே பராபக்திர் யதாதேவே ததாகுரௌ".**

**யஸ்யதேவே** - யாதொருவனுக்குத் தெய்வத்தினிட-த்தில், **பராபக்தி:-** மேலான பக்தி (இருக்கிறதோ), **ததா** - அப்படியே, **யதாதேவே** - அந்தத் தெய்வத்திற்குச் சமமான, **குரௌ**-ஆசார்யனிடத்திலும், **பரா பக்தி:** மேலான பக்தி இருக்கின்றதோ, **தஸ்ய மஹாத்மந:-** அந்த மஹாத்மாவுக்கு, **கதிதா:-** சொல்லப்பட்ட, **ஏதே அர்த்தா:-** இந்த அர்த்தங்கள், **ப்ரகாசந்தே** - ப்ரகாஸியா நிற்கும். என்கிறபடியே ப்ரேமம் மிகுந்திருக்கை.

**ஆசார்யன் பக்கலிலும், எம்பெருமான் பக்கலிலும் க்ருதஜ்ஞனாய்ப் போருகையாவது:-** நித்ய ஸம்ஸாரியான தன்னை நித்யஸூரிகள் நிலைமைக்குத் தகுந்தவனாம்படி 'இரும்பைப் பொன்னாக்குவாரைப் போலே' திருத்தின ஆசார்யன் பக்கலிலும் தன்திறத்து த்வேஷமின்மை முதலான-வைகளை உண்டாக்கிக் கொண்டுவந்து ஆசார்யன் திறத்துச் சேர்த்த எம்பெருமான் பக்கலிலும் நன்றி பாராட்டும-வனாகை.

**ஜ்ஞாநமும் விரக்தியும் சாந்தியும் உடையனா-யிருக்கும் பரம ஸாத்விகனோடே ஸஹவாசம் பண்ணுகை-யாவது :-** அதாவது, தான் கலங்கினாலும் கலங்காமல் நோக்குகைக்கு உறுப்பாகவும், கீழ்ச்சொன்ன நிலைமைகள் தனக்கு மேம்படுகைக்கு உறுப்பாகவும், (தத்வ யாதாத்ம்ய ஜ்ஞாநமும்) உண்மையானவற்றை உள்ளபடி அறிகிற அறிவும்,

ாதவற்றில் வைராக்யமும் இவை இரண்டும் நமக்குண்டெ-
'று இறுமாப்பற்றிருக்கையாகிற சாந்தியும் உடையனாயிரு-
தம் பரம ஸத்வ நிஷ்டனாயிருப்பான் ஒரு பாகவதனோடே
சித்துப் போருகை. வைஷ்ணவாதிகாரிக்கு அவச்யாபே-
ிதம் என்றது, இவை இத்தனையும் வைஷ்ணவன் என்றிருப்-
ான் ஒரு அதிகாரிக்கு அவசியம் உண்டாக வேணுமென்கை.

தோற்றுவாய்: இப்படி இருக்கும் இவனுக்கு அநுஸந்தி-
; வேண்டியதை வகுத்து அருளிச் செய்கிறார்.

**மூ.சூ. 117. இந்த அதிகாரிக்கு ரஹஸ்யத்ரயமும் நுஸந்தேயம்.**

விரிவுரை: அதாவது - கீழ்ச் சொன்ன நிலைமை-
ளையுடையனாயிருக்கும் இவ்வதிகாரிக்கு, அந்த அறிவு
ழுக்கங்களை வளர்ப்பதான இந்த மூன்று மந்த்ரங்களுமே
ர்த்தத்தோடு அறிகைக்குரித்தான நினைவிற்கு விஷயமாகக்
ாள்ளவேண்டும்.

தோற்றுவாய்: இனி, த்வயத்திற் சொல்லுகிற சிறப்பு-
டமையை அறிவிக்கைக்காக, சாஸ்திரம் திருமந்த்ரம்
மச்லோகம் இவைகளில் அருளிச் செய்கிற விதங்களைச்
ால்லிக் கொண்டுபோய் த்வயார்த்தச் சிறப்பை அருளிச்
ய்கிறார்.

**மூ.சூ.118. எல்லா ப்ரமாணங்களிலும் தேஹத்-
லே பேறென்கிறது; திருமந்த்ரத்தில் ஆத்மா-
லேபேறென்கிறது; சரமச்லோகத்தில் ஈச்வரனாலே
றென்கிறது; த்வயத்தில் பெரியபிராட்டியாராலே
றென்கிறது.**

விரிவுரை: அதாவது, சேதனனுடைய சரீரத்தோடு
டியுள்ள நிலையிலே நோக்கான ஸகல சாஸ்த்ரங்களிலும்
ரதனத்தைக் கொண்டு ஒழுகுவதற்கு ஏற்றதான தேகத்தாலே
பனுக்கு ப்ரயோஜன லாபமென்கிறது. தேகத்தைத் தள்ளி
த்மஸ்வரூபத்தில் நோக்கான திருமந்த்ரத்தில், இவன்
காப்பில் நின்றும் கை வாங்கினாலொழிய எம்பெருமானு-

டைய ரக்ஷகத்வம் நடவாதாகையாலே, பகவத்ரக்ஷகத்வ விரோதியான தன்முயற்சியை விட்டிருக்கும் ஆத்மாவாலே புருஷார்த்தலாபமான பயனென்கிறது. எம்பெருமானுடைய ஸ்வதந்தரத்திலே நோக்கமான சரமச்லோகத்தில், (சேதனனுடைய) இவனுடைய பற்றுக்கோடும் மிகையாம்படி தானே கைக்கொண்டு தன்னை அடையத்தடையான அனைத்துப் பாபங்களையும் தள்ளி, தன் திருவடிகளில் சேர்த்துக் கொள்ளும் எம்பெருமானாலே பயனாகிறலாப-மென்கிறது. எம்பெருமான் பிராட்டியுடன் கூடியிருக்கிற நிலையில் நோக்கான த்வயத்தில், எம்பெருமானை சார்ந்திரு-ப்பவளான பெரிய பிராட்டியாராலே புருஷார்த்தலாபம் என்கிறது என்கை. புருஷார்த்தம் - பயன்.

தோற்றுவாய்: விரோதியைப் போக்கித் தன்னிடத்தில் சேர்த்துக் கொள்ளும் உபாயம் எம்பெருமானாயிருக்க பிராட்டியாலே பேறாகையாவதென்? என்கிற ஐயவினாவை அருளிச் செய்கிறார். பேறு - பயன்.

## மு . சூ . 119 . பெரிய பிராட்டியாராலே பேறா-கையாவது- இவள் புருஷகாரமானாலல்லது ஈச்வரன் கார்யஞ்செய்யானென்கை .

விரிவுரை: அதாவது, இஷ்டத்தைக் கொடுக்கையும், இஷ்ட மல்லாததைத் தள்ளுகையும் இரண்டும் செய்வான் எம்பெருமானாயிருக்கப் பெரிய பிராட்டியாலே இவனுக்குப் பேறாகையாவது:- இவனுடைய அபராதத்தைப் பாராதே ரக்ஷிக்கும்படி இவள் சிபாரிசு செய்தாலொழிய, ஈச்வரன் கார்யம் செய்யானென்றபடி என்கை.

தோற்றுவாய்: கீழ்ப் பொதுவிலே வைஷ்ணவாதி-காரிக்கு வேண்டியவற்றைச் சொல்லிற்று; சிறப்பித்து த்வயத்துக்கு அதிகாரியாமவனுக்கு வேண்டியவற்றை அருளிச் செய்கிறார்.

**மூ.சூ.120. த்வயத்துக்கு அதிகாரி ஆகிஞ்சந்யமும் அநந்ய கதித்வமும் உடையவன் .**

*விரிவுரை: அதாவது - ஸித்தமாயிருக்கிற எம்பெருமானை உபாயமாக வரிப்பதைச் சொல்லுவதாகிய த்வயத்துக்கு அதிகாரி,* "*அகிஞ்ச ந: அகதி:*" *(தன் காப்பில் கைம் முதலில்லாதவன். பிறன் வாசலும் புகாதவன்)* "*த்வமேவோபாய பூதோ மே பவ*" *(எனக்கு நீயே உபாயமாக வேணும்).*

"*அகிஞ்சநோऽநந்ய கதிஸ் சரண்ய*" *(தஞ்சமாகப் பற்றுவதற்கு உரியவனே, என் காப்பில் எனக்குரிமையும் பிறன் வாசல் புக உரிமையும் இல்லாதவன்.)* "*புகலொன்றில்லா அடியேன்*" *என்றுஞ் சொல்லுகிறபடியே (ஆகிஞ்சந்யமும்) கை முதல் இல்லாமையும், (அநந்யகதித்வமும்) வேறு கதியற்றவனும் ஆகிற இரண்டும் உடையவனென்கை.*

*தோற்றுவாய்: இவை இரண்டின் நிலை தான் என்? என்ன, அருளிச் செய்கிறார்.*

**மூ . சூ . 121 . இவை இரண்டும் ப்ரபந்ந பரித்ராணத்திலே சொன்னோம் .**

*விரிவுரை: அதாவது, எம்பெருமானைத் தவிர வேறு உபாயங்களை மேற்கொண்டொழுகுவதை அறத்தள்ளுகையாகிற ஆகிஞ்சந்யத்தின் நிலையையும், வேறொருவரை ரக்ஷகமாகக் கொள்ளாமையாகிற அநந்யகதித்வத்தின் நிலையையும் ப்ரபந்ந பரித்ராணம் என்ற நூலிலே தெரியச் சொன்னோம். அதிலே கண்டு கொள்வதென்கை.*

*தோற்றுவாய்: இனி, த்வயத்துக்கு வாக்யார்த்தம் அருளிச் செய்கிறார்.*

**மூ . சூ . 122 . இதில் முற்கூற்றால், பெரிய பிராட்டியாரை முன்னிட்டு ஈச்வரன் திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறது; பிற்கூற்றால் அச்சேர்த்தியிலே அடிமையை இரக்கிறது .**

**விரிவுரை:-** அதாவது, இந்த த்வயத்தில் முதல் வாக்கியத்தாலே 'ஸ்ரீமத்' என்று பெரிய பிராட்டியாரை முன்னிட்டு, "நாராயண சரணௌ" என்று ஈச்வரன் திருவடிகளை "சரணம் ப்ரபத்யே" என்று உபாயமாகப் பற்றுகிறது. உத்தரவாக்கியத்தாலே " ஸ்ரீமதே" என்று பெரிய பிராட்டியாரும் அவனுமான சேர்த்தியிலே, நாராயணாய என்கிற நான்காம் வேற்றுமையுருபாலே தொண்டினை ப்ரார்த்திக்கிறது என்கை. நமஸ்ஸு கைங்கர்யத்தை 'நான் செய்கிறேன் என்ற கர்த்ருவத்தையும், இது எனக்கு இன்பமாயி-ருக்கிறது' என்கிற போக்த்ருத்வமும்; அதாவது, 'நான்' 'என்-னது' என்கிற அஹங்காரமமகாரங்களை தொண்டாற்றுவதில் வரும் விரோதியைக் கழிப்பதைச் சொல்லுகையாலே, அடி-மையை இரக்கிறது என்ற இதிலே உட்படும்.

**தோற்றுவாய்:** இனி, பதத்துக்குப் பதம் அர்த்தம் அருளிச்செய்வதாகத் திருவுள்ளம் பற்றி "ஸ்ரீமத்" பதத்துக்கு அர்த்தம் அருளிச் செய்ய ஆரம்பிக்கிறார்.

**மூ. சூ. 123. ஸ்ரீ என்று பெரிய பிராட்-டியாருக்குத் திருநாமம்.**

**விரிவுரை :** "ஸ்ரீ" என்ற சொல் செல்வம் முதலானவைக-ளுக்குப் பெயராக உலகில் வழங்கக் காண்கையாலே, அதை வேறுபடுத்துகைக்காக "ஸ்ரீ" என்கிற இது பெரிய பிராட்டியா-ருக்குத் திருநாமம் என்கிறார். ஆகையாலன்றோ "**லக்ஷ்மீ: பத்மாலயா பத்மா கமலா ஸ்ரீர் ஹரிப்ரியா**" என்று மற்றத் திரு நாமங்களோடே கூட்டிச் சொல்லப்பட்டது. இது தான் எல்லாத் திருநாமங்கள் போலன்றிக்கே "**ஸ்ரீரிதி ப்ரதமம் நாம லக்ஷ்ம்யா:**" (ஸ்ரீ என்ற இது லக்ஷ்மீ தேவிக்கு முதல் திருநாமம்). என்கிறபடியே இவளுக்கு இது முதன்மையான பெயராயிருக்கும். "**அ இதி பகவதோ நாராயணஸ்ய ப்ரதமாபிதாநம்**" (அகாரமானது பகவானான நாராயணனு-டைய முதல் திருநாமம்) என்று அகாரம் எம்பெருமானுக்கு முதன்மையான திருநாமமானாற்போலே, இவளுக்கும் இது முதன்மையான திருநாமமாயிருக்கும் படி. அது, அவனுடைய

ரக்ஷகத்துக்கு அவச்யமான ஸ்வபாவங்களைச் சொல்லும்; இது இவளுடைய புருஷகாரத்துக்கு அவச்யமான ஸ்வபாவங்களைச் சொல்லக் கடவதாயிருக்கும். புருஷகாரம்- சேர்ப்பித்தல். அல்லது சிபார்சு செய்தல் என்பதைக் குறிக்கும்.

தோற்றுவாய்: இனி, இந்த சப்தத்துக்கு அர்த்தம் அருளிச் செய்வதாக முதலில் இதன் மேல் வந்த சொல் பொருள் தொடர்புகளின் இரண்டு வகைகளை அருளிச் செய்கிறார்.

**மூ. சூ. 124. ஸ்ரீயதே, ச்ரயதே.**

விரிவுரை: அதாவது - "ச்ரிஞ்ஸேவாயாம்" என்கிற வினைப்பகுதியில் 'ஸ்ரீயத இதி - ஸ்ரீ:, ச்ரயத இதி - ஸ்ரீ:' என்ற தேர்ந்ததான செயப்படுபொருளைக்காட்டுவதாயும், எழுவாய் பொருளைக் காட்டுவதாயும் உள்ளதைச் சொன்னபடி.

தோற்றுவாய்: இந்தச் சொல்பொருள் தொடர்புகளின் வகை இரண்டுக்கும் அர்த்தம் அருளிச் செய்கிறார்.

**மூ. சூ. 125. இதுக்கு அர்த்தம் - எல்லார்க்கும் இவளைப்பற்றி ஸ்வரூபலாபமாய், இவள் தனக்கும் அவனைப் பற்றி ஸ்வரூபலாபமாயிருக்கும் என்று.**

விரிவுரை: அதாவது கர்மணி, கர்த்தரி என்ற இந்த இரண்டு வ்யுத்பத்திகளுக்கும் அர்த்தம் 'ஸ்ரீயதே' என்று எல்லோராலும் ஸேவிக்கப் பெறுகிறாள் என்பதாலே எல்லா (சேதநர்களுக்கும்) மக்களுக்கும் இவளைப் பற்றித் தங்களுடைய சேஷத்வமான ஸ்வரூபலாபமாய், "ச்ரயதே" என்று ஈச்வரனை ஸேவியா நின்றாள் என்கையாலே, இவள் தனக்கும் ஈச்வரனைப் பற்றித் தன்னுடைய சேஷத்வ ரூபலாபமாயிருக்கும் என்கை. இவள் தனக்கு சேதந விஷயத்தில் சேஷித்வமும் ஈச்வர விஷயத்தில் சேஷத்வமும் என்றும் உண்டாயன்றோ இருப்பது. ஆகையால், இந்த ஸேவிக்கப் பெறுகை, ஸேவிக்கை என்கிற இரண்டும் இவளுக்கு நித்யமாய்ச் செல்லா நிற்கும்.

தோற்றுவாய்: எம்பெருமானுக்கு உபாயத்வமும் (உபேயத்வமும்) பயனுமாகிற இருநிலைகளும் உண்டானாற்போலே, இவளுக்குப் புருஷகாரத்வமும் (ப்ராப்யத்வமுமாகிற) பயனுமாகிற இருநிலைகளும் உண்டாகையாலே, இதில் எந்த நிலையை நினைத்து இப்போது சொல்லுகிறது? என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ. சூ. 126. இப்போது இவளைச் சொல்லுகிறது புருஷகாரமாக.**

விரிவுரை: 'புருஷகாரமாக' என்கையாலே உபாய வஸ்து விசேஷணமாகச் சேர்ந்திருக்கையாகிற நிலையையிட்டு இவளுக்கும் உபாயத்வம் சொல்லும் கொள்கையுடையாருடைய பக்ஷம் கண்டிக்கப்பட்டது என்கை.

தோற்றுவாய்: எம் பெருமானுடைய நாராயணத்வம் காரணமாக இயல்பான ஸம்பந்த ஜ்ஞாநம் முதலியவை உடையவனாய்க் கொண்டு அவனை ஆச்ரயிக்கிற இந்தச் சேதநனுக்கு இவளைச் சிபாரிசாகிற புருஷகாரமாக முன்னிட வேண்டுகிறது தான் எதற்கு? என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ. சூ. 127. நீரிலே நெருப்புக் கிளருமாபோலே குளிர்ந்த திருவுள்ளத்திலே அபராதத்தால் சீற்றம் பிறந்தால் பொறுப்பது இவளுக்காக.**

விரிவுரை: குளிர்ந்த நீரிலே, சென்று அணுகவொண்ணாதபடியான நெருப்புக்கிளருமாபோலே, "ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்" (எல்லாப்ராணிகளிடத்தும் நட்பையே உடையவன்). "ஸமோஹம் ஸர்வபூதேஷு" (நான் எல்லா ப்ராணிகளிடத்தும் வித்யாசமில்லாமல் ஸமமாகவே இருக்கிறவன்தான்) என்கிறபடியே எல்லா ப்ராணிகளிடத்தும் நேய மனப்பான்மையுடையனாயும், ஸமமாகவே எல்லாராலும் தஞ்சமடையத்தக்கவனாயுமுள்ள ஸ்வபாவ விசேஷங்களாலே, தெளிந்து குளிர்ந்திருக்கிற எம்பெருமான் திருவுள்ளத்திலே, "பரிபூர்ணாகஸிஜநே ஹிதஸ்ரோதோ வ்ருத்த்யா பவதிச கதாசித் கலுஷதீ:"

*பரிபூர்ண அகஸி - நிரம்பின குற்றத்தைச் செய்த, ஜநே - சேதநர்களிடத்தில், ஹிதஸ்ரோதோ வ்ருத்த்யா- (பிற்காலத்தில்) நன்மையை விளைக்கிற நீர்ப்பெருக்கின் செயல்போன்ற செயலாலே (அநுகூலனேயானாலும், பின்விளையும் நன்மையைக் கருதி), கதாசித் - ஒரு கால் (பெருங்குற்றத்தைச் சேதநர்களிடத்தில் காண்பதனால்) கலுஷதீ: - கலங்கினவனாக, பவதிச - ஆகவும் ஆகிறான். என்கிறபடியே சேதநனுடைய அளவிறந்த குற்றங்களின் காரணமாக க்ஷிபாமி (பிறவிக்கடலில் தள்ளுவேன்) நக்ஷமாமி (பொறுக்கமாட்டேன்) என்னும் படியான சீற்றம்பிறந்தால் அந்தக் குற்றங்களைப் பொறுப்பது.*

*"கிமேதந் நிர்தோஷ:க இஹஜகதி" ஏதத் - இந்தகோபம், கிம் - (இங்ஙனம் மனம் கலங்குவது) என்ன? இஹஜகதி - இந்த உலகத்தில், நிர்தோஷ: குற்றமற்றவன் க: ஆர்?, இதி - என்று சொல்லி. என்கிற படியே, தன் உபதேசம் முதலானவைகளாலே அந்தக் கோபத்தையாற்றித் தயையைப் பிறப்பிக்கும் இவளுக்காக என்கை. ஆகையாலே, பகவான் திறத்து ஸம்பந்த ஜ்ஞாநம் பிறந்தவனுக்கும் இவன் அபராத பயத்தாலே புருஷகாரத்தை முன்னிடுகை தேவை என்று கருத்து.*

*தோற்றுவாய் : சேதநன் கார்யத்தைத் தான் மேற்கொண்டும் எம்பெருமானை வசீகரித்தும் இரண்டு பக்ஷத்தையும் பொருத்துகைக்கு இவள் தான் இடையூறில்லாத புருஷகாரமோ? என்ன, அருளிச் செய்கிறார்.*

**மூ . சூ . 128 . இவள் தாயாய், இவர்கள் க்லேசம் பொறுக்கமாட்டாதே அவனுக்குப் பத்நியாய், இனிய விஷயமாயிருக்கையாலே, கண்ணழிவற்ற புருஷகாரம் .**

*விரிவுரை: அதாவது, "த்வம் மாதா ஸர்வலோகாநாம்" (உலகத்து எல்லா ப்ராணிகளுக்கும் நீயே தாய்) என்றும் "அகிலஜகந்மாதரம்" (அனைத்து ஜகத்துப்ராணிகளுக்கும் தாயானவளை) என்றும் சொல்லுகிறபடியே இந்தச் சேதநர்களுக்கு இவள் தாயாய், " தந்தம் மக்களழுது சென்றால்*

தாய்மாராவார் தரிக்ககில்லார்" என்கிறபடியே தாயான தொடர்பின் காரணமாக இவர்களுடைய வருத்தங்கண்டால் பொறுக்கமாட்டாதே, "விஷ்ணு பத்நீ" என்று அவனுக்குப் பத்தினியாய், " பித்தர் பனிமலர்மேல் பாவைக்கு" என்கிற படியே, அவன் இவள் தன்னுடைய பிறரெவர்க்குமில்லாத பேரழகுமுதலானவற்றைக் கண்டு பிச்சேறித் தன் சொல்வழி நடக்கும்படி இஷ்டமான பொருளாயிருக்கையாலே (கண்ணழிவற்ற) தடையற்ற புருஷகாரம் ஆவாள் என்றபடி.

தோற்றுவாய்: 'எல்லாம் செய்தாலும் தடையில்லாத சுதந்திரனான எம்பெருமான் சேதநனுடைய அபராதங்களைத் தான் பத்தும் பத்தாகநிறுத்து அறுத்துத் தீர்த்துவன் என்றவன் நிற்குமளவில், இவளாலே பொறுப்பிக்கப்-போமோ?' என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ. சூ. 129. திருவடியைப் பொறுப்பிக்குமவள். தன் சொல்வழி வருமவனைப் பொறுப்பிக்கச்சொல்ல வேண்டாவிறே.**

விரிவுரை: அதாவது, பிராட்டியைப் பத்துமாதம் மருட்டுவதும் பழிப்பதுமாகிய கொடுஞ்செயல்களைச் செய்த ராக்ஷஸிகளின் அபராதங்களைக் கணக்கிட்டுச் சித்ரவதம் செய்யமுயன்ற சொல்லை மீறுந்தன்மையனான திருவடியை-யும் உட்பட, "க:குப்யேத்" (அரசன் வயத்தவராய் அவனால் ஜீவிக்குமவர்களாய் அவன் அதீனத்திலிருப்பவர்களாய், அவன் ஏவினதைச் செய்ததைக் கொடுந்தொழிலென்று எவன்கோபிப்பான்) என்றும் "நகச்சிந்நாப ராத்யதி" (தப்பு செய்யாதவன் எவன்) என்றும், இவை முதலான உபதேசங்க-ளாலே பொறுப்பிக்குமவள், "மலராள் தனத்துள்ளான்" என்றும், "மாமலர் மங்கை மண நோக்க முண்டான்" என்றும் "அல்லிமலர் மகள் போக மயக்குக்களாகியும் நிற்கும்" என்றும், தன் இனிமையிலே ஆழ்ந்து "நின்னன் பின்வழி நின்று சிலைபிடித்து எம்பிரானேக" என்கிறபடியே 'மாயா-விலங்கின் பின்னே போ' என்னிலும் மேல்விளைவு அறியா-தே அதன்பின்னே போம் படி, தன் சொல்வழி வருமவனைப் பொறுப்பிக்கவல்லள் என்னுமிடம் சொல்ல வேண்டாதா-

*யிற்று என்கை. "செய்தகவினுக்கில்லை கைம்மாறு" என்னும்படி இருவர்க்கும் கலங்கி உபகரித்து தன் சொல்வழியே போக வேண்டும் படியான திருவடியோடே (மறுதலிக்குமவள்) எதிரிடுமவள், "தான் முயங்கும்" (அணைக்கப்பெற்ற) என்னும் படியான இனிமைக்குத்தோற்று 'எத்தைச் செய்வோம்'. என்று கலங்கி, "நின்னன்பின்வழி நின்று", 'அதனின் பின்னே படர்ந்தான்' என்னும்படி மேல் விளைவதறியாதே, புன்முறுவலுக்குத் தோற்று சொல் வழிபோமவனைப் பொறுப்பிக்கும் என்னுமிடம் சொல்ல வேண்டா என்று இது தன்னை இவர் திருத்தம்பியாரும் அருளிச் செய்தார் என்ற படி.*

ஆக, ஸ்ரீமத் பதத்தில் பகுதியைக் குறித்து அருளிச் செய்தார் கீழ்; விகுதிப் பொருளைக் குறித்து அருளிச் செய்கிறார் மேல்.

### மூ. சூ. 130. மதுப்பாலே இருவர் சேர்த்தியும் நித்ய மென்கிறது.

*விரிவுரை:* "ஸ்ரீமத்" என்ற பதத்தில் 'ஸ்ரீ' என்ற பகுதிப்பொருளைச் சென்னார். இப்போது 'மத்' என்ற விகுதிப் பொருளைச் சொல்லுகிறார். அதாவது, இம்மதுப்புத்தான் நித்தியமாகவே கூடி இருத்தல் என்ற பொருளைத்தரும் மதுப்பாகையாலே, இத்தால் புருஷகாரம் செய்பவளான பிராட்டியும், இவள் புருஷகாரத்தை ஏற்றுச் சேதநனுக்கு உபாயமாகும் ஈச்வரனும் ஆகிய இருவருடைய சேர்த்தியும் எப்போதும் உண்டு என்னுமிடம் சொல்லுகிறதென்கை. நித்யம் - நிலையாக.

*தோற்றுவாய்:* இந்த நித்ய யோகத்தின் சிறப்பைச் சொல்லுகிறார்.

### மூ. சூ. 131. இவளோடே கூடியே வஸ்துவினுடைய உண்மை.

*விரிவுரை:* அதாவது, "ச்ரிய: பதிர் நிகில ஹேயப்ரத்ய நீக கல்யாணைகதாநஸ் ஸ்வேதர ஸமஸ்தவஸ்து

விலக்ஷணாநந்த ஜ்ஞாநாநந்தைக ஸ்வரூப:" நிகில: - ஸமஸ்தமான, ஹேயப்ரத்ய நீக - தாழ்ச்சிக்கெல்லாம் எதிர்த்தலையான, கல்யாண - மங்கள குணங்கட்கு, ஏகதான - முக்கியமான ஆதாரமும், ஸ்வ இதர -தன்னில் வேறுபட்ட, ஸமஸ்தவஸ்து - எல்லாப்பொருள்களைவிட, விலக்ஷண - வேறுபட்டுத் தோன்றுபவனாய், ஜ்ஞாந - ஞாநமென்ன, ஆநந்த - ஆநந்தமென்ன (இவைகளை) ஏகஸ்வரூப - முக்கியமான ஸ்வரூபமாக உடையவனுமான, ச்ரி:பதி - திருமால். என்று ஸ்வரூபநிரூபகமான ஜ்ஞாநாந்தாதிகளுக்கு முன்னே ச்ரிய:பதித்வத்தைச் சொல்லும்படி அவன் ஸ்வரூபத்துக்கு முக்கிய நிரூபகையாயிருக்கையாலே, இவளோடே கூடியே வஸ்துவினுடைய நிலை பேறு இருப்பது என்கை.

ஆக, பிராட்டியின் ஸ்வரூபத்தோடே சேர்ந்திரு-க்கும்படியான எம்பெருமானுடைய நித்யயோகத்தை அருளிச் செய்தாராயிற்று.

தோற்றுவாய் : இனி, இவளுடைய குணமடியாக எப்போதுங் கூடியிருக்குமதை அருளிச் செய்கிறார்.

### மூ - சூ - 132 ஈச்வர ஸ்வாதந்த்ர்யத்தையும் சேதன-னுடைய அபராதத்தையுங் கண்டு அகலமாட்டாள் -

விரிவுரை: அதாவது, அபராதங்களை ஒன்றும் விடாது கணக்கிட்டு, அறுத்து அறுத்துத்தீர்க்கும் எம்பெருமானுடைய ஸ்வாதந்தர்யத்தையும், "யத்ப்ரஹ்ம கல்பநியுதாநுபவேப்ய நாச்யம்" (யத் - எந்தப் பாபமானது, ப்ரஹ்மகல்பநியுத அநுபவேபி - பிரமனுக்கு ஏற்பட்டிருக்கும் படியான ஆயுளின் லக்ஷம் மடங்குகாலம் அநுபவித்தாலும், அநாச்யம்- நீங்காதோ, தத்கில்பிஷம் - அப்படிப்பட்ட பாபத்தை, இஹப்ராணி - இவ்வுலகில் ப்ராணியானது, க்ஷணார்த்தே ஸ்ருஜதி - அரைக்ஷணத்தில் செய்கிறது. என்றபடி கால தத்துவமுள்ளதனையும் அநுபவித்தாலும் சிறிது கழிந்தது என்று அளவிட்டுக்காட்ட முடியாதபடி செய்து வைத்திருக்கும் இச்சேதநனுடைய தகாத செயல்களையுங்கண்டு ஏதாய்விடுமோ? என்னும் பயத்தாலே

எம்பெருமானை விட்டு பிராட்டி ஒரு கணமும் விட்டகலமாட்டாள் என்கை.

தோற்றுவாய்: இத்தால் சேதநனுக்கு பலிக்குமதை அருளிச்செய்கிறார்.

**மூ . சூ . 133. சேதநனுக்கு இவையிரண்டையும் நினைத்து அஞ்சவேண்டா .**

விரிவுரை: அதாவது, இப்படி இவள் இருந்து நோக்குகையாலே ஈச்வரனுடைய ஸ்வாதந்தர்யமும், தன் அபராதமுமாகிற இவை இரண்டையும் நினைத்து 'நமக்கு என்ன (தீங்கு) விளையுமோ?' என்று அஞ்சவேண்டா என்கை.

தோற்றுவாய்: இனி, இம்மதுப்பின் (தாத்பர்யம்) சுருக்கமான ஸாராம்ஸம் இது என்று அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 134 . இத்தால், ஆச்ரயிக்கைக்கு ருசியே வேண்டுவது, காலம் பார்க்கவேண்டா என்கிறது .**

விரிவுரை: அதாவது, இப்படிப்புருஷகார உபாயமாகிய வஸ்துக்களான இருவருமான சேர்த்தியை எப்போதுங்கூடி இருப்பதைக் காட்டும் இம்மதுப்பால் உபாயமான எம்பெருமானை ஆச்ரயிப்பார்க்கு, ஆச்ரயிக்கையில் ருசியே வேண்டுவது. 'இருவரும் சேர்ந்திருக்கும் தசையிலே ஆச்ரயிக்கவேணுமே' என்று ஆச்ரயணத்துக்குக் காலம் பார்க்க வேண்டா யென்கிறதென்கை.

தோற்றுவாய்: இனி, இவள் புருஷகாரம் அவச்யம் தேவை என்பதை அறிவிக்கைக்காக, இவள் கூடி இருப்பதாலும் பிரிந்திருப்பதாலும் உண்டான நன்மை, தீமைகளை அருளிச்செய்கிறார்.

**மூ . சூ . 135 . இவள் ஸந்நிதியாலே காகம் தலை பெற்றது; அது இல்லாமையாலே ராவணன் முடிந்- தான் .**

*விரிவுரை:* "தேவ்யா காருண்ய ரூபயா" (ஸ்ரீதேவியானவள் கருணையே வடிவெடுத்தவள்) என்கிறபடியே கருணைதான் ஒரு வடிவு கொண்டாற்போலே இருப்பவளாய், ஸ்வதந்திரனான ஈச்வரனுக்கு ஸ்வாதந்தர்யத்தை அமுக்கிக் கருணையைக்கிளப்புமவளான இவள் கூடி இருந்ததாலே பேரபராதத்தைச் செய்து அதனாலே ப்ரஹ்மாஸ்திரத்துக்கு இலக்காய் தலையறுப்புண்கைக்கு உரித்தான காகம், "க்ருபயா பர்யபாலயத்" (தன்னுடைய கருணையாலே நன்றாகரக்ஷித்தான்.) என்கிறபடியே, கருணைக்கு இலக்காய் தலைபெற்றுப் போயிற்று. அப்படியான இவள் கூடி இல்லாமையாலே போக்கற்றுச் செயல் மாண்ட நிலை ஒத்திருக்கச் செய்தேயும், காகத்தினுடைய பேரபராதம் இல்லாதிருக்க, ஸ்ரீராம பாணத்துக்கு இலக்காய் ராவணன் முடிந்து போனான் என்கை. ஆகையால், பெருமானை அடையும்பொழுது பிராட்டி ஸந்நிதி அவச்யம் வேணும் என்று கருத்து. ஆக, ஸ்ரீமத் பதத்தினுடைய அர்த்தத்தை அருளிச் செய்து முடித்தார்.

*தோற்றுவாய்:* பிறகு, நாராயண பத அர்த்தத்தை அருளிச் செய்கிறார்.

**மூ. சூ. 136. புருஷகாரபலத்தாலே ஸ்வாதந்த்ர்யம் தலை சாய்ந்தால் தலையெடுக்குங் குணங்களைச் சொல்லுகிறது நாராயணபதம்.**

*விரிவுரை:* அதாவது, உபதேசத்தாலும், தன்பேரழகாலும் தடையற வசீகரித்து காரியங்கொள்ள வல்ல புருஷகார பலத்தாலே அவனைஅடைய முயலும் சேதநன், ஆரம்பம் அறியமுடியாத காலமாகப் பண்ணின குற்றங்களைப் பார்த்துச்சீறி, 'கைக்கொள்ளமாட்டேன்', என்றிருக்கும் ஈச்வர ஸ்வாதந்த்ர்யம் தலை மடிந்தால், அதன் கீழ்தலை எடுக்கமுடியாத அழுத்தம் தீர்ந்துத் தலையெடுக்கும் குணங்களைச் சொல்லுகிறது நாராயணபதம் என்கை.

*தோற்றுவாய்:* அந்தக் குணங்கள் தான் எவை? என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ. சூ. 137. அவையாவன - வாத்ஸல்யமும், ஸ்வாமித்வமும், ஸௌசீல்யமும், ஸௌலப்யமும் ஜ்ஞாநமும், சக்தியும்.**

விரிவுரை: அவையாவன - என்று தொடங்கி இவற்றில், வாத்ஸல்யம் ஆவது:- அன்றீன்ற கன்றின் திறத்துப்பசு காட்டும் பரிவு. அதாவது, அதன் மீதுள்ள வழும்பைச் சுவைத்துப் புஜிக்கையும், பால்கொடுத்து வளர்க்கையும், அதன் அருகே சென்றவர்களை முட்டுதல் உதைத்தல் முதலியவைகளால் ரக்ஷிக்கையும்; அப்படியே ஈச்வரனும் குற்றங்களைக் குணமாகக் கொண்டு "பாலேபோல் சீரெ"ன்ற குணங்களாலே தரிக்கச் செய்து "கதஞ்சன - ந த்யஜேயம்" (ஒருபடியாலும் கைவிடுபவனல்லேன்). "**அபயம் ஸர்வ பூதேப்ய:**" (எல்லா ப்ராணிகளிடத்தும் பயமாற்றிக்கச் செய்வேன்.) என்கிறபடியே அநுகூலர்நிமித்தமாகவும் ப்ரதிகூலர்நிமித்தமாகவும் நோக்கும். **ஸ்வாமித்வமாவது:-** இவன் பராமுகனான நிலையிலும் விடாதே நின்று நன்மையே குறிக்கொள்ளஉற்குக்காரணமான ஒரு பந்த விசேஷம்; அதாவது உடையவனாயிருக்குமிருப்பு; துவேஷம் இல்லாமை தொடங்கி கைங்கர்யம் வரை உண்டான ஸ்வபாவ விசேஷங்களையெல்லாம் உண்டாக்குகிறது இந்த பந்தவிசேஷம்.

**ஸௌசீல்யமாவது:-** உபய விபூதிநாயகத்வத்தாலும் பெரிய பிராட்டியாருடைய சேர்த்தியாலும், தடையற்ற ஸ்வாதீநனாயிருக்கிற மேன்மையையும், தங்கள் சிறுமையையும் பார்த்து "**அவனெவ்விடத்தான் யானார்**" என்று பின் வாங்காதபடி எல்லாரோடும் ஒக்க மேல்விழுந்து வேறுபாடின்றி கலக்கையும், அது தன் பயனாகக் கருதுகையும், எதிர்த்தலையில் விருப்பமின்றிக்கே இருக்கக் கலந்து பரிமாறுகையும் முதலானவைகள்.

**ஸௌலப்யமாவது:-** கண்காண முடியாதபடி இருக்கிற தான் கண்ணாலே கண்டு பற்றலாம்படி இருக்கை. **ஜ்ஞாநமாவது:-** எம்பெருமான் இந்த அடியானுக்குக் கழிக்க வேண்டிய விரோதிவர்க்கத்தையும் கொடுக்கவேண்டிய விருப்பத்திற்குரியதையும் நேரே அறிந்து கொள்ளஉற்குரிய,

தன்னையும் அனைத்துப் பொருள்களையும் ஒரே நேரத்தில் காணவல்ல பேறறிவு.

சக்தியாவது - மிகத்தாழ்ந்தவர்களான ஸம்ஸாரிகளை நித்ய சூரிகளோடு ஒரு கோவையாக்கவல்ல பொருந்தாதவற்றையும் பொருந்துவிக்கும் ஸாமர்த்யம்.

இவற்றில் வாத்ஸல்யாதிகள் நாலும் எம்பெருமானை அடையச் சௌகரியத்தை செய்யக்கூடிய குணங்கள். ஜ்ஞாந சக்திகள் அடைந்தாருடைய காரியங்கள் செய்கைக்குரிய குணங்கள். "நிகரில் புகழாய்" என்று தொடங்கி வாத்ஸல்யாதிகள் நாலையுமல்லவா அடையத்தக்கதாக ஆழ்வார் அருளிச் செய்தது. ஜ்ஞாந சக்திகள் இரண்டைச்சொன்னது, ப்ராப்தி பூர்த்திகளுக்கும் உபலக்ஷணம்; கார்யஞ்செய்வதற்கு இவையும் தேவைப்படுவதால் சொல்லப்பட்டது என்கை.

தோற்றுவாய்: இந்தக் குணங்களுக்கு இவ்விடத்தில் உபயோகம் எவை? என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 138 . குற்றங்கண்டு வெருவாமைக்கு வாத்ஸல்யம்; கார்யஞ்செய்யுமென்று துணிகைக்கு ஸ்வாமித்வம்; ஸ்வாமித்வங்கண்டு அகலாமைக்கு ஸௌசீல்யம்; கண்டு பற்றுகைக்கு ஸௌலப்யம்; விரோதியைப் போக்கித் தன்னைக் கொடுக்கைக்கு ஜ்ஞாநசக்திகள் .**

விரிவுரை: அதாவது, அடையமுயலும் இச்சேதநன், தன் குற்றத்தைக் கண்டு அஞ்சாமைக்குரியது, குற்றத்தைக் குணமாகக் கொள்ளும் வாத்ஸல்யம் என்ற குணம். 'நம் கார்யம் செய்யுமோ, செய்யானோ? ' என்று ஐயப்படாதே கார்யம் செய்யுமென்று நம்புகைக்கு உறுப்பு ஸ்வாமித்வம் என்ற குணம். இத்தால், இழத்தல் பெறுதல் தன்னதாம்படியான ஸ்வாமித்வ குணத்தின் செயல் எனப்படும். இருள் தருமாஞாலம் என்கிற பூலோம் தொடக்கமான உலகத்திற்கும் தெளிவிசும்பு திருநாடு என்ற பரமபதம் என்கிற இரண்டு விதமான உலகங்களுக்கெல்லாம் நாயகத் தன்மையைக்காட்டிக்

கொடுக்கிற ஸ்வாமித்வத்தைக் கண்டு, தன்தாழ்வை நினைத்து அகலாமைக்கு உறுப்பு; தாழ்ந்தாரோடும் வேற்றுமையறக் கலக்கும் தன்மையது ஸௌசீல்யம் என்ற குணம். கண்காணமுடியாதவனென்று பின்வாங்காதபடி கண்ணாலே கண்டு பற்றுகைக்குரியது, தன் வடிவைக் கண்ணுக்கிலக்-காக்கும் ஸௌலப்யம் என்ற குணம். "ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" 'எல்லாப் பாபங்களினின்றும் விடுவிக்கி-றேன்.' என்கிறபடியே தன்னையடையத் தடைசெய்யும் விரோதிகளைப் போக்கிப் பயனான தன்னை உபகரிக்கைக்கு உறுப்பு, பயனான தன்னை அடையும் இச்சேதநன் இவன் கீழ்நின்ற நிலையும் மேல் அடையவேண்டிய தேசத்தையும் அறிகைக்கும் அறிந்தபடியே செய்து முடிக்கைக்கும் அவச்யமானது ஜ்ஞாந சக்திகளென்ற குணங்களென்பது.

தோற்றுவாய்: அவனை அடைய உதவும் நான்கு குணங்-களில் ஸௌலப்யம் முக்கியமாகையாலே அந்த ஸௌலப்ய-த்தில் எல்லையை அருளிச் செய்கிறார். ஸௌலப்யம்- சுலபத்-தன்மை.

## மூ . சூ . 139 . இங்குச்சொன்ன ஸௌலப்யத்து-க்கு எல்லைநிலம் அர்ச்சாவதாரம் .

விரிவுரை: அதாவது, இந்த நாராயண பதத்தில் அவ-னை அடைய முக்கிய உபயோகியான ஸௌலப்யத்துக்கு முடிவானது "தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவம் தானே" என்கிறபடியே அடியார் உகந்த தொன்றைத் திருமேனியாகக் கொண்டு கோயில்களிலும் இல்லங்களிலும் எழுந்தருளி இருக்கும் அர்ச்சாவதாரம் என்கை.

தோற்றுவாய்: அவற்றைத் தொடர்ந்து சொல்லுகிறார்.

## மூ . சூ . 140 . இதுதான் பரவ்யூஹ விபவங்கள் போலன்றிக்கே கண்ணாலே காணலாம்படி இருக்கும் .

விரிவுரை: அதாவது, இந்த அர்ச்சாவதாரம்தான் வேறுதேசமான பரத்வத்துக்கு இடமான பரமபதமும், வ்யூஹத்துக்கிடமான பாற்கடலும் இந்தத்தேகத்தால்

காணமுடியாததாயும் கால வேறுபாட்டாலே இப்போதுநாம் காணமுடியாதபடிபோன ராமன் கண்ணன் முதலான விபவாவதாரங்கள் போலல்லாமல், நமக்கு ஸமீபமாய் நாம் காணலாம்படி திவ்யதேசங்களிலும் இல்லங்களிலும் என்றும் இருக்கும் அர்ச்சாவதாரம் என்கை.

தோற்றுவாய்: இந்தக் குணங்களெல்லாம் அர்ச்சாவதாரத்தில் காணலாமோ? என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 141. இவையெல்லாம் நமக்கு நம் பெருமாள் பக்கலிலே காணலாம் .**

விரிவுரை: அதாவது, அவனை அடையத்தடை செய்யுமவற்றை நீக்குமதும், அவன் நம் கார்யம் செய்ய உபயோகப்படுமதாயும் உள்ள இந்த குணங்களெல்லாம் இவற்றைக் காண விருப்பமுடைய நமக்கு நம்முடைய பெருமாள் பக்கலிலே காணலாமென்கை.

தோற்றுவாய்: பெருமாள் பக்கலில் இக்குணங்களுக்கு ப்ரகாசங்களாய் விளக்கங்களாயுள்ளவற்றைச் சொல்லி, இவற்றோடு நிற்கிற நிலையே நமக்குத் தஞ்சமென்கிறார்.

**மூ . சூ . 142. திருக்கையிலே பிடித்த திவ்யாயுதங்களும், வைத்து அஞ்சல் என்ற கையும், கவித்த முடியும், முகமும் முறுவலும், ஆஸநபத்மத்திலே அழுத்தின திருவடிகளுமாய் நிற்கிற நிலேயே நமக்குத் தஞ்சம்.**

விரிவுரை: அதாவது கார்யஞ்செய்ய உபயோகியான ஜ்ஞான சக்திகளுக்கு விளக்கமாம்படி திருக்கைகளிலே தரித்துக் கொண்டிருக்கிற சங்க சக்ரம் முதலான திவ்யாயுதங்களும், வாத்ஸல்யம் தோன்றும்படி வைத்து அஞ்சலென்றகையும், ஸ்வாமித்வம் விளங்கும்படியான கவித்த முடியும்,ஸௌசீல்யத்தை விளக்குமதான முகமும் முறுவலும் அனைவரும் கண்டு பற்றலாம்படியான ஸௌலப்யங்காட்டுமதான (ஆஸநபத்மத்திலே) தாமரைமலராசனத்திலே அழுத்தின திருவடிகளுமாய்க் கொண்டு எழுந்தருளி நிற்கிற

நிலையே வேறு புகலற்ற நமக்கு ரக்ஷகமென்கை. உபாய உபேய நிஷ்டர்கள் விரும்பும் ரக்ஷகத்வமும், சுவையுடைய பயனும் ஆகிற இரண்டு தன்மையும் கீழ்ச் சொன்னபடியே எம்பெருமானுடைய திருமேனியிலே தோற்றும் என்கிறார்.

ஆயுதங்களையேந்துகை, சக்திமானுடைய கார்யமாகையாலும், அடியார்கள் விரோதிகளை அறிந்து ஏந்திய ஆயுதங்களைக் கொண்டுகளைவது ஜ்ஞாநவானுடைய கார்யமாகையாலும், எம்பெருமான் தனது திருக்கையிலேந்திய திவ்யாயுதங்கள் அவனது ஜ்ஞாந சக்திகளுக்கு விளக்கம். எம்பெருமானது அஞ்சலென்று காட்டுகிற அபயமுத்திரை. சேதநர் தங்களது குற்றங்களை நினைந்து அகலாமலிருக்கைக்குக் காரணமாகையால் வாத்ஸல்யம் அடையாளமாகும். பெரியோனாயிருப்பவன் மிகவும் தாழ்ந்தாரோடு பேதமின்றிச் சேர்ந்திருக்கை புன்முறுவலும் மலர்ந்தமுகமும் உண்டாவது இஷ்டங்களைக் காணும் போதேயாதலால், சேதநனை அவ்வெம்பெருமான் காணும்போது அந்தப் பரமனிடத்துத் தோன்றுகின்ற முகமலர்ச்சியும், குதூகலமும் அவ்வெம்பெருமானுடைய ஸௌசீல்யத்தைக் காட்டும்.

வேறு புகலற்றவர்கள் - அவ்வெம்பெருமானைத் தவிர வேறொரு புகலிட மில்லாதவர்கள்.

*தோற்றுவாய்:* எம்பெருமானை (ஆறும்)உபாயமாகவும் (பேறுமாக) பயனுமாகக் கொண்டுள்ளவர்கள் வேண்டும் நிலைமைகளிரண்டும் கீழ்ச் சொன்னபடியே நிற்கிற திருமேனியிலே தோற்றும் என்கிறார்.

**மூ . சூ . 143 . ரக்ஷகத்வ போக்யத்வங்கள் . இரண்டும் திருமேனியிலே தோற்றும் .**

*விரிவுரை:* அதாவது, காத்தலுக்கு உபயோகமான திவ்யாயுதங்களோடும், காப்பதற்குக் கவித்த முடியோடும் கூடியிருக்கையாலே ரக்ஷகத்வம் தோன்றுகையாலும், "அணியாராழியும் சங்கமும் ஏந்தும்", "முடிச்சோதியாய் உனது முகச்சோதி மலர்ந்ததுவோ" என்கிற படியே அவைதானே அழகை உண்டாக்குவதற்குக் கருவியாய்,

வைத்தஞ்சலென்றகையும் முகமும் முறுவலும் தாமரைமலரில் அழுத்தின திருவடிகளும் ஒவ்வொன்றே அழகுக்குச் சிகரமா-யிருக்கையாலே இனிமையாயிருக்கக்கூடிய போக்யத்வம் தோற்றுகையாலும் இரண்டும் திருமேனியிலே தோற்று-மென்பது.

ஆக, நாராயண பதப்பொருளை அருளிச்செய்தாரா-யிற்று.

தோற்றுவாய்: இனி, 'சரணௌ' என்கிற பதத்துக்கு அர்த்தம் அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 144 . சரணௌ - திருவடிகளை .**

விரிவுரை: 'சரணௌ' என்றால், திருவடிகளை என்று பொருள்.

தோற்றுவாய்: இந்த 'சரணௌ' என்கிற (த்விவசனம்) இருமைச் சொல்லால் சொல்லுகின்ற அர்த்தத்தை அருளிச்-செய்கிறார்.

**மூ . சூ . 145 இத்தால்- சேர்த்தியழகையும், உபா-யபூர்த்தியையும் சொல்லுகிறது .**

விரிவுரை: அதாவது, 'சரணௌ' என்று இரண்டு திரு-வடிகளையும் சொல்லுகிற இத்தால், **"இணைத்தாமரையடி"** என்கிறபடியே, இரண்டு தாமரைப்பூவை வரிசையாகச் சேரவைத்தாற்போலே சேர்த்தியழகையும், இருமைச் சொல்-லானது இரண்டுக்குமேல் வேறொன்று புகுவதைப் பொறுக்-காமையாலே இன்னொன்றைத் துணையாகக் கூட்டு வேண்-டாத அவனுடைய பரிபூர்ண உபாயத்தன்மையைச் சொல்லு-கிறது என்பது.

தோற்றுவாய்: உபாயமான தனித்தன்மைக்கு இதன் குணமிகுதியை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 146 . பிராட்டியும் அவனும் விடிலும் திருவடிகள் விடாது; திண் கழலாயிருக்கும் .**

*விரிவுரை:* அதாவது, "ஸ்ரீமத்" பதத்திலே புருஷகார-பூதையாகச் சொன்ன பிராட்டியும், இவள் தானே "சிதகுரைக்கிலும்" என்கிறபடியே குறை கூறிலும் "என்னடியார் அது செய்யார்" என்னும்படி நாராயணபதத்-தில் சொன்ன குணங்களோடு கூடிய அவனும் கைவிடிலும், திருவடிகள் தன்பேரழகைக் காட்டிக் கட்டுப்படு-த்திக்கொள்ளுகையாலே கைவிடாது; "வண்புகழ் நாரணன் திண்கழல்" என்கிறபடியே பற்றினாரை நழுவவிடாதபடி திண்மையை- உறுதியை உடைத்தாயிருக்குமென்கை.

*தோற்றுவாய்:* இந்தக் குணமிகுதியைப் பற்றவும-ல்லாமல், அடியவனான தன் இயல்பாம் தன்மைக்குப் பொருந்த திருவடிகளிலே இழிகை என்பதற்கு உதாரண முகத்தால் அருளிச் செய்கிறார்.

**மூ - சூ - 147 - சேஷிபக்கல் சேஷபூதன் இழியும் துறை; ப்ரஜை முலையிலே வாய்வைக்குமாபோலே .**

*விரிவுரை:* அதாவது, ஆண்டானைத் தஞ்சமென்ற-டைய நினைக்கும் அடியான் தன் இயல்புக்குப் பொருந்த இழியும் துறை திருவடிகளாகும். எதுபோலேயென்னில்? முலையுண்குழவி தாயினுடைய உறுப்பெல்லாமிருக்கத் தனக்கு வகுத்ததாயுள்ள தநத்திலே வாய் வைக்குமாபோலே என்கை.

*தோற்றுவாய்:* திருவடிகளைச் சொன்ன இது திரு-மேனிக்கும் உபலக்ஷணம் என்கிறார் மேல்.

**மூ - சூ - 148 - இத்தால், பிராட்டிக்கு இருப்பிட-மாய், குணப்ரகாசகமுமாய், சிசுபாலனையும் அகப்படத் திருத்திச் சேர்த்துக் கொள்ளும் திருமேனியை நினைக்கிறது .**

*விரிவுரை:* அதாவது, 'சரணௌ' என்கிற இது, திருமே-னியின் ஒரு பகுதியான திருவடிகளைச் சொன்ன இத்தால்,

"திருவிருந்த மார்பன்" என்னும்படி "ஸ்ரீமத்" பதத்தில் சிபாரிசு செய்பவளான பிராட்டிக்கு இருப்பிடமாய் "நாராயண" பதத்திற் சொன்ன குணங்களுக்கு விளக்கமாய் "பலபல நாழஞ்சொல்லிப் பழித்த சிசுபாலன்" என்கிற-படியே பல நிந்தைகளைச் சொல்லிப் பகை வைத்தவனாய்ப் பழிச் சொற்களைச் சொல்லித்திரிந்த சிசுபாலனையும் உட்பட "அலவலைமை தவிர்த்த அழகன்" என்கிறபடியே வாய்வந்தபடியே பிதற்றின பகைமை தவிரும்படி தன்னழ-காலே திருத்தி "திருவடி தாட்பாலடைந்த" என்கிறபடியே சேர்த்துக் கொள்ளும் இயல்புடைத்தான திருவடி என்று சொல்லுகிற படி பரமபதத்திலுள்ள பஞ்ச உபநிஷத்மயமாய் குறைபாடொன்றும் சாராததான திருமேனியை நினைக்கிறது என்கை.

தோற்றுவாய்: பிறகு 'சரண' பதப்பொருளை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 149 . சரணம் - இஷ்டப்ராப்திக்கும் அநிஷ்ட நிவாரணத்துக்கும் தப்பாத உபாயமாக.**

விரிவுரை: அதாவது - "உபாயே க்ருஹ ரக்ஷித்ரோச் சப்த ச்சரணமித்யயம், வர்த்ததே ஸாம்ப்ரதஞ்சைஷ உபா-யார்த்தைக வாசக:" சரணம் இதி - சரணமென்கிற, அயம் சப்த: - இந்த சப்தமானது, உபாயே -உபாயத்திலும், க்ருஹர-க்ஷித்ரோ: - க்ருஹத்திலும் ரக்ஷகனிடத்திலும், வர்த்ததே-இருக்கிறது. (இப்படி அர்த்தமானாலும்) ஸாம்ப்ரதம் இப்போது (இவ்விடத்தில்), ஏஷ: - இந்த சரண சப்தமானது, உபாயார்த்த ஏகவாசக: - உபாயத்திற்கே பேராகக் கடவது. என்கிற படியே, சரணசப்தம் ரக்ஷகனுக்கும், வீட்டிற்கும், உபாயத்துக்கும் பேரேயாகிலும், இவ்விடத்தில் உபாயத்து-க்கே பெயராகும். இந்த உபாயத்தின் செய்கையாவது, இஷ்டத்தைக் கொடுப்பதும், இஷ்டமில்லாததைத் போக்கக்-கூடியதும் ஆகையாலே இஷ்டப்ராப்திக்கும் அநிஷ்ட நிவாரணத்துக்கும் தப்பாத உபாயமாக என்று இப்பதத்துக்கு அர்த்தம் அருளுகிறார். இஷ்டம், அநிஷ்டம் என்பவைகள்

தாம் இன்னவை என்பதனைப் 'பரந்தபடி' என்ற நூலிலே விரிவாக அருளிச் செய்தார்.

ச்ரிய: பதிப்படியிலும் "அநிஷ்டமாகிறது - அறிவின்மையும் இவற்றின் காரியமான இச்சையும், பகைமையும். இவற்றின் கார்யமான நல்வினை, தீவினைகளும் இவற்றின் கார்யமான தேவன், மனுஷ்யன், விலங்கு, தாவரங்களான நான்கு விதமான உடல்களும். ஆதி ஆத்மிகம் (தன்னாலேயே நேரும் துன்பங்கள்), ஆதிபௌதிகம் இதர ப்ராணிகளால் வருந்துன்பங்கள்.) ஆதி தைவிகம் (தெய்வத்தால் வரக்கூடியது.) முதலான துக்கப்பரம்பரைகள் என்று கூறியிருக்கிறார்.

இஷ்டமாகிறது - எம்பெருமானது மேலான கருணையாலே மோக்ஷத்தைப் பெறும் ஆத்மாக்கள், இந்தத்தூல உடம்பிலிருந்து சூக்குமஉடலோடு புறப்பட்டு சூரிய கிரணத்தைப் பற்றிக் கொண்டு முதலில் அர்ச்சிஸென்கிற அக்னியையும், பின்பு அஹஸ்ஸையும், சுக்லபக்ஷ அபிமானியையும், உத்தராயணாபிமாநியையும், ஸம்வத்ஸர அபிமாநியையும், வாயுவையும், முறையே கிட்டி, இவர்கள் வழி நடத்தப் பின்பு சூர்ய மண்டலத்தைப் பேதித்துக் கொண்டுபோய்ச் சந்திரனைக்கிட்டி, அவன் கௌரவித்து அவன் வழிநடத்த, பின்பு வருணனையும், இந்திரனையும் பிரம்மாவையும் முறையே கிட்டி அவர்கள் உலகங்களையும் கடந்து, இவ்வண்டத்தையும், இதைச்சுற்றியுள்ள ஏழு ஆவரணங்களையும், (மூலப்ரக்ருதி) மூலப்பகுதியையும் கடந்து விரஜையாற்றை அடைந்து அதில் மூழ்கித் தாம் கொண்டிருந்த அரு உடல் முதலியன கழியப்பெற்று, அந்நதியின் அக்கரையிலுள்ள அமாநவர் தொடுகையாலே பஞ்சஉபநிஷந் மயமான திவ்ய தேஹம் பெற்று, மீளுதலில்லாத பரமபதத்தைப் பெற்று, பரமாத்மதர்சநமும் குணாநுபவகைங்கர்யங்களை பெறுகையுமாம்."

தோற்றுவாய்: கீழ்க் குறிப்பிட்டபொருளை உபாயமாகச் சொன்னதின் தாத்பர்ய ஸாரத்தை அருளிச் செய்கிறார்.

**மூ.சூ.150. இத்தால், ப்ராப்யந்தானே ப்ராபகம் என்கிறது.**

*விரிவுரை:* கீழ் 148ஆம் சூத்ரத்தில், பிராட்டிக்கி இருப்பிடமான எம்பெருமானையே உபாயமாகச் சொல்லுகிற இத்தால், பயனாம்பொருள்தானே பயனைச் சாதிக்கும் சாதனமாகச் சொல்லுகிற தென்கை.

*தோற்றுவாய்:* கீழே பயனைச் சொன்னதுண்டோ? என்ன, அருளிச் செய்கிறார்.

### மூ.சூ.151. கீழ்ச் சொன்னமூன்றும் ப்ராப்யமிறே.

*விரிவுரை:* அதாவது, "ஸ்ரீமந் நாராயண சரணௌ" என்று ஒரு தொடராகச் சொன்ன இதில், பெரிய பிராட்டியாரோடு கூடி இருக்கை, திவ்யமங்கள குணங்கள், திருமேனியோடு இருக்கையாகிய மூன்றும். "ச்ரியா ஸார்த்தம் ஆஸ்தே" (நித்யமுக்தர்களோடும் பிராட்டியோடும் கூடி எம்பெருமான் பரமபதத்தில் வாழ்கிறான்) என்றும், "ஸர்வாந் காமாந் அச்நுதே" (அந்த உபாஸகன் எல்லாவற்றையும் உணர்ந்த பரப்ரஹ்மத்தோடு அனைத்துக் கல்யாண குணங்களையும் அநுபவிக்கிறான்). என்றும், "ஸதா பச்யந்தி ஸூரய:" (பரமபதத்தில் அந்த எம்பெருமானுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தை நித்யஸூரிகள் நிரந்தர மாகக் கண்டு இன்புறுகிறார்கள்) என்றும், இப்படி பெரிய பிராட்டியோ-டும், கல்யாண குணங்களோடும், திவ்ய மங்கள விக்ரஹத்தோ-டும் கூடி இருப்பவனைக் கண்டு இச்சேதநன் இன்புறும் பயனெனச் சொன்னதாம். சேதநன் - ஜீவாத்மா.

*தோற்றுவாய்:* ஆனால், பயனகிய இத்தை, உபாயமா-கிய சாதனமாக்குகிறது தான் என்? என்ன, அருளிச் செய்கிறார்.

### மூ.சூ. 152. இவன் செயலறுதியாலே உபாய-மாக்கு கிறானித்தனை.

*விரிவுரை:* தன்னைத்தானே ரக்ஷித்துக்கொள்ள முடியாத அகிஞ்சனானவனும் எம்பெருமானைத் தவிர

வேறொருவரையும் காப்பாகக் கொள்ளாதவனுமாகிய இவன், தன் செயலறுதியாலே சுவைமிக்க பாலை மருந்தாக்குவரைப் போலே, பயனான பெருமானையே சாதனமாக்குகிறானித்-தனை என்கிறார்.

தோற்றுவாய்: இது தன்னாலே இந்த உபாயத்துக்கு ஒரு சிறப்பைச் சொல்லுகிறது என்கிறார்

## மூ. சூ. 153. "சரணௌ சரணம்" என்கையா-லே உபாயாந்தரவ்யாவ்ருத்தமான உபாயம் என்கிறது.

விரிவுரை: அதாவது, "சரணௌ சரணம்" என்று பயனான வஸ்து தன்னையே சாதனமாகச் சொல்லுகை-யாலே, (உபாயாந்தரங்களான) வேறு உபாயங்களான கர்மஜ்ஞாந பக்திகள் முதலானவைகள் சாதனமாகவும், அவைகளால் சாதிக்கப்படும் பகவத்கைங்கர்யமாகிய பயனும் வெவ்வேறாயிருக்கும் உபாயாந்தரங்களில் காட்டில், வேறுப-ட்ட உபாயம் இது என்னுமிடம் சொல்லுகிறது என்கை.

தோற்றுவாய்: பிறகு, வினைச் சொல்லுக்குப்பொருள் அருளிச் செய்கிறார்.

## மூ. சூ. 154. ப்ரபத்யே - பற்றுகிறேன்.

விரிவுரை: அதாவது, இப்பதம் 'பதகதௌ' என்ற வினைப்பகுதியடியாக வந்ததாகையாலே கதிசப்தம் பற்றுதல் என்ற பொருளைத்தருவதாகையாலும் தன்மை முன்னிலை படர்க்கை ஆகிய மூன்றிடங்களில் உத்தமன் என்ற தன்மைக்கு இடமாகையாலே ; 'பற்றுகிறேன்' என்று இதற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்.

தோற்றுவாய்: இந்தப் 'பற்றுதல்' தான் (மாநஸமாயும்) மனதாலும், (வாசிகமாயும்) வாக்காலும், (காயிகமாயும்) உடலாலும் ஆகிய முக்கரணங்களாலும் பற்றுதலைக் காட்டக் கடவதாகையாலே, எந்தக் கரணத்தால் உண்டான பற்றுதலைச் சொல்லுகிறது? என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 155 . வாசிகமாகவும் காயிகமாகவும் பற்றினாலும் பேற்றுக்கு (இழவில்லை) அழிவில்லை 'ஜ்ஞாநாந்மோக்ஷம்' ஆகையாலே, மாநஸமாகக் கடவது.**

*விரிவுரை:* அதாவது, "பவ சரணம்" (நீயே) உபாயமாக ஆவாய்.) என்கிறபடியே ப்ரார்த்திக்கையாகிற வெறும் வாசிகமாகவும், "அஞ்ஜலி: பரமா முத்ரா க்ஷிப்ரம் தேவப்ரஸாதிநீ" பரமாமுத்ரா-சிறந்த அடையாளமான, அஞ்ஜலி: - இருகைகளும் கூப்பி வணங்குகை, க்ஷிப்ரம் - சீக்கிரமாக, தேவப்ரஸாதிநீ - தேவனுடைய கருணையை உண்டாக்கும். என்கிறபடியே பகவானுடைய கருணையை உண்டாக்குகின்ற அஞ்ஜலியைச் செய்தல். குகப்பெருமாள் காகம் முதலானவைகளைப் போலே ரக்ஷிக்கக்கூடிய எம்பெருமான் இருக்குமிடத்தில் போதலாகிற வெறும் உடாலாகிய உறுப்பாலே பற்றினாலும் பலம் கிடைப்பது தவறுவது கிடையாது. "ஜ்ஞாநாந் மோக்ஷ:" ஜ்ஞாநத்தா-லேயே மோக்ஷம். என்கையாலே, மாநஸமான கரணத்தாலே பற்றுதலாகக் கடவது என்கை. அதாவது, மனஸாலே பற்றுவதென்பது மனத்தின்கார்யமான உறுதியான நினைவு, இதை 'புத்திவிசேஷம்' என்பர். இந்தப் புத்தி விசேஷத்தைப் பரந்த படியிலே விரிவாகச் சொன்னார். ச்ரிய: பதிப்படியிலும், 'இந்தப் புத்தி விசேஷமாகிறது: பிறர்க்குரியத-ல்லாத அவனுக்கே உரிமையான சேஷத்வ ஜ்ஞாந கார்யமாய் மற்ற உபாயங்களில் மேம்பட்டு வேறுபட்டதாய், (காக்குமவன் செயலைத் தடுக்குமதான தன் முயற்சியைத் தள்ளி,) பகவான் காப்பதை அநுமதிப்பதாய், ஒரேமுறை (சரணாகதி) செய்யவேண்டியதாய், பலனில் நழுவுதல் காலதாமதம் செய்தலில்லாததாய், பிறப்பு செயல் அறிவுகளால் குறைவாளரும் செய்தற்குரியதாய், இன்னார் தான் செய்யக்கூடும் இன்ன காலத்தில் தான் செய்யலாம் இன்ன விதம் தான் செய்வது இவை முதலான நியமங்களில் லாததாய், மரணகாலத்தில் பகவானை நினைவு கொள்ளவேண்டுமென்பதில்லாததாய், வருத்தமின்றிச் செய்யக் கூடியதாய், (ப்ரார்த்த நாரூபமாய்) ப்ரார்த்திப்பதை

செயலாக உடையதாய், திடநம்பிக்கையோடிருப்பது முதலான ஜ்ஞாநவிசேஷம்" என்று ப்ரபத்தியினுடைய லக்ஷணத்தை அருளிச் செய்தார். ஆகையால், இவ்விடத்தில் அதையும் நினைவில் கொள்வது.

தோற்றுவாய்: இப்படி, மாநஸ மாத்திரமே போதுமோ? "சிந்தையாலும் சொல்லாலும் செய்கையாலும்" என்று ஆழ்வார்அருளியபடியே முக்கரணங்களாலும் பற்ற வேண்டாவோ? என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ . சூ. 156. உபாயம் அவனாகையாலும், இவை நேரே உபாயம் அல்லாமையாலும், இம்மூன்றும் வேணும் என்கிற நிர்ப்பந்தம் இல்லை .**

விரிவுரை: அதாவது, பலன் தருபவன் பகவானேயாகையாலும் முக்கரணங்களாலும் பற்றுதல்களான இவை, மேலெழுந்தவாரியாக உபாயம்போல் தோற்றிக்கழியுண்டு போமதொழிய, இது ஸாக்ஷாத்தான உபாயமல்லாமையாலும், பயனடைதற்கு நம்பிக்கையோடு கூடிய மனக்கரணத்தால் பற்றுகையே போதும். இவை மூன்றும் வேண்டுமென்ற நிர்பந்தமில்லையென்கை.

அன்றிக்கே, இப்படி ஒவ்வொன்றேபோதுமென்று சொல்லுவானென்? முக்காரணங்களாலும் பற்றுதலைச் சொன்னாலோ என்ன? உபாயம் அவனாகையாலும் என்று தொடங்கி அருளிச் செய்கிறாராகவுமாம். அப்போதும் ஓரொன்றே போதும். இம்மூன்றும் வேணும் என்ற நிர்பந்தமில்லை என்கை.

நிர்பந்தம் இல்லை என்கையாலே இந்தப் பற்றுகையானது முக்கரணங்களாலும் உண்டானாலும் குறையில்லை என்பது தோற்றுகிறது. "பற்றுகிறேன்' என்ற "இந்த ப்ரபத்தி, முக்கரணங்களாலும் உண்டாகவுமாம் ஒரு கரணத்தாலே உண்டாகவுமாம் பலன் கிடைப்பதில் குறையில்லை. இவன் தகுதிக்கு முக்கரணங்களுமே வேணும்; பலன் கிடைப்பதற்கு ஒரு கரணமே போதும்.

உபாயமாகும் அவன் தகுதிக்கு ச்ரிய: பதித்வமும், வாத்ஸல்யம் முதலான குணங்களும், திவ்ய மங்களமான திருமேனியும் வேண்டற்பாடாயிருக்குமாபோலே, இவன் தகுதியாம் பூர்த்திக்கு முக்கரணங்களுமே வேண்டற்பாடாயிருக்கும்" என்றிவர் தாமே பரந்தபடியிலே அருளிச் செய்தது.

**தோற்றுவாய்:** "ஸக்ருதேவஹி சாஸ்த்ரார்த்த: க்ருதோயம் தாரயேந்நரம்" ஸக்ருத் - ஒரு தடவை, க்ருத: - அநுஷ்டிக்கப்பட்ட, அயம் - இந்த, சாஸ்த்ரார்த்த - சாஸ்த்ரார்த்தமான, ஏவஹி - இந்த பரபத்தியே, நரம்-மநுஷ்யனை, தாரயேத் - ஸம்ஸாரத்தினின்றும் தாண்டுவிப்பிக்கும். "ஸக்ரு தேவ ப்ரபந்நாய" ஸக்ருதேவ-ஒரு தரமே, ப்ரபந்நாய-ப்ரபத்தி பண்ணினவனும். இவை முதலானவைகளில் சொல்லுகிறபடியே ப்ரபத்தி ஒரு தரமே அநுஷ்டிக்கவேண்டியதாயிருக்க. "முக்காலத்திலும் ஒத்தியல் பொருளைச் செப்புவர் நிகழுங்காலத்தானே" என்று நிகழ்காலத்துச்சொல் முக்காலத்திய நிகழ்ச்சியைச் சொல்லுவதாகையாலே, 'பற்றுகிறேன்' என்ற நிகழ்காலமாகச் சொல்வதால் எப்போதும் சொல்ல வேண்டியதாகுமாதலால் நிகழ்காலமாகச் சொல்வது எதற்கு? என்ன, அருளிச்செய்கிறார்.

**மூ - சூ - 157 - வர்த்தமாந நிர்த்தேசம் - ஸத்வம் தலை எடுத்து அஞ்சினபோது அநுஸந்திக்கைக்காக -**

விரிவுரை: அதாவது, "**லோக விக்ராந்த சரணௌ சரணம் தேS வ்ரஜம் விபோ**" விபோ - ஸ்வாமி!, தே - தேவரீருடைய, **லோக விக்ராந்த சரணௌ** - உலகத்தை யளந்த திருவடிகளையே, **சரணம்** - உபாயமாக, **அவ்ரஜம்** - பற்றினேன். என்றும், "**நின்னடியினை அடைந்தேன்**" என்றும், "**அடிக்கீழமர்ந்து புகுந்தேன்**" என்றும் இறந்தகாலமாகச் சொல்லாமல், "ப்ரபத்யே" பற்றுகிறேன் என்று நிகழ்காலமாகச் சொல்லுகிறதாவது, சரீரத்தோடே இருக்கிற இவன், ராஜஸ தாமஸங்களாலே கலங்கி இதர உபாயங்களான அபாயங்களில் ஏதேனும் ஒன்றில் தொடர்பு கொண்டு பிறகு ஸத்வம் தலையெடுத்து அநுதாபம் பிறந்து பயப்பட்ட காலத்திலே, "ப்ராயச்சித்திரியம் ஸாத்ர யத்புநச்சரணம்-

வ்ரஜேத் " புந:- மறுபடியும், சரணம் வ்ரஜேத் (இதியத்) - (பகவானையே) உபாயமாகப்புத்திபண்ணுகிறானென்பது யாதொன்றுண்டு, ஸாஇயம் - இந்த இதுவே, ப்ராயச்சித்தி:- (தவறினதுக்கு) ப்ராயச்சித்தமாகும். என்கிறபடியே ப்ரபத்தி தவிர அதற்குப் பரிஹாரமில்லாமையாலும், அது தான் ஒரு தரமே செய்ய வேண்டிய நியமமாகையாலும், மீண்டும் செய்தல் கூடாமையாலும் முன்செய்த ப்ரபத்தியையே நினைவிற் கொள்ளுகைக்காக (கொழுந்து படக்கிடக்கிறது) இந்தப்ரபத்தியே மேன்மேலும் உண்டாயிருக்கும் என்றபடி.

தோற்றுவாய்: இன்னமும் நிகழ்காலமாக பற்றுவதற்குச் சில ப்ரயோஜநங்களை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 158. உபாயாந்தரங்களில் நெஞ்சு செல்லாமைக்கும், காலக்ஷேபத்துக்கும், இனிமையாலே விடவொண்ணாமையாலும் நடக்கும் .**

விரிவுரை: அதாவது, முன்பின் பழக்கத்தாலே எப்போதாகிலும் பகவானைத் தவிர்ந்த வேறு உபாயங்களான கர்மஜ்ஞாந பக்திகளிலே மநம் செல்லாமைக்கும், இதைச் சொல்லுகையின்றி பொழுது போக்க அரிதாகையாலே காலங்கழிப்பதற்காகவும் இதனுடைய சுவை மிகுதியாலே இதை விடமாட்டாமையாலும், இடைவிடாமல் நடக்கக் கடவதாயிருக்குமென்கை.

தோற்றுவாய்: இவ்வாறன்றி, பலங்கிடைக்கப் பலகாலும் சொல்லவேணு மென்றாலோ? என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 159 . பேற்றுக்குப் பலகாலும் வேணுமென்று நினைக்கில் உபாயம் நழுவும் .**

விரிவுரை: அதாவது, முன் சூத்திரத்தில் சொன்ன ப்ரயோஜனங்களுக்கன்றிக்கே பலங்கிடைப்பதற்குப் பலகாலும் சொல்லவேணுமென்று நினைக்கில், வேற்றுத்துணை பொறுக்காத பகவானாகிய ஸித்தோபாயம் சணற்கயிறு

கண்ட ப்ரஹ்மாஸ்திரம் போலே தன்னைக் கொண்டு நழுவுமென்கை. ஆக, த்வயத்தின் முதல் வாக்கியத்துக்கு அர்த்தம் அருளிச் செய்தாராயிற்று.

*தோற்றுவாய்: இனி, உத்தர வாக்கியத்துக்கு அர்த்தம் அருளிச் செய்வதாக ஆரம்பிக்கிறார்.*

### மூ . சூ . 160 . உத்தர வாக்யத்தாலே ப்ராப்யம் சொல்லுகிறது .

*விரிவுரை: ப்ராப்யமாவது, (ச்ரிய: பதியாய்) திருமகள் கேள்வனாய் ஸர்வஸ்வாமியாயிருக்கிற ஸர்வேச்வரன் திருவடிகளில் செய்யும் தொண்டு.*

*தோற்றுவாய்: உபாயத்தைப்பற்றிய பிறகு அடையத்தக்கபயனைச் சொல்லுகிற இதற்கு அபிப்ராயத்தை அருளிச் செய்கிறார்.*

### மூ.சூ.161. ப்ராப்யாந்தரத்துக்கு அன்றென்கை .

*விரிவுரை:* அதாவது, முதல் வாக்யத்தில் சொன்ன உபாயத்துக்கு நூதனமான செல்வத்தை வேண்டுபவனும், இழந்த செல்வத்தைப்பெற வேண்டுபவனும், கைவல்யத்தைப் பெறவேண்டுபவனும், அவ்வெம்பெருமான் திருவடிகளை அடைய வேண்டுபவனும் ஆகிய நான்குவிதமான பலன்களை அடைய விரும்புகிறவர்களுக்கும் இந்த உபாயம் பொதுவாகையாலே, உத்ரவாக்யத்தில் சொல்லுகிற பலந்தான் இன்னது என்று நிரூபிக்க வேண்டுகையாலே வேறுப் பயன்களுக்கன்று, அவன் திருவடிகளில் பண்ணும் கைங்கர்யமே இதற்குப் பலனாகும் என்பதாம்.

*தோற்றுவாய்:* மற்ற பயன்களை விட்டு பகவத்கைங்கர்யமாகிற இதொன்றையுமே வேண்டுவானென்? என்ன, விடை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 162 . உபாயாந்தரங்களை விட்டுச் சரமோபாயத்தைப் பற்றினாற்போலே, உபேயாந்தர-மான ஐச்வர்ய கைவல்யங்களைவிட்டு எல்லையான ப்ராப்யத்தை அர்த்திக்கிறது.**

*விரிவுரை:* அதாவது, உபாயத்தைப் பற்றும் போது அவனைத் தவிர்த்து வேறொன்றையும் உபாயமாகப் பற்றத்தகாத தன்னியல்பான ஸ்வரூபத்துக்குப் பொருந்த, கர்மஜ்ஞாந பக்திகளாகிய வேற்று உபாயங்களைவிட்டு முடிந்த உபாயமான ஸித்தோபாயமான அவனைப்பற்றினாற்-போலே, பயனைப்ப்ரார்த்திக்கிற சமையத்திலும் அவன் தவிர்-த்த வேறுப்பயன் நுகராத தன்னியல்பான ஸ்வரூபத்துக்குப் பொருந்த வேறுபயன்களான ஐச்வர்யகைவல்யங்களை விட்டுச் சரமமான முடிந்த சிறந்த பயனைப் பிரார்த்திக்கிறது என்கை.

*தோற்றுவாய்:* நினைவறியும் (ஈச்வரன்) ஸ்ரீமந்நாராய-ணன் பக்கல் ப்ரார்த்தனை அதிகம் என்றிருப்பார் செய்யும் வினாவை தாமே ப்ரதிவாதம் பண்ணுகிறார்.

**மூ . சூ . 163 . இவன் அர்த்திக்கவேணுமோ? ஸர்வஜ்ஞன் இவன் நினைவறியானோ? என்னில் .**

*விரிவுரை:* இவன் ப்ராத்திக்க வேணுமோ? அனைத்-தும் அறியுமவன் இவன் நினைவறியானோ? என்னில், என்று.

*தோற்றுவாய்:* அதற்கு விடை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 164 . இவன்பாசுரங்கேட்டவாறே திரு-வுள்ளம் உகக்கும் .**

*விரிவுரை:* அதாவது, நோய்வாய்ப்பட்டமையாலே சோற்றில் ஆசையற்றுக்கிடந்த சிறு குழந்தை, நோய் தீர்ந்து பசியுண்டாகி 'சோறு' என்று கேட்டவாறே பெற்ற தாய் உகக்குமாபோலே, அநாதிகாலமாக இவன் பகவானைத் தவிர்த்த வேறு பயன்களில் மனம் ஊன்றியவனாகையாகிற

நோய் கொண்டு இந்தப் பயனில் நசையற்றுக்கிடந்தவன், நோய் தீர்ந்து இதிலே சுவைபிறந்து தன் பக்கல் வந்து இத்தை விரும்பிக்கேட்டவாறே தலைவனாகிற எம்பெருமான் திருவுள்ளம் உகக்கும். அதற்காக ப்ரார்த்திக்கிறான் என்கை.

*தோற்றுவாய்:* இனி, இந்த வாக்யத்துக்குப்பதந்தோறும் பொருள் சொல்வதாகத் திருவுள்ளம் பற்றி முதல் பதத்தை ஆரம்பிக்கிறார்.

**மூ.சூ.165. ஸ்ரீமதே - பெரிய பிராட்டியாரோடே கூடியிருந்துள்ளவனுக்கு.**

*விரிவுரை:* 'ஸ்ரீமதே' என்று இதற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார். 'பெரிய பிராட்டியாரோடே கூடி இருந்துள்ளவனுக்கு' என்று இங்கும் முதல் வாக்யத்திற்போலே ஸ்ரீசப்தத்துக்குச் சொன்ன (கர்மணிவ்யுத்பத்தி, கர்த்தரி வ்யுத்பத்தி) செயப்படுபொருள், எழுவாய் என்ற இரண்டு வ்யுத்பத்திகளும், அதில் அர்த்தமும் மதுபர்த்தமான (நித்யயோகமும்) என்றுங்கூடி இருக்கையும் நினைக்க வேண்டும் என்கிறார்.

*தோற்றுவாய்:* முதல் வாக்கியத்திலும் இரண்டாம் வாக்கியத்திலும் (நித்யயோகம்) எப்போதும் கூடி இருக்கை ஒத்திருக்கச்செய்தே அந்தந்த நிலைகளுக்குப் பொருந்த இவளிருக்கும் இருப்பை அருளிச்செய்கிறார்.

**மூ.சூ.166. அவன் உபாயமாமிடத்தில் தான் புருஷகாரமாயிருக்கும்; அவன் ப்ராப்யனாமிடத்தில் தான் ப்ராப்யையுமாய்க் கைங்கர்ய வர்த்தகையுமாயிருக்கும்.**

*விரிவுரை:* அதாவது, எம்பெருமான் சேதநர்க்கு விரோதமானவற்றைத் தவிர்க்கையும் இஷ்டமானவற்றைக் கொடுக்கையுமாகிற உபாயமாமிடத்தில், வேறொரு துணைக் கூட்டாகிற சேர்த்தியை பொறுக்காமையாலே, பிராட்டியாகிய தான் உபாயத்வத்தில் தொடர்பு கொள்ளாமல், குற்றங்களோடு கூடிய சேதநரைப் பார்த்து அவன் சீறுமள-

வில் அத்தைப் பொறுத்து கைக்கொள்ளும்படியாகச் செய்யும் புருஷகாரமாயிருக்கும்.

அவன் சேதநர்கள் செய்யும் தொண்டினை ஏற்கும் பயனாமிடத்தில், அவனைப்போல தொண்டினை ஏற்பவளாய்க் கொண்டு பயனுமாய், இவர்கள் செய்யும் தொண்டினை அவன் திருவுள்ளத்திலே ஒன்று பத்தாகப்படுத்தி அவனை உகப்பிக்கையாலே கைங்கர்யத்தை வளர்ப்பவளாயிரு க்கும் என்றபடி.

இது தன்னைப் பரந்தபடியிலே த்வயத்தில் முதல் வாக்யத்தில், "ஸ்ரீமத் சப்தம் சேதநருடைய அபராதத்தையும், ஈச்வரனுடைய ஸ்வாதந்த்ர்யத்தையுங்கண்டு, 'இவர்கள் அவனுடைய கோபத்துக்கு உரியராய் நசித்துப்போகாதே அவனைக்கிட்டி உஜ்ஜீவித்துப் போக வேணும்'. என்று குற்றங்களோடு கூடிய சேதநரை ஈச்வரனோடே சேர்க்கைக்காக என்றும் ஒக்க விடாதே இருக்கும் இருப்பைச் சொல்லுகிறது; (உத்தர) பின் வாக்கியமாகிய ஸ்ரீமச்சப்தம் கைங்கர்யத்தை ஏற்பதைப்பற்றவும், இவர்கள் செய்யும் கைங்கர்யத்தை ஈச்வரன் திருவுள்ளத்திலே ஒன்று பத்தாகப் படுத்துகைக்காகவும் அநுபவத்தில் இடையூறு வாராமைக்காகவும் (அநுபவவிச்சேதத்தில்) பகவதநுபவம் குறைவதினால் தான் இல்லை என்னலாம்படி தரியா மையாலே இடைவிடாமற் சேர்ந்து அவனை நொடியும் பிரியாதே எல்லாக் காலங்களிலும் கூடியிருக்கும் இரும்பைச் சொல்லுகிறது." என்று விரிவாக அருளிச் செய்தார்.

தோற்றுவாய்: திருமந்த்ரத்தில் உத்தரபதத்துக்கு இந்த உத்தரவாக்யம் விவரணமாயிருக்கிறபடியை அருளிச் செய்கிறார்.

## மூ. சூ. 167. இதிலே திருமந்த்ரத்தில் சொன்ன ப்ராப்யத்தை விசதமாக அநுஸந்திக்கிறது.

விரிவுரை: அதாவது, கைங்கர்யத்தை ஏற்பது (ஒரு மிதுநம்) ஓர் இருவர் என்பதைச் சப்தத்தாலேயே சொல்லுகிற இந்த வாக்யத்திலே, திருமந்த்ரத்திலே 'நாராயணாய' என்று

கைங்கர்யத்தை ஏற்பது ஒரு திவ்ய தம்பதிகள் என்னுமிடம் அர்த்தபலத்தாலே சொல்லுகையாலே, சுருங்கச் சொன்ன பயனைவிரியச் சொல்லுகிற தென்கை. அங்கு 'நாராயண-னுக்கே அடிமை செய்யப் பெறுவேனாகவேணும்' என்கிற இவ்வளவொழிய 'அடிமை கொள்ளுமவன் ஸ்ரீமானாக-வேணும்' என்றும் 'அடிமை செய்பவன் மமகாரம் அற்றவனாக வேணும்' என்றும் சொல்லாமையாலும் அவை இரண்டும் இங்குச் சொல்லுகையாலன்றோ அந்தப் பதத்துக்கு இந்த வாக்யம் விவரணமாயிற்று என்பதாகும்.

தோற்றுவாய்: இந்தத் திவ்ய தம்பதிகளுக்கே அடிமை செய்யவேணும் என்கிற நிர்பந்தம் தான் என்? என்ன, அருளிச் செய்கிறார்.

## மூ. சூ. 168. இளைய பெருமாளைப்போலே இரு-வருமான சேர்த்தியிலே அடிமைசெய்கைமுறை.

விரிவுரை: அதாவது, "பவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா கிரிஸாநுஷு ரம்ஸ்யதே, அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரதஸ் ஸ்வபதச்சதே" பவாம்ஸ்து- தேவரீர், வைதேஹ்யா -பிராட்டியோடுகூட, கிரிஸாநுஷு-பர்வதத்தின் தாழ்வரைக-ளிலே, ரம்ஸ்யதே - விளையாடப்- போகிறீர், அஹம் - நான், ஜாக்ரத:- விழித்துக் கொண்டும், ஸ்வபதச்ச - நித்திரை செய்து கொண்டுமிருக்கிற, தே-தேவரீருக்கு, ஸர்வம் கரிஷ்யாமி-அனைத்துத் தொண்டுகளும் செய்வேன். என்கிறபடியே எல்லாதேசங்களிலும், எல்லாக்காலங்களிலும், எல்லா நிலைகளிலும் பெரிய பிராட்டியாரும் ஸ்ரீமானுமான மிதுநத்துக்கு அடிமை செய்கையே சேஷபூதனுக்கு ப்ரயோஜனமென்பது. இப்படி, பெருமாளும் பிராட்டியு-மானச் சேர்த்தியிலே அடிமை செய்த இளையபெரு-மாளைப்போலே இருவருமானச் சேர்த்தியிலே அடிமை செய்கை இவ்வாத்மாவுக்கு இயல்பு. திவ்யதம்பதிகளான இருவருக்கும் அடிமை செய்வது (மிதுந சேஷத்வம்) இயல்பானால், மிதுநகைங்கர்ய மன்றோ (ஸ்வரூபாநு ரூபமான) இயல்புக்குச் சேர்ந்த ப்ரயோஜனமென்கை. ஸ்வரூபம் - ஆத்மாவின் இயல்பு.

தோற்றுவாய்: இன்னமும் அச்சேர்த்தியிலே அடிமை செய்யுமளவில் உள்ள வித்யாசமான தன்மையை அருளிச் செய்கிறார்.

### மூ . சூ . 169 . அடிமைதான் ஸித்திப்பதும் ரஸிப்ப -தும் அச்சேர்த்தியிலே .

விரிவுரை: அதாவது, ஸ்வதந்த்ரனான ஈச்வரன் அநாத- ரிக்காமல் கைங்கர்யங் கொண்டருளும்படி செய்பவள் இவளாகையாலே "ஸீதாமுவாச" (ஸீதையிடம் விண்ணப்பி- த்தான்) என்கிறபடியே பிராட்டியைப் புருஷகாரமாகக் கொண்டு, "ஸீதாஸமக்ஷம் காகுத்ஸ்தமிதம் வசநம் அப்ரவீத்" (ஸீதாபிராட்டியின் முன்னிலையாகத் தம்முடைய இயல்புக்கு ஏற்ற தொண்டை வேண்டிப் பெற்ற) இளைபெருமாளைப்- போலே, இவன் (சேதநன்) ப்ரார்த்திக்கிற தொண்டுதான் ஸித்திப்பதும் (தனக்கு உண்டாவதும்) மாதா பிதாக்கள் இருவரும்மானச் சேர்த்தியிலே தொண்டு செய்யும் புத்திர- னைப்போலே, செய்கிற தொண்டுதான் ரஸிப்பதும் பிராட்- டியும் அவனுமானச் சேர்த்தியிலே என்பது.

தோற்றுவாய்: இனி, இரண்டாம் பதமான 'நாராய- ணாய', என்ற பதத்தை விவரிக்கிறார், 'ஸர்வ சேஷியாயுள்ள- வனுக்கு' என்று அதற்குப்பொருள் சொல்லுகிறார்.

### மூ . சூ . 170 . நாராயணாய - ஸர்வ சேஷியா- யுள்ளவனுக்கு .

விரிவுரை: நாராயணத்வம் என்பது, அதாவது - நாராயணன் என்பவன் இரண்டு விதமான உலகத்திற்கும் நாதன் ஆகையாலே, 'ஸர்வசேஷியாயுள்ளவனுக்கு' தான் தவிர்ந்த எல்லாப்பொருள்களுக்கும் எஜமானனாயுள்ளவனு- க்கு என்கிறார். தொண்டை ஏற்றுக்கொள்ளுபவன் எஜமா- னனாகையாலே.

தோற்றுவாய்: கைங்கர்யந்தான் - பகவானுக்குச் செய்யும் தொண்டுதான் பகவானை அநுபவிப்பதால் பிறந்த

உகப்பின் கார்யமாகையாலும், அந்த உகப்புதான் அநுபவிக்கிற பகவத்விஷயத்திலாகையாலும் நாம் அநுபவிக்கிற விஷயத்தை இன்னது என்று சொல்லவேண்டுகையாலே அருளிச்செய்கிறார்.

## மூ . சூ . 171 . இதிலே திருமேனியையும் குணங்களை யும் சொல்லும் .

விரிவுரை: அதாவது, தொண்டன் செய்யும் தொண்டினை ஏற்கும் பொருளைச் சொல்லுகிற இப்பதத்திலே, கைங்கர்யத்துக்கு முன்னோடியாயிருக்கிற அநுபவத்துக்கு இலக்கான பகவானுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தையும் கல்யாண குணங்களையும் சொல்லும் என்கை. "**ஸதாபச்யந்திசூரய:** (நித்யசூரிகள் எம்பெருமானின் திவ்யமங்கள விக்ரஹத்தை நிரந்தரமாக ஸேவிக்கிறார்கள்.) என்றும், "**ஸோஅச்நுதே ஸர்வான் காமான்**" (உபாசகன் எம்பெருமானுடைய அனைத்துக்கல்யாண குணங்களையும் அநுபவித்துகொண்டிருக்கிறான்) என்றும், "**ரஸம்ஹ்யேவாயம் லப்த்வா-ஆநந்தீபவதி**" (அந்தப் புருஷன் அனைத்துச் சுவைகளாலும் நிரம்பிய பெருமானை அடைந்து ஆநந்திக்கிறான்.) என்றாற்போல் அவனுடைய ஸ்வரூபம் எப்படி அநுபவத்துக்கு இலக்கோ? அதேபோன்றே அவனுடைய திவ்யமங்கள விக்ரஹமும் கல்யாண குணங்களும் அநுபவத்துக்குரியதாய், தொண்டினை மேன்மேலென வளர்ப்பிப்பதாய், இனிமைமிகுந்துமன்றோ இருப்பது. குணங்களென்று பொதுவாகச் சொல்லுகையாலே ஜ்ஞாந சக்தியாதி குணங்களோடு, வாத்ஸல்யாதி குணங்களோடு, சௌர்யாதி குணங்களோடு வாசியற எல்லாக் குணங்களும் அநுபவிக்கப்பெறுவதாயிருக்கையாலே, முதல் வாக்யத்தில் நாராயண பதத்தில் உபாயமாக வரிப்பதற்கு உபயோகமாகச் சொல்லப்பெற்ற குணங்களும் இப்பதத்தில் பயனாக நினைக்கத்தக்கவை, ஆதாரமான ஸ்வரூபத்துக்கு உபாயம், உபேயம் என்ற இரண்டு நிலைகளுண்டாயிருக்கிறாற்போன்றே ஆதேயமான குணங்களுக்கும் உபாயம், உபேயம் என்ற இவ்விரண்டு நிலைகளும்

உண்டாயன்றோ இருப்பது. இவை எல்லாம் பரந்தபடியிலே அருளிச்செய்தார் என்கிறார் மாணவாள மாமுநிகள்.

தோற்றுவாய்: இனி, இப்பதத்துக்கு நோக்கு இன்னதிலே என்கிறார்.

## மூ. சூ. 172. சேஷித்வத்திலே நோக்கு.

விரிவுரை: அனுபவித்தற்கு ஏற்றலாதலென்பது பகவானுடைய எல்லாகுணங்களையும் நாராயணபதம் சொல்லியிருந்தாலும் சதுர்த்தியம்ஸத்தில் 'ஆய' என்கிற நான்காம் வேற்றுமையில் சொல்லுகிற கைங்கர்ய விசேஷத்துக்கு (சிறப்புக்கு) மிகவும் உரியதாயிருப்பது சேஷித்வ (எஜமானத்வ) மாகையாலே, இப்பதத்துக்கு அதிலே நோக்கு என்கை என்கிறார்.

தோற்றுவாய்: இந்த சேஷித்வம் சொல்லுகைக்கு ப்ரயோஜநம் அருளிச்செய்கிறார்.

## மூ. சூ. 173. ப்ராப்தவிஷயத்தில் கைங்கர்யமிறே ரஸிப்பது.

விரிவுரை: அதாவது, "ஸர்வம் பரவசம் து:க்கம்" (பிறன் வசத்து இருப்பது அனைத்தும் துன்பமே) என்றும், "ஸேவா ச்வவ்ருத்தி" (அடிமை நாய்த்தொழில்) என்றும் சொல்லுகிற படியே சாஸ்திரங்கள் தகாதென்ற விஷயத்தில் தொண்டாற்றுகைப் போலன்றிக்கே "சாயாவா ஸத்வ மநுகச்சேத்"( பரன் திறத்தில் நிழல்போல் தொடரக்கடவன்.) என்றும், "ஸாகிமர்த்தம் நஸேவ்யதே" (பரனுக்குத் தொண்டாற்றுகை சிறந்த தாயிருக்க ஏன்? செய்யப்படவில்லை) என்றும், சொல்லுகிற படியே சாஸ்திரங்கள் விதித்த தகுந்த விஷயத்தில் தொண்டாற்றுகையன்றோ இவனுக்குச் சுவைப்பது என்கை.

தோற்றுவாய்: இனி இப்பதத்தில் வேற்றுமை உருபுக்குப்பொருள் சொல்லுகிறார்.

**மூ . சூ . 174 . இந்தச் சதுர்த்தி கைங்கர்யத்தை ப்ரகாசிப்பிக்கிறது.**

*விரிவுரை:* அதாவது, சேஷத்வஜ்ஞாந கார்யமான உபா-யத்தைக்கைக் கொண்டதின் பிறகு வந்ததாகையாலே, இந்த நான்காம் வேற்றுமை 'அதற்காக' என்ற முறைப் பொருளு-ணர்த்துகையன்றிக்கே, இந்த சதுர்த்தி, கைபற்றிய உபாயத்தினுடைய பலமான கைங்கர்யத்தைப் பிரகாசிப்-பிக்கிறதென்கை. கைங்கர்யத்தை ப்ரகாசிப்பிக்கையாவது - கைங்கர்ய ப்ரார்த்தனையைச் சொல்லுகை. கைங்கர்யமாவது:- பகவாந் முகமலர்த்திக்குறுப்பான தொண்டாற்றுகை. இந்தக் கைங்கர்யந்தான் **"ஏதத் ஸாம காயந்நாஸ்தே"** (முக்தன் இந்த ஸாமத்தைப் பாடிக் கொண்டிருக்கிறான்.) என்றும், **"நம இத்யேவ வாதிந:"** (நம: என்ற இத்தைச் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்.) **"யேந யேந தாதாகச்சதி தேந தேந ஸஹ கச்சதி"** (எந்தெந்த வழியில் ப்ரபு செல்கிறானோ அந்தந்த வழியில் இவனும் செல்கிறான்.) என்றும் இவை முதலானவைகளில் சொல்லுகிறபடியே தொண்டு வாசிக காயிகரூபமாயிருக்கும் என்றபடி.

**தோற்றுவாய்:** இந்தக் கைங்கர்யம் ப்ரார்த்திக்கப்-பெறுமதாகில் எப்போதாவது ஒரு ஸமயத்திலாகாதோ வென்-னில்? அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 175 . கைங்கர்யந்தான் நித்யம் .**

**விரிவுரை:** அதாவது, (சேஷத்வமே) அடிமையே ஆத்-மாவுக்கு இன்றியமையாத லக்ஷண மாகையாலும், **"அகிஞ்சித்கரஸ்ய சேஷத்வாநுபபத்தி"**: (அடிமையை மேற்-கொண்டொழுகாத போது ஆத்மாவுக்கு சேஷத்வம் என்ற லக்ஷணம் பொருந்தாது.) என்கிறபடியே தொண்டு செய்யாத-போது அடிமைத் தன்மைப் பொருந்தாமையால் ஆத்மாவுக்குக் கைங்கர்யம் நித்யமென்கை. ஆகையாலன்றோ **"நித்யகிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி"**( நித்திய கிங்கரனாகவே இருந்து உன்னை களிப்புறச் செய்வது என்றோ.) என்றும், **"நித்ய கிங்கரோபவாநி"** (எப்போதும் கைங்கர்யம்பண்ணுபவனா-

கவே ஆகக்கடவன்) என்றும் நம் ஆசார்யர்கள் அருளிச் செய்தது.

தோற்றுவாய்: நித்தியமாயிருக்குமாகில் ப்ரார்த்திக்க வேணுமோ? என்ன, அருளிச் செய்கிறார்.

### மூ . சூ . 176 . நித்யமாக ப்ரார்த்தித்தே பெற-வேணும் .

விரிவுரை: அதாவது, கைங்கர்யத்தை ஏற்குமவன் பரம்-பரனாகையாலும், தொண்டுசெய்யும் சேதநன் அத்யந்த பரதந்த்ரனாகையாலும், ப்ரார்த்தநா விசேஷம் இல்லாத-போது கைங்கர்யம் ஸித்தியாமையாலும், நித்யமாக ப்ரார்த்தித்தே பெற வேணும் என்கிறது.

தோற்றுவாய்: நித்தியமும் ப்ரார்த்தனைக்கு உரித்தா-கைக்கு நிதாநம் அருளிச்செய்கிறார்.

### மு . சூ . 177. சேஷிக்கு அதிசயத்தை விளைக்கை சேஷபூதனுக்கு ஸ்வரூபலாபமும், ப்ராப்யமும் .

விரிவுரை: அதாவது, "நாகிஞ்சித்குர்வதச் சேஷத்வம்" என்கிறபடியே தொண்டாற்றி சேஷிக்கு ஸந்தோஷத்தை விளைவிக்காத வஸ்துவுக்கு சேஷத்வம் இல்லாமையாலே, சேஷியான ஈச்வரனுக்குத் தன்னுடைய அடிமைச் செயலாலே ப்ரீதியை விளைவிக்கை அடியவனுக்குத் தன் ஸ்வரூபலாப-மாய், அவனுடைய முகமலர்த்திக் குறுப்பாயிருக்கையாலே பயனுமாயிருக்குமென்கை. ஆகையாலே, நித்யமும் ப்ராத்த-னைக்குரித்தாயிருக்குமது பகவத் கைங்கர்யம் எனப்படுவது இவ்விடத்தில் கருத்தாயிருக்கும். சேஷி-எஜமானனான எம்பெருமான். சேஷபூதன் - அடிமையாகிற நாம். (ஆத்மா-க்கள்).

தோற்றுவாய்: பிறகு கடைசி பதத்தை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 178. நம: கைங்கர்யத்தில் களை-யறுக்கிறது.**

*விரிவுரை:* 'நம:' என்கிற இதற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார். 'கைங்கர்யத்தில் களையறுக்கிறது' என்று. அதாவது, நமச்சப்தம் பொதுவாக அஹங்கார மமகாரங்களைக் கழிக்கையாலே, திருமந்த்ரத்தில் மத்யம பதமான நமச் சப்தம் போலே ஸ்வரூப உபாயபுருஷார்த்த விரோதிகள் மூன்றையுங் கழிக்கவற்றாயிருந்ததேயாகிலும், இங்கு அங்ஙனன்றிக்கே, இந்த நமப்பதம் கைங்கர்ய ப்ரார்த்தனைக்குப் பிறகு சொல்வதாகையாலே, இந்தக்கைங்கர்யத்தில் விரோதியைக் கழிக்கிறது என்கை.

*தோற்றுவாய்:* கைங்கர்யத்துக்குக்களை எது? என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 179. களையாவது - தனக்கென்னப்பண்ணுவது.**

*விரிவுரை:* தனக்கென்னப்பண்ணுகையாவது, "போக்தாஹம் மம போகோயம்" (நான் புஜிக்கிறவன், இது எனக்கு புஜிக்கப்படுவது.) என்கிறபடியே இத்தைத் தன்னுடைய ஸந்தோஷத்துக்கு உறுப்பாக நினைத்துப் பண்ணுகை: கைங்கர்யம் பகவாந் (முகமலர்த்திக்கு) சந்தோஷத்திற்கு ஏதுவாகையாலே 'இது நமக்கு விரும்பத்தக்கது என்கிற நினைவு ஒழிய, இது 'என்னுடைய போகத்துக்குரியது' என்றும், 'இது என்னுடையது' என்ற புத்தியும் நடக்குமாகில் பயனற்றதாயன்றோ இருப்பது இந்த கைங்கர்யம். இப்படி, எனக்கென்றும் என்னுடைய தென்றும் வருகிற நினைவை அடியோடு களைகிறது, இந்த நமப்பதம் என்கை.

*தோற்றுவாய்:* இன்னமும் இந்தக் கைங்கர்யத்தைப் பெறுகைக்கு விரோதிகளானவையும் இதிலே கழியுண்ணுமென்கிறார்.

**மூ. சூ. 180. இதிலே அவித்யாதிகளும் கழியுண்ணும்.**

*விரிவுரை:* அதாவது, அஹங்கார மமகார நிவ்ருத்தியை ப்ரார்த்திக்கிற இந்த நமஸ்ஸிலே, "**அநாத்மந்யாத்ம புத்திர்யா அஸ்வே ஸ்வமிதி யாமதி:, அவித்யா தருஸம் பூதிபீஜமேதத் த்விதா ஸ்திதம்**" **அநாத்மநி** - ஆத்மாவல்லாத தேகத்தில், **ஆத்மபுத்தி:**- ஆத்மா என்கிற புத்தியானது, **யாமதி** - தொன்றுண்டோ, **அவித்யாதரு** - அஜ்ஞாநமாகிய மரம், **ஸம்பூதி** - உண்டாவதற்கு, **பீஜம்** - காரணமானது, **ஏதத்த்விதாஸ்திதம்** - இப்படி (அஹங்கார மமகாரமென்கிற) இரண்டாக இருக்கிறது. என்கிறபடியே ஆத்மாவல்லாத உடலை ஆத்மாவாக புத்திபண்ணுவதையே வடிவாக உடைத்தாய்க்கர்ம உற்பத்தி காரணமாயிருந்துள்ள அறிவின்மையும், அதன் கார்யமான கர்மங்களும், அதன் கார்யமாய் வரும் உடல் தொடர்பும் எல்லாம் கழியுண்ணும் என்கிறது.

ஆகையாலே தான் த்வய விவரணமான கத்யத்திலே எம்பெருமானார் **நமச்சப்தார்த்தத்தைச்** சொல்லியருளுகிற அளவில் "மநோ **வாக்காயை:**" என்ற சூர்ணையாலே முக்கரணங்களாலும் செய்யக் கூடாததைச் செய்கை, செய்யக் கூடியதைச் செய்யாமை முதலான அனைத்துக்கர்மங்களும் கழிகையும், "**அநாதிகாலப்ரவ்ருத்த**" முதலான சூர்ணையாலே அறிவின்மை அழிகையும், "**மதீயாநாதி**" என்ற சூர்ணையாலே, உடல் தொடர்புகழிவும் ப்ராத்தித்தருளினார்.

*தோற்றுவாய்:* ஆனாலும், இதற்கு முதன்மையான பொருள் கைங்கர்யத்தில் தன்னலங்கழிகையே. அத்தைச் சொல்லி அருளுகிறார் மேல். அதில் முதலில் பகவத்கைங்கர்யம் பண்ணும்போது தான் எப்படியாக வேணும்? என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ. சூ. 181. "உனக்கே நாமாட்செய்வோம்" என்னும் படியே ஆகவேணும்.**

விரிவுரை: அதாவது, கைங்கர்யம் செய்யுமளவில் "உனக்கே நாமாட்செய்வோம்" என்று 'உனக்கும் எங்களுக்கு-மாயிருக்கும் இருப்புத் தவிர்ந்து, உனக்கே உகப்பாக நாங்கள் அடிமை செய்யவேணும்' என்கிறபடியே ஆண்டானுக்கே உகப்பாக அடிமைத் தொழில் செய்ய வேணுமென்கை. "தனக்கேயாக எனைக் கொள்ளுமீதே" என்றன்றோ ஆழ்வா-ரும் அருளிச் செய்தது.

தோற்றுவாய்: இனி, இந்தக் கைங்கர்யத்துக்குத் தடைகளை அருள்கிறார்.

## மூ. சூ. 182. ஸௌந்தர்யமும்அந்தராயம்; கீழ்ச் சொன்ன கைங்கர்யமும் அப்படியே.

விரிவுரை: அதாவது - அவன் திருமேனி அழகும் மனத்-தைக் கொள்ளை கொள்வதாய்க் கொண்டு கைசோரப் பண்-ணுகையாலே, கைங்கர்யத்துக்குத் தடை; இந்த நமஸ்ஸு-க்குக்கீழே 'ஆய' பதமான சதுர்த்தியிற் சொன்ன கைங்கர்யமும், கணவன் மனைவி என்ற இருவரும் ஒருவர்க்கொருவர் செய்து கொள்ளும்பரிமாற்றம் போலே சுயநலத்துக்குறுப்பாகையாலே, 'எம்பெருமான் முகமலர்த்-தியே நமக்கு பயன்' என்ற உண்மையான நிலைக்குமாறாக சுயநலம் கலந்த அநுபவம் வருவதால் அந்த கைங்கர்யத்துக்கு பெருமானுடைய திருமேனி அழகு தடையாகும் என்கை.

தோற்றுவாய்: இப்படியாகையால், இந்த விரோதி கழிகைக்குச் செய்யும் ப்ரார்த்தனையும் இடைவிடாமல் நடக்கும் படியை அருளிச் செய்கிறார்.

## மூ. சூ. 183. கைங்கர்ய ப்ரார்த்தனைபோலே, இப்பதத்தில் ப்ரார்த்தனையும் என்றுமுண்டு.

விரிவுரை: அதாவது, நாராயணபதத்திலிருக்கும் 'ஆய' என்ற நான்காம் வேற்றுமையில் சொல்லுகிற கைங்கர்ய ப்ராத்தனை எப்போதோ ஒருக்காலுண்டாவது என்பதில்லா-மல் நித்தியமாய்ச் செல்லுமாபோலே, இந்த நமப்பதத்திற் சொல்லுகிற கைங்கர்ய விரோதி கழிகைக்குச் செய்யும்

*ப்ரார்த்தனையும், இங்கிருக்கும் காலத்தோடு பரமபதத்தில் புகுகிற காலத்தோடு வாசியற எல்லாக்காலத்திலும் இந்த ப்ராத்தனை நடக்கக் கடவதாயிருக்குமென்கை.*

*தோற்றுவாய்: அஹங்கார மமகாரத்துக்கு விளைநிலமான இந்த உடல்தொடர்பற்று பரமபதம் சென்ற பின்பும், அங்கேயும் தன் அநுபவத்திற்காக பகவதநுபவம் பண்ணுகை என்ற சுயநலபுத்தி உண்டாமோ? என்ன, அருளிச்செய்கிறார்.*

**மூ. சூ. 184. "மருந்தே நங்கள் போகமகிழ்ச்சிக்கு" என்னாநின்றதிறே.**

*த்வய ப்ரகரணம் முற்றிற்று.*
*பிள்ளைலோகாசாரியர் திருவடிகளே சரணம்.*

*விரிவுரை:* அதாவது, 'உன்னுடைய அநுபவத்தாலே எங்களுக்கு வரும் ஆனந்தத்துக்கு சுய அநுபவமாகிற புத்தி விளையாமல், எங்கள் (பரதந்திரஸ்வரூபத்தை) உனக்காகவே நாங்கள் இருக்கும் நிலையை அழியாத படி தணிவிக்கும் மருந்தானவனே' என்று நித்யஸூரிகள் பேசும் பாசுரமாகச் சொல்லா நின்றதல்லவா! ஆகையால், பகவானுடைய திருமேனி அழகாலும் அவனுக்குச் செய்யும் கைங்கர்யத்தாலும் விளையும் சிறந்த ஆனந்தம், அதைத்தன்னாநந்தத்திற்காக என்று நினைக்கிற சுயநலமாகிற புத்தி அங்கும் உண்டாவதாலே, இப்பதத்தில் ப்ரார்த்தனை என்றும் உண்டென்பது நிச்சயமாயிற்று. ஆகையன்றோ முக்தர்க்கு லக்ஷணம் சொல்லுகிற விடத்திலே **"நமஇத்யேவ வாதிந:"**(நம:- நாங்கள் உனக்குரியவர்கள், எங்களுக்குரியவர்களன்று ஆகையால், நாங்கள் செய்யும் தொண்டு உனக்குரியதே எங்களுக்கல்ல) என்று பரமபதத்திலுள்ளவர்கள் கூறினார்களன்றோ என்றது. ஆக, (புருஷகாரத்தையும்) சேர்த்து வைத்தலையும், அந்தப் புருஷகாரம் செய்யும் பிராட்டியும் பெருமானும் என்றும் பிரியாது சேர்ந்திருக்கையும், பெருமான், சேதநன் அபராதங்கண்டு சீற்றம் கொள்ளும்போது பிராட்டியால் கிளப்பிவிடப்பட்ட வாத்ஸல்யம் முதலான குணங்களையும், அந்தக் குணங்களுக்கு விளக்கமான

திருமேனியையும், குணங்களோடும், திருமேனியோடும் கூடி இருக்கிற எம்பெருமானுடைய உபாயத்தையும், அவ்வுபாயத்தை வரிப்பதையும், அதன் பலமான கைங்கர்யத்தை ஏற்பது ஒரு திவ்ய தம்பதிகள் என்னுமிடமும், அவ்வஸ்துவினுடைய ஸர்வ சேஷித்வத்தையும், அவ்விஷயத்தில் செய்யும் கைங்கர்யத்தையும் கைங்கர்ய விரோதி கழிகையையும் சொல்லிற்றாயிற்று. என்று, த்வயப்ரகரணத்தை முற்றுவிக்கிறார் ஸ்ரீமந்மணவாள மாமுநிகள்.

த்வய ப்ரகரண வ்யாக்யாநத்தின்தெளிவுரை முற்றிற்று.
பெரிய ஜீயர் திருவடிகளே சரணம்.

## வ்யாக்யாந அவதாரிகையின் தெளிவுரை

மத்திய ரஹஸ்யமான த்வயத்தினுடைய அர்த்தத்தை அருளிச் செய்த பிறகு அதில், த்வயத்தின் முதல் வாக்கியத்தில் சொல்லுகிற உபாயத்தை ஸர்வேச்வரன் தானே விதிக்கை-யாலே, இந்த உபாயம் கண்ணனெம்பெருமானுக்கு மிகவும் இஷ்டமென்னுமத்தையும், உபாயத்தை கைக்கொள்ளுவதற்கு முன்னோடியாம் செயலான மற்றைச் சாதன த்யாகத்தையும், உபாயமாக வரித்த செயலே உபாயமென்ற புத்தியையும் விட்டு உபாயமாக வரிக்கப்பெற்ற எம்பெருமானே உபாய மென்பதையும், இவ்வர்த்தங்களை நேரே காட்டும் சப்தத்தால் முதல் வாக்யம் சொல்லுகை- யாலும். த்வயத்தின் உத்தரவாக்கியத்தில் (பிற்பாதி வாக்கியத்ததாலே) சொல்லுகிற கைங்கர்யத்துக்குமுன் நிகழக் கூடியதான அடைதற்குத் தடையான அனைத்துப்பாபங்க- ளின் விடுதலையையும் 'அஹம்த்வா' என்ற பின்வாக்கியத்தாலே நேரே சப்தமாகச் சொல்லுகையாலும், த்வயத்துக்கு விவரணமாய் ஐந்தாம் வேதமான ஸ்ரீமஹாபாரத ஸாரமான கீதோபநிஷத்தின் தாத்பர்யமாய், முடிவான ரஹஸ்ய மாயிருந்துள்ள சரமச்லோகத்தினுடைய அர்த்தத்தை ஐயந்திரிபுகளின்றி அருளிச் செய்கிறார். இதில், அர்த்தங்-கேட்கைக்காகவன்றோ எம்பெருமானார் 18 தடவை திருக்கோட்டியூர் நம்பிபக்கல் எழுந்தருளியது.

நம்பி தாமும் இதில், அர்த்தத்தினுடைய பெருமை-யையும் இதை மேற்கொண்டோழுகுமவர்கள் இல்லாமையை-யும் பார்த்துத்தான் இவருடைய நம்பிக்கையையும் விருப்பத்தையும் பரீக்ஷிப்பதற்காகப் பல்கால் நடந்து துவளச் செய்து ப்ரதிஜ்ஞை கொண்டு ஒரு மாஸம் உபவாஸம் இருக்கச் செய்து அருமைப்படுத்தி அருளிச் செய்தது. ஶுத்தஸத்வ நிஷ்டனாய், பரமாத்ம விஷயத்தில் அபார ப்ரேமையுடைய-னாய், இதற்குப்புறம்பான மற்றவற்றில் மிக்க வெறுப்புடைய-வனாய், ப்ரமாணங்களை மீறாது அதற்கு உடன்பட்டவனாய்,

பகவத் வைபவம் கேள்வியுற்றால் பொருந்து மென்று விசாலமானஹ்ருதயமும் மிக்க நம்பிக்கையுடையனாய், சாஸ்த்ர நம்பிக்கையுடையவர்களில் தலைவனாய் ஒருவன் உண்டானால் அவன் இந்தச்லோகா- ர்த்தம் கேட்டு அதன்படி அநுஷ்டிக்கத்தக்க அதிகாரியாவான். ஆகையாலே, அப்படிப்பட்ட அதிகாரி கிடைமையாலும் அர்த்தத்தின் சீர்மையாலும் இத்தை வெளியிடாதே மறைத்துக் கொண்டு வந்தார்கள் எம்பெருமானாருக்கு முன்புள்ளார். ஸம்ஸாரிகள் துர்க்கதிகண்டு பொறுக்கமாட்டாதபடி கருணை கரைபுரண்டிருக்கையாலே, அர்த்தத்தின் கௌரவம் பாராதே பிறப்பு மரணம் போன்ற துன்பத்தில் சிக்கித் தவிக்கும் மக்களுடைய இழவை நினைத்து எம்பெருமானார் தகுதியுடைய அதிகாரிகளுக்கு உபதேசமூலமாக வெளியிட்ட-ருளினார் என்கிறார். அப்படி உபதேசித்து விடுவதல்லாமல், இந்த அர்த்தமாகிற பொருளை எல்லாருமறிந்து உய்வு பெற வேணுமென்ற மேலான கருணையாலே, இதன் அர்த்தத்தை பல நூல்களிலும் சுருக்கமாகவும், விரிவாகவும் (இவர்) பிள்ளைலோகாசாரியர் அருளிச் செய்தது. மற்றுள்ள ப்ரபந்தங்கள் எல்லாவற்றிலும் போலன்றிக்கே பெண்களும் பாலர்களும் கற்றுணரலாம்படி தெளிய அருளிச் செய்தது இந்த ப்ரபந்தமாகும் என்கிறார் மணவாள மாமுநிகள். அநுஷ்டாநம் - ஒழுக்கம்.

அவதாரிகையின் தெளிவுரை முற்றிற்று

இதில், முதலிலே இந்த ச்லோகார்த்தத்தினுடைய பெருமையை எல்லாருடைய மனத்திலும் படுத்துகைக்காக இதுதனக்குச்சரம ச்லோகமென்று திருநாமமாகைக்குக் காரணத்தை அருளிச்செய்கிறார்.

**மூ . சூ . 185 . கீழே சில உபாயவிசேஷங்களை உபதேசிக்க, அவை துச்சகங்களென்றும், ஸ்வரூப விரோதிகளென்றும் நினைத்து சோகாவிஷ்டனான அர்ஜுநனைக்குறித்து, அவனுடைய சோக நிவ்ருத்த்யர் -த்தமாக 'இனி இதுக்கு அவ்வருகில்லை' என்னும்**

**-படியான சரமோபாயத்தை அருளிச் செய்கையாலே, சரமச்லோகமென்று இதுக்குப் பேராயிருக்கிறது.**

*விரிவுரை:* அதாவது, இந்த ச்லோகத்துக்குக் கீழேசில உபாய விசேஷங்களை அநேகாத்யாயங்களிலே கர்மஜ்ஞாநாதிகளைத் தன்னை அடைதற்குரிய மோக்ஷஸாதநமாக விரிவாக உபதேசிக்கக் கேட்டு, உடலை வருத்தி ஒடுக்கிச் செய்கை முதலானவையும், இந்திரிய ஜயம் அரிதாகையாலும், குறிக்கொண்டு நீண்டகாலம் ஒழுக்கம் மேற்கொண்டு ஸாதிக்க வேண்டியிருக்கையாலும், அவைகளை கடைப்பிடித்து ஒழுக இயலாதென்றும், பகவானுக்குச் சரீரமாயிருக்கிற ஆத்மாவின் பரதந்த்ரமான ஸ்வரூபத்துக்குத் தன் முயற்சியாலே முயல்வது இவை விரோதிகளென்றும் புத்திபண்ணி, 'இவற்றாலே எம்பெருமானைப் பெறுவது என்பது ஒன்றில்லை; இனி இழந்தேபோனோம்' என்கிற சோகத்தாலே கவரப்பெற்றவனான அர்ஜுநனைக்குறித்து, அவனுடைய அந்த சோகம் போகைக்காக, எளிதில் ஒழுகக்கூடியதும் ஸ்வரூபத்துக்குப் பொருந்தியதாகையாலும் இனி இதற்கு மேலில்லை என்னும்படியான முடிந்த உபாயத்தை அருளிச்செய்கையாலே சரமச்லோகமென்று இதற்குத் திருநாமமாயிருக்கிறது- என்கை.

*தோற்றுவாய்:* இனி, இந்த ச்லோகத்துக்கு வாக்யார்த்தம் அருளிச் செய்கிறார்.

**மூ. சூ. 186. இதில் பூர்வார்த்தத்தாலே அதிகாரி க்ருத்யத்தை அருளிச் செய்கிறான்; உத்தரார்த்தத்தாலே உபாயக்ருத்யத்தை அருளிச் செய்கிறான்.**

*விரிவுரை:* அதாவது, இரண்டு அர்த்தங்களின் (முற்பாதி பிற்பாதி) வடிவமான இந்த ச்லோகத்தில், முற்பாதியாலே இந்த உபாயத்துக்கு அதிகாரியானவன் செய்யுமதை அருளிச் செய்கிறான்; பிற்பாதியாலே உபாயமான தான் இவனுக்குச் செய்யுமதை அருளிச் செய்கிறான் என்கை.

*தோற்றுவாய்:* அதிகாரி செய்யுமது எது? என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ. சூ. 187. அதிகாரிக்கு க்ருத்யமாவது - உபாய பரிக்ரஹம்.**

விரிவுரை: அதாவது, அதிகாரியானவனுக்கு இங்குச் செய்யத்தக்கது, இந்த உபாயத்தைப் பற்றுகை என்கை.

தோற்றுவாய்: ஆனால், அவ்வளவு சொல்லாதே வேறுபட்ட உபாயங்களை விடச் சொல்வானென்? என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ.சூ. 188. அத்தை ஸாங்கமாக விதிக்கிறான்.**

விரிவுரை: அதாவது - அந்த உபாயத்தைப் பற்றுகிறதை மற்ற உபாயங்களை விடுகையாகிற அங்கத்தோடே கூட விதிக்கிறான். என்கை.

**"ப்ரக்ஷாள்ய பாதா வாசாமேத் ஸ்நாத்வா விதிவதர்ச்சயேத் ஸ்தித்வார்க்யம் பாநவே தத்யாத் த்யாத்வா தேவம் ஜபேந்மநும்" பாதௌ** - கை கால்களை, **ப்ரக்ஷாள்ய** - கழுவிக்கொண்டபின்புதான், **ஆசாமேத்** - ஆசமனம் பண்ணக்கடவன், **ஸ்நாத்வா** - ஸ்நாநம் பண்ணியே, **விதிவத்** - விதிப்படி, **அர்ச்சயேத்**- அர்ச்சிக்கக் கடவன், **ஸ்தித்வா** - நின்று கொண்டே, **அர்க்யம்** - அர்க்யத்தை, **பாநவே** - சூரியன் பொருட்டு, **தத்யாத்** - கொடுக்கக்கடவன், **தேவம்** - தேவனை, **த்யாத்வா** - த்யாநித்துக் கொண்டேதான், **மநும் ஜபேத்** - மந்த்ரத்தை ஜபிக்கக்கடவன் என்று கைகால் கழுவுதலை முதலில் செய்து விட்டுத்தான் பிறகு ஆசமனம் முதலானவற்றை செய்ய வேண்டும். இல்லையென்றால், அநுஷ்டாநத்திற்குக் குறைவேற்படும். அதுபோலே, ஸித்தோபாயமான எம்பெருமானைப்பற்றும் பொழுது உபாயாந்திரங்களை (மற்ற உபாயங்களை) முதலில் விட்டே பற்றவேணும். இதை 'த்யஜ்ய' என்ற பதத்தில் இறுதியிலிருக்கும் ல்யப் என்ற விகுதி, 'விடுதல்' என்ற பொருளைக்காட்டும் த்யாகத்தை வொழிய பற்றுதல் என்ற ஸ்வீகாரம் பொருந்தாது என்பதைக் காட்டிக்கொடுக்கிறது. ஆகையால் "ஸர்வதர்மாந் பரித்யஜ்ய ஸ்திதச்சேத்" (எல்லாதர்

மங்களையும் விட்டிருந்தானாகில்) என்று தாம் மேற்கொண்டொழுகு வதாகிய தன் முயற்சியால் செய்யக்-கூடிய கர்ம ஜ்ஞாத பக்திகள், செய்வதற்கு அருமை யாயிருத்தலால் ப்ரபத்தி பற்ற எளிதாயிருத்தலால், அதை விட்டு இதை பற்றலாம் என்று அநுவதித்து ஸித்தோபாய-ஸ்வீகாரத்தை விதிக்கிறதென்கிற பிறருடைய வாதம் பொருத்தமற்றது என்கிறார்.

*தோற்றுவாய்:* எளிதில் செய்யக்கூடியதும் தன் தகுதிக்கு ஏற்றதும் விரும்பி மேற்கொண்டு ஒழுகுவதற்கும் உரியதான இந்த ப்ரபத்தியைச் செய்யென்று நியமிக்க வேணுமோ? என்ன, அருளிச் செய்கிறார் 'ராகப்ராப்தம் எனறு தொடங்கி'. ராகப்ராப்தம் - விருப்பத்துக்குரியது.

**மூ . சூ . 189. ராகப்ராப்தமான உபாயந்தானே வைதமானால் கடுகப்பரிக்ரஹிக்கைக்கு உடலாயிருக்கு-மிறே .**

*விரிவுரை:* அதாவது, இனிமையாலே விரும்புதலுக்கு-ரியதான பாலைப் பித்தரோகத்துக்கு மருந்தாகக் கொடுக்கச் சொல்லி நியமித்தால் உடனே கைக்கொள்ளுகைக்கு உரித்தாமாப்போலே, மற்ற உபாயங்களைக் காட்டிலும் இந்தப்ரபத்தியாகிற சரணாகதிக்குண்டான தனிச்சிறப்பாலே சேதனனுடைய விருப்பத்திற்கு ஏற்றதாகக் கை கொள்ளக் கூடியதாயிருந்துள்ள இந்த உபாயத்தை 'மேற்கொண்டொ-ழுகு' என்ற ஆணையுமிட்டால் விரைந்து ஏற்கைக்கு உரித்தாயிருக்குமன்றோ என்கை.

*தோற்றுவாய்:* இனி, இதற்கு அர்த்தம் அருளிச் செய்வதாக முற்பாதியின் பதங்களின் எண்ணிக்கையைக் குறிப்பிடுகிறார்.

**மூ . சூ . 190 . இதில் பூர்வார்த்தம் ஆறுபதம்.**

*தோற்றுவாய்:* அதில் முதல்பதத்தை தொடங்குகிறார்.

**மூ . சூ . 191. ஸர்வ தர்மாந் - எல்லா தர்மங்-களையும் .**

விரிவுரை: 'ஸர்வதர்மாந்' என்று அர்த்தம் அருளிச்செய்கிறார் எல்லாத் தர்மங்களையும் என்று.

தோற்றுவாய்: அது தான் தர்மமும், பன்மையும், ஸர்வ சப்தமுமாய் மூன்று விதமாயிருக்கையாலே இம்மூன்றுக்கும் அர்த்தம் அளிச்செய்வதாக, முதலில் தர்மலக்ஷணத்தை அருள்கிறார்.

**மூ . சூ . 192. தர்மமாவது - பலஸாத நமாயிருக்கு -மது .**

விரிவுரை: 'தர்மம்' என்ற சொல் பயனைஸாதித்துத் தரும் ஸாதநமாயிருக்குமது.

தோற்றுவாய்: தர்ம சப்தம் இம்மைப் பலங்களையும் ஸ்வர்க்கம் முதலிய மறுமைப்பலன்களுக்கும் ஸாதநமாகை-யால் இவைகளை வேறுபடுத்துகிறார்.

**மூ . சூ . 193 . இங்குச் சொல்லுகிற தர்ம சப்தம் த்ருஷ்ட பலஸாதநங்களைச் சொல்லுகையன்றிக்கே, மோக்ஷபல ஸாதநங்களைச் சொல்லுகிறது .**

விரிவுரை: அதாவது, கீதையில் கண்ணன் இதற்கு முன் உபதேசித்த கர்மஜ்ஞாநபக்திகளை, உபதேசிக்கிற போதே இம்மைப் பலஸாதநங்கள் இவற்றுக்கு வேறுபட்டவையாகை-யாலும், மோக்ஷோபாயங்களை உபதேசித்து வருகிற பகுதி-யாகையாலும், இவ்விடத்தில் சொல்லுகிற தர்ம சப்தம் புத்ர, பசு, அந்நம் முதலிய இவ்வுலக பலன்களையும் ஸ்வர்க்கம் முதலிய பரலோக பலன்களையும் உள்ளவற்றுக்கு ஸாதநங்-களைச் சொல்லுகையன்றிக்கே, பகவத் விஷயத்தை அடைந்-தின்புறுவதாகிய மோக்ஷ பல ஸாதநமாயுள்ளவற்றைச் சொல்-லுகிற தென்கை.

*தோற்றுவாய்: மேல் பன்மையின் பொருளைச் சொல்லு -கிறார்.*

**மூ . சூ . 194 . அவைதான் - ச்ருதிஸ்ம்ருதி விஹிதங்களாய்ப் பலவாயிருக்கையாலே பஹுவசந ப்ரயோகம் பண்ணுகிறது .**

*விரிவுரை: அதாவது - அந்த மோக்ஷபல ஸாதநங்கள் தாம், வேதங்களாலும் அதன் வழிநூல்களான தர்ம சாஸ்திர இதிஹாஸப் புராணங்களாலும் சொல்லப்பெற்றவையாய் அநேகங்களாயிருக்கையாலே 'தர்மாந்' என்று பன்மை விகுதி உபயோகிக்கப்பெற்றுள்ளது என்கை.*

*தோற்றுவாய்: அப்படி இருந்துள்ளவைதாம் எவை? என்ன, அருளிச் செய்கிறார்.*

**மூ . சூ . 195 . அவையாவன - கர்மஜ்ஞாந பக்தி-யோகங்களும், அவதார ரஹஸ்யஜ்ஞாநம், புருஷோத்த-மவித்யை, தேசவாஸம், திருநாமஸங்கீர்த்தநம், திருவிளக்கெரிக்கை, திருமாலையெடுக்கை தொடக்க-மான உபாயபுத்த்யா செய்யுமவையும் .**

*விரிவுரை: அதாவது, கீழ்ப்பலவாகச் சொல்லப்பட்ட-வையாவன, "**கர்மணைவ ஹி ஸம்ஸித்திமாஸ்திதா ஜநகா தய: தஸ்மாத ஸக்தஸ்ஸததம் கார்யம் கர்ம ஸமாசர அசக்தோஹ்யா சரந்கர்ம பரமாப்நோதி புருஷ:**" **தஸ்மாத்** - ஸாதநமில்லாமலே ஆத்மாவைக் காணவல்ல முக்தனுக்கோ மஹாயஜ்ஞும் முதலிய வர்ணாச்ரமங்கட்கு ஏற்ற தர்மத்தைச் செய்யவேண்டிய தில்லையாதலால், **அசக்த:-** (கர்மத்திலே) பற்றுதலில்லாமலே, **கார்யம்** - (கர்மம்) செய்யத்தக்கது, (இத்யேவ) என்று நினைத்தே, **ஸததம்**- (ஆத்மாவை அடையும் வரைக்கும்) எப்போதும், **கர்ம**-கர்மத்தையே, **ஸமாசர** - அநுஷ்டிப்பாய், **அசக்த**-பற்று இல்லாமல், **கர்ம ஆசரந்** - கர்மத்தை அநுஷ்டிக்கிற, **புருஷ:**- புருஷன், **பரம் ஆப்நோதிஹி** - ஆத்மாவை அடைகின்றானன்றோ?*

**ஜநகாதய:-** ஜனகர் முதலியோர், **கர்மணைவ** - கர்ம யோகத்தினாலேயே, **ஸம்ஸித்ம்** - ஆத்மாவை நேரே காணுதல், **ஆஸ்திதா: ஹி** - அடைந்தார்களன்றோ! என்று அங்கமாக இராமல் தானே ஸாதநமென்று சொல்லப்பட்டுள்ள கர்மயோகமும், **"ச்ரேயாந் த்ரவ்யமயாத் யஜ்ஞாத் ஜ்ஞாந யஜ்ஞ:பரந்தப, ஸர்வம் கர்மாகிலம் பார்த்த ஜ்ஞாநே பரிஸமாப்யதே"** பரந்தப-சத்ருக்களைத் தவிக்கச் செய்பவனே! த்ரவ்யம் ஜ்ஞாநம் என்ற இரண்டு அம்சங்களையுடைய கர்மத்தில், **த்ரவ்ய மயாத் யஜ்ஞாத்** - த்ரவ்ய அம்சமாயிருக்கிற யஜ்ஞத்தைக் காட்டிலும், **ஜ்ஞாநயஞ்ஞ :-** ஜ்ஞாநாம்ச மாயிருக்கிற யஜ்ஞம், **ச்ரேயாந்** - சிறப்புடையது, **பார்த்த** - குந்திபுத்திரனே, **ஸர்வகர்ம** - ஸகல கருமமும், **அகிலம்** (அந்தக் கர்மத்துக்குப்புறம்பாயிருக்கிற) எல்லாமும், (அந்தக்கர்மத்துக்கு உபயோகமான ஸகல்வஸ்துக்களும்), **ஜ்ஞாநே** - ஜ்ஞாந யோகத்திலே, **பரிஸமாப்யதே** - முடிக்கப்படுகிறது. **"ந ஹி ஜ்ஞாநேந ஸத்ருசம் பவித்ரமிஹ வித்யதே, ஜ்ஞாநாக்நிஸ் ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதே ததா"** ஜ்ஞாநஅக்நி: -ஜ்ஞாநமாகிற அக்நியானது,ஸர்வகர்-மாணி எல்லாக் கர்மங்களையும், **பஸ்மஸாத்குருதே** - பஸ்மமாகச் செய்கிறது, **ஜ்ஞாநேந ஸத்ருசம்** - ஜ்ஞாந யோகத்தைப்போன்று, **பவித்ரம்** - சுத்தியானது, **இஹ** - இந்த லோகத்தில், **நவித்ய தே ஹி** - வேறொன்று இல்லையன்றோ! என்று சொல்லப்பட்ட கர்மத்தால் ஸாதிக்கக்கூடிய ஜ்ஞாநயோகமும் **"பக்த்யாத்வநந்யயாசக்ய:"** **பக்த்யா அநந்யயா** - வேறு இடத்திலில்லாது சிறந்த பக்தியினாலே, **ஸக்ய:** அடையக் கூடியவன் (நான்) . இவை முதலானவைக-ளால் சொல்லப்பட்ட கர்மஜ்ஞாநங்களை அங்கமாகக் கொண்ட பக்தியோகமும் **"ஜந்ம கர்ம ச மே திவ்யம் ஏவம் யோ வேத்தி தத்த்வத: த்யக்த்வா தேஹம் புநர்ஜன்ம நைதி மாமேதி ஸோர்ஜுந"** **அர்ஜுந** -அர்ஜ்ஜுநனே!, **மே** - என்னுடைய, **ஜந்மகர்மச**- பிறப்பும் செயலும் திவ்யமானவை, **ய:** -எவன், **ஏவம்** - இப்படி, **தத்வத: வேத்தி** - உள்ளபடி அறிகிறானோ, **ஸ:-** அவன், **தேஹம்த்யகத்வா** - தேகத்தைவிட்டு, **புநர்ஜன்மநைதி** - மீண்டும் பிறப்பை அடையமாட்டான், **மாம்ஏதி** - என்னையே அடைகிறான்.

என்று விரோதி கழிவது முன்னாகத் தன்னை அடைதற்குச் சாதநமாகக் கண்ணன் சொன்ன அவதாரரஹஸ்ய ஜ்ஞாநம், **"ஏதத் புத்த்வா புத்திமாந் ஸ்யாத் க்ருதக்ருத்யச்ச பாரத"** **பாரத** - பாரதகுலத்தில் பிறந்த அர்ஜுந, **ஏதத்** - இந்த புருஷோத்தம வித்யயை, **புத்வா** - தெரிந்து கொண்டவன், **புத்திமாந்**-நல்லஜ்ஞாநத்தை யுடையவனாகவும், **க்ருதக்ரு-த்யச்ச** -செய்ய வேண்டிய கர்மங்களைச் செய்தவனாகவும், **ஸ்யாத்** - ஆவான். என்று விரும்பிய பலன் தருவதாலே (க்ருதக்ருத்ய) செய்யவேண்டியதை செய்தவனாக்கும் என்கிற புருஷோத்தம வித்யை, **"தேசோயம் ஸர்வ காமதுக்"** **அயம்தேச:**-இந்த புண்ணிய ஸ்தலம், **ஸர்வகாமதுக்**-எல்லா விருப்பங்களையும் கொடுக்கும் என்கிற புண்ணிய தேசவாஸம் **"ஸர்வபாபவிசுத்தாத்மா யாதி ப்ரஹ்ம ஸநாதநம்"** என்று அனைத்துப் பாபவிமோசநம் முதலாக ப்ரஹ்மத்தை அடைவதைப் பலமாகச் சொல்லியிருக்கிற திருநாம ஸங்கீர்த்தநமும். **"க்ருதேந வா஽த தைலேந தீபம் யோ ஜ்வாலயேந்நர:, விஷ்ணவே விதிவத் பக்த்யா தஸ்யபுண்ய பலம் ச்ருணு, விஹாய ஸகலம் பாபம் ஸஹஸ்ராதித்ய ஸந்நிப: ஜ்யோதிஷ்மதா விமாநேந விஷ்ணுலோகே மஹீயதே"** **ய:நர:**- எந்த மனிதன், **விஷ்ணவே** - பகவாந்பொருட்டு, **பக்த்யா** - பக்தியோடு, **விதிவத்** - சாஸ்திரத்தில் சொன்ன படி, **க்ருதேந**- நெய்யினாலாவது, **அதாவா** - அல்லது, **தைலேந** - எண்ணையினாலாவது, **தீபம்** தீபத்தை, **ஜ்வாலயேத்**- எரியும்படி செய்கிறோனோ, **தஸ்ய**-அவனுடைய, **புண்யபலம்** - புண்ணியத்தின் பலத்தை, **ச்ருணு**-கேள், **ஸ:**-அவன், **ஸகலம் பாபம்**- எல்லாப்பாபங்களையும், **விஹாய** - விட்டு, **ஸஹஸ்ராதித்ய ஸந்நிப** -ஆயிரம் சூர்யனுக்கு ஒப்பானவனாகி, **ஜ்யோதிஷ்மதா** - காந்தியோடு கூடிய, **விமாநேந** - விமாநத்தாலே (போய்) **விஷ்ணுலோகே** - விஷ்ணுலோகத்தில், **மஹீயதே** - கௌரவிக்கப்படுகிறான். ஏன்ற பாப விடுதலை முன்னாக பகவானை அடைவதற்குச் சாதகமாகச் சொல்லபடுகிற திருவிளக்கெரிக்கை திருமாலை எடுக்கை முதலாக ஸாதநபுத்தியோடு செய்யப்படும் உபாயங்கள் என்கை.

*தோற்றுவாய்: இனி, ஸர்வ சப்தார்த்தத்தை அருளிச் செய்கிறார்.*

**மூ. சூ. 196. ஸர்வ சப்தத்தாலே அவ்வவ- ஸாதந விசேஷங்களை அநுஷ்டிக்குமிடத்தில் அவற்றுக்கு யோக்யதா பாதகங்களான நித்ய கர்மங்களைச் சொல்லுகிறது.**

*விரிவுரை:* அதாவது, தர்ம விசேஷணமான ஸர்வ சப்தத்தாலே பன்மையாகச் சொல்லப்பெற்ற அந்த அந்த ஸாதந விசேஷங்களைக் கைக்கொண்டு ஒழுகும் இடத்தில் **"ஸந்த்யா ஹீநோऽசுசிர் நித்யம் அநர்ஹஸ்ஸர்வ கர்மஸு".**

**ஸந்த்யாஹீந:**-ஸந்த்யாவந்தநம் செய்யாதவன், **நித்- யம்** - எப்பொழுதும், **ஸர்வகர்மஸு** - எல்லாக்கர்மங்களும் செய்ய, **அநர்ஹ:** - தகுதியற்றவனாகிறான். என்கிறபடியே தகுதியற்றவனாகாமல் தன்னை மேற்கொண்டொழுகுவதாலே அவற்றுக்குத்தகுதியை உண்டாக்கிக் கொடுக்கும் ஸந்த்யா- வந்தந பஞ்ச மஹா யஜ்ஞங்கள் முதலிய நித்யகர் மங்களைச் சொல்லுகிறது என்கை.

*தோற்றுவாய்:* சொன்னதை முடிக்கிறார்.

**மூ. சூ. 197. ஆக, ச்ருதி ஸ்ம்ருதி சோதிதங்க- ளாய் நித்ய நைமித்திகாதி ரூபங்களான கர்ம யோகாத்யுபாயங்களை என்றபடி.**

*விரிவுரை:* அதாவது - ஆக, கீழ்ச் சொன்ன எல்லா வற்றாலும் **"சோதநாலக்ஷணார்த்தோ தர்ம:"** (விதியினால் விதிக்கப்படும் பொருள் தர்மம் என்கிறது.) என்கிறபடியே விதியை விதிக்கிற ப்ரமாணத்தை உடைத்தான அர்த்தம் தர்மம் என்கையாலே, வேதம் தர்ம சாஸ்திரங்களாகிற ப்ரமாணங்களாலே விதிக்கப்பட்டுள்ளவையாய், நித்யம் நைமித்திகம் முதலானவற்றை வடிவாக உடைத்தான கர்மயோகம் தொடக்கமான உபாயங்களை என்றபடி என்கை. **நித்யம்-தினந்தோறும் செய்யக்கூடிய திருவாராதநம்.**

நைமித்திகம்- பக்ஷங்களிலும் மாஸங்களிலும் செய்யக்கூடிய தர்மங்கள் .

தோற்றுவாய்: ஸ்வரூபத்துக்கு தகுதியல்லாததாய் அதர்மமாகச் சொல்ல வேண்டியவற்றைத் தர்மம் என்கிறதுக்கு காரணத்தை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 198 . இவற்றை, தர்மம் என்கிறது - ப்ரமித்த அர்ஜுநன் கருத்தாலே .**

விரிவுரை: அதாவது, பகவதத்யந்த பாரதந்த்ர்ய மாகிற ஆத்மாவின் இயல்பிற்கு விரோதி யாயிருக்கையாலே அதர்மம் என்று சொல்லவேண்டிய இவைகளை தர்மம் என்று சொல்லுகிறது, தன்னுடையதர்மமான யுத்தத்தை அதர்மம் என்றும், இவற்றை (ஸாதநதர்மங்களை) தர்மமென்றும் (ப்ரமித்த) மயங்கிய அர்ஜுநனுடைய நினைவாலே என்கை.

தோற்றுவாய்: ஆக, முதல்பத அர்த்தத்தை அருளிச் செய்தாராயிற்று. பிறகு, இரண்டாம் பதத்தைத் தொடங்குகிறார்.

**மூ . சூ . 199 . பரித்யஜ்ய .**

தோற்றுவாய்: இதுவும், த்யாகமும் ல்யப்பும்த்யஜ்ய என்றதின் விகுதியும் உபஸர்க்கமுமாய், (உரிசொல்லும்) மூன்று விதமாயிருக்கையாலே, அதில் த்யாகத்தை முதலில் அருளிச்செய்கிறார்.

**மூ . சூ . 200 . த்யாகமாவது - உக்தோபாயங்களை அநுஸந்தித்து, 'சுக்திகையிலே ரஜத புத்தி பண்ணுவாரைப்போலேயும், விபரீத திசாகமநம் பண்ணுவாரைப்போலேயும், அநுபாயங்களிலே உபாய புத்தி பண்ணினோம்' என்கிறபுத்தி விசேஷத்தோடே த்யஜிக்கை .**

விரிவுரை:- அதாவது - இவ்விடத்திற் சொல்லுகிற த்யாகமாவது - வெறும் விடுகை மாத்திரமன்று சொல்லுகிறது. கீழ்ச் சொல்லப்பட்ட உபாயங்களை நினைத்து வெள்ளியல்லாத கிளிஞ்சலை வெள்ளியென்று நினைப்பாரைப் போலேயும், தன் கார்யத்துக்கு உரியதான திசையிலே போக நினைத்து அதற்கு எதிரான திக்கிலே அதுவாக நினைத்துப் போவாரைப்போலேயும், பகவானை அடைதற்குரிய உபாயத்தை விரும்பக்கூடிய 'நாம் உபாயமல்லாதவற்றிலே உபாய புத்தி பண்ணினோம்' என்கிற அனுதாபத்தோடே விடவேண்டும் என்றபடி.

தோற்றுவாய்:- இனி, (உபஸர்க்கத்தின்) உரிச்சொல்லின் அர்த்தத்தை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 201 . 'பரி' என்கிற உபஸர்க்கத்தாலே - பாதகாதிகளை விடுமாபோலே ருசி வாஸனைகளோடும் லஜ்ஜையோடுங்கூட மறுவலிடாதபடி விடவேணுமென்கிறது .**

விரிவுரை: 'பரி ஸாகல்யே' என்று 'பரி' என்ற உரிச்சொல்லுக்கு (ஸகலம்) 'எல்லாம்' என்ற பொருள் கொள்ளலாமாயினும், அது ஸர்வ சப்தத்தாலே சொல்லியதால் ஸகலம் என்ற அர்த்தம் இங்குத் தேவையில்லாமையால், மிகுதி என்ற பொருள் தரும் 'பரி' என்ற உரிச் சொல்லாலே **"ப்ரஹ்ம ஹத்யா ஸுராபாநம் ஸ்தேயம் குர்வங்க நாகம :"** - (அதாவது, (ப்ரஹ்ம ஹத்தி,) பிராம்ணனைக் கொல்லுதல், மதுவருந்துதல், பொன்திருடுதல், குருபத்நியைத் தழுவுதல்) என்கிறபடியே இவைகள் மஹா பாதகங்களாகையால் இவைகளை விடும்போது, மீண்டும் இதில் . தொடர்பு வராதபடி "நாம் இதைச் செய்வதே' என்ற லஜ்ஜா பயங்களோடே விடுமாபோலே, **" அத பாதக பீதஸ்த்வம்"** (இனி உபாயாந்தரங்களில் மிக்க பாதகம் என்கிற அச்சமுடையநீ இதை அறவிட்டு நாராயணனையே உபாயமாகப் பற்று.) என்று தர்ம தேவதை பாதகமாகச் சொன்ன உபாயாந்தரங்களை விடும்போது புத்தி பூர்வகமாக

அவற்றில் மூளுகைக்கு உறுப்பான ருசியும், வாசனையும் ஆகிறவற்றோடே கூட பகவானே உபாயம் என்ற ஒன்றையே ஸாதநமாகக் கொள்ளுதற்கு உரிய தன் ஸ்வரூபத்துக்கு (தன் இயல்புக்கு) மிகவும் 'தகாததைச் செய்வதே' என்கிற லஜ்ஜையோடு கூடியவனாய், மீண்டும் அதில் தொடர்பு உண்டாகதபடி விடவேண்டுமென்று சொல்லுகிற தென்றபடி.

தோற்றுவாய் : இதில் 'ல்யப்' (த்யஜ்ய) என்ற பத அர்த்தத்தை அருளிச் செய்கிறார்.

**மூ. சூ. 202. ல்யப்பாலே "ஸ்நாத்வா புஞ்ஜீத" என்னுமாபோலே, உபாயாந்தரங்களைவிட்டே பற்ற வேணும் என்கிறது.**

விரிவுரை : அதாவது 'த்யஜ்ய' என்கிற ல்யப்பாலே 'த்யஜ்ய' என்பதிலுள்ள யகரவிகுதியை வடமொழி இலக்கணப்படி 'ல்யப்' என்று சொல்லுவர். "புக்த்வா சாந்த்ராயணம் சரேத்" (வஸ்திரத்திலும், கல்லிலும், தாமிரபத்திரத்திலும், ஆலிலையிலும், அரச இலையிலும்) புசித்திருந்தால், சாந்த்ராயண விரதத்தை (அதற்கு ப்ராயசித்தமாக), அநுஷ்டிக்க வேண்டும் என்னுமாபோ-லன்றிக்கே, 'ஸ்நாத்வா புஞ்ஜீத' (ஸ்நாநம் செய்துவிட்டே புஜிக்க வேண்டும்) என்கிற விதி புஜிக்கமளவில் நியமத்தைச் சொல்லுமாபோலே, ஸித்தோபாயத்தைப் பற்றுமளவில் விடவேண்டியதான உபாயாந்தரங்களான கர்மஜ்ஞாந பக்த்யாதிகளை விட்டே பற்ற வேணும் என்கிற நியமத்தைச் சொல்லுகிறதென்கை.

தோற்றுவாய் : இப்படி விட்டே பற்ற வேணுமென்கிற இதன் கருத்தை அருளிச் செய்கிறார்.

**மூ. சூ. 203. "சசால சாபஞ்ச முமோச வீர:" என்கிறபடியே இவை அநுபாயங்களான மாத்ர-மன்றிக்கே கால்கட்டு என்கிறது.**

விரிவுரை : "யோ வஜ்ரபாதாசநிஸந்நிபாதாந் ந சுக்ஷுபே நாபி சசால ராஜா, ஸ ராம பாணாபிஹதோ ப்ருசார்த்த: சசால சாபஞ்ச முமோச வீர:" (ய: ராஜா - எந்த ராஜாவான ராவணன், வஜ்ரபாத - வஜ்ராயுதத்தாலும் அடிபட்டாலும், அசநிஸந்நிபாதாத் - இடியே மேல் விழுந்தாலும், நசுக்ஷுபே - மனக்லேச மடையவில்லையோ, நஅபிசசால - சரீரநடுக்கத்தையும் அடையவில்லையோ, ஸ: - அவனே, ராமபாண அபிஹத: ஸந் - ஸ்ரீராம பாணத்தினால் அடிபட்டவனாய்க் கொண்டு, ப்ருச ஆர்த்த: - மிகவும் கலங்கி, சசால - நடுநடுங்கினான், வீர:- சூரனாயிருந்தாலும் (தன்கையில் ஆயுதமிருந்தால் ஸ்ரீராமன் போகவொட்டா-னென்று நினைத்து உயிரினிடத்துள்ள ஆசையினாலே,) சாபம் - வில்லை, முமோச - விடவும் செய்தான் என்கிற இந்த ச்லோகத்தில் ராவணன் ஸ்ரீராம பாணங்களாலே மிகவும் கலங்கி நிலைகுலைந்து போகப் பார்த்த அளவிலும் கையில் வில்லிருக்குமளவும் பெருமாள் போக வொட்டாமையாலே பின்பு போட்டவில் கையிலிருந்தபோது, எதிரியை வெல்லுதற்கு உரித்தாகாத மாத்ரமன்றிக்கே "இன்றுபோய் நாளைவா" என்று பின்பு செய்த அநுமதி, பெருமாள் அப்போது செய்யக் காணாமையாலே போகவும் ஒண்ணாத-படி கால் கட்டானமையைச் சொல்லுகிறபடியே உபாயாந்த-ரங்களான இவற்றிலே அல்பம் தொடர்பிருக்கிலும் இவை பலத்துக்கு ஸாதநமாகாத மாத்திரமன்றிக்கே பலத்துக்குத் தடையாய்த் தலைக்கட்டுமென்றபடி.

தோற்றுவாய் : இன்னமும் இவற்றில் அந்வயம் (தொடர்பு) இழப்பதற்குக் காரணமாமென்னுமத்தை உதாரண-முகத்தாலே காட்டுகிறார்.

## மூ . சூ . 204 . சக்ரவர்த்தியைப் போலே இழக்-கைக்கு உறுப்பு.

விரிவுரை : அதாவது, முன்பே வரங்கொடுத்து வைத்து இப்போததை மறுக்க வொண்ணாதென்று ஆபாஸமான ஸத்யதர்மத்தைப் பற்றிநின்று "ராமோ விக்ரஹவாந்தர்ம:" (தர்மமே திருமேனியாக வடிவெடுத்த ராமன்) என்கிற

பெருமாளோடே கூடிவாழ இருந்த மேலாம் பயனை இழந்த தசரத சக்ரவர்த்தியைப் போலே தாழ்ந்ததான சேதநனுடைய முயற்சியாலே உண்டாவதான உபாயாந்தரங்களில் அந்வயித்து நிற்கிறதாகிறது, "க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்" - (க்ருஷ்ணனையே ஸநாதமான தர்மம் என்று சொல்லுகிறார்கள்.) என்கிற பகவத்விஷயத்தோடே கூடி வாழுகையாகிற பெரும்பயனை இழக்கைக்கு உறுப்பாய் விடுமென்கை.

தோற்றுவாய் : இனி, இங்குச் சொன்ன ஸர்வ தர்மங்களையும் விடுகையாகிற இதன் கருத்தறியாதார் சொல்லும் குறைபாட்டைத் தள்ளுகைக்காக அந்தப் பக்ஷத்தை எடுக்கிறார்.

**மூ . சூ . 205 . ஸர்வதர்மங்களையும் விட்டு என்று சொல்லுகையாலே, சிலர் 'அதர்மங்கள் புகுரும்' என்கிறார்கள் .**

விரிவுரை : அதாவது, விடத்தக்க தர்மந்தான், "இதம் குரு இதம் மாகார்ஷீ:" என்று செய்யச் சொல்லுவதும் விடச் சொல்லுவதுமாயிருக்கையாலே 'ஸர்வதர்மங்களையும் விட்டு' என்று சொல்லுகையாலே தக்கதை செய்யச் சொல்வதோடு, தகாததையும் ஒரு சேரத்தள்ளுமளவில், 'மூடின கதவைத் திறந்தால் நாய் முதலானவை புகுமாபோலே அதர்மங்களான தகாத செயல்களும் புகும்' என்று, சிலர் சொன்னார்கள் என்கை.

தோற்றுவாய் : அந்தப் பக்ஷத்தைத் தள்ளுகிறார்.

**மூ . சூ . 206 . அது கூடாது ; 'அதர்மங்களைச் செய்' என்று சொல்லாமையாலே .**

விரிவுரை : அதாவது - ஸர்வதர்மங்களையும் விடச் சொன்ன இத்தால் அதர்மங்கள் புகும் என்கிற இது உண்டாகாது ; ஏனெனில்? இங்கு, தர்மங்களை விடச் சொன்னமாத்திரம் தவிர அதர்மங்களைச் செய்யென்று சொல்லாமையாலே என்கை.

தோற்றுவாய் : அதர்மத்தை தவிர்தலையும் தர்மசப்தம் காட்டுமாகையாலே, அதைவிடச் சொன்னால் அதர்மத்தைச் செய்யென்பது குறிப்புப் பொருளாகாதோ? என்கிற எதிர்வாதியின் கருத்தை அநுவதிக்கிறார்.

**மூ . சூ . 207 . 'தன்னடையே சொல்லிற்றாகாதோ?' என்னில்,**

தோற்றுவாய் : இதற்கு விடை அளிக்கிறார்.

**மூ . சூ . 208 . ஆகாது; தர்மசப்தம் அதர்மநிவ்ருத்தியைக் காட்டாமையாலே .**

விரிவுரை : அதாவது - தர்மங்களை விடச் சொன்ன இத்தால் 'அதர்மங்களைச் செய்' யென்னுமிடம் தன்னடையே சொல்லிற்றாகாது; தர்ம சப்தம் அதர்மத்தை செய்யாதே என்ற அங்கங்களோடு கூடிய முதன்மையாயிருந்துள்ள செய்ய வேண்டிய தர்மத்தைக் காட்டுமதொழிய, பொதுவில் அதர்மத்தை தவிர்தலை மாத்திரத்தைக் காட்டாமையாலே என்கை.

தோற்றுவாய்: தர்மம் என்ற சொல் அதர்மத்தை விடுகை என்பதில் முக்கியப் பொருள் இல்லையேயாகிலும் ஸர்வ சப்தமான இது தன்னையுங் காட்டாதோ' என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 209 . காட்டினாலும், அத்தை ஒழிந்தவற்றைச் சொல்லிற்றாமித்தனை.**

விரிவுரை: அதாவது, அப்படிக் காட்டிற்றாகிலும் அது இவ்விடத்தில் சொன்னவன் கருத்து அது அல்லாமையாலே, அதைத் தவிர்த்த விதிரூபமான தர்மங்களானவற்றைச் சொல்லிற்றாமித்தனை என்கை.

தோற்றுவாய் : இப்படி ஒதுக்குகிறது எது கொண்டு? என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ . சூ .210. தன்னையும், ஈச்வரனையும், பலத்தையும் பார்த்தால் அவை புகுர வழியில்லை.**

*விரிவுரை:* அதாவது, அதர்மத்தைச் செய்தல் சேஷியான எம்பெருமானுக்கு மிகவும் வெறுப்புக்குரியதாகையாலே, அவன் விருப்பத்துக்குரியனாமது ஒழிய, அவன் இஷ்டத்துக்கு சேராதபடியான ஸ்வரூபத்தையுடைய சேஷபூதனாகிற தன்னைப் பார்த்தாலும், அவனை ரக்ஷகனாகக் கொள்ளும்போது வேறு துணை கூட்டுப் பொறாதவனாகையாலே இத்தலையில் தன்முயற்சியைவிட்டிருக்கும் நிலையை ஒழிய, செயல்படுவதை ஒன்றையும் பொறாத உபாயபூதனான ஈச்வரனைப்பார்த்தாலும், இவனுடைய முயற்சிக்குப்பலம் அவன் முகமலர்த்தியாகையாலே இத்தகைய பலனைப்பார்த்தாலும், இம்மூன்றுக்கும் முரண்பட்டவைகளான அவை புகுவதற்கு வழியில்லை என்கை. ஆகையால், தர்ம சப்தம் அதர்மத்தை விடுகையைக் காட்டிற்றாகிலும், அத்தை தவிர்ந்தவேறுஸாதநங்களை சொல்லிற்றாகக் கொள்ளவேணும் என்று கருத்து. ஆக, இரண்டாம் பத அர்த்தத்தை அருளிச் செய்தாராயிற்று.

தோற்றுவாய் : பிறகு, மூன்றாம் பதத்தை எடுக்கிறார்.

**மூ.சூ.211. மாம் - ஸர்வரக்ஷகனாய், உனக்குக்கையாளாய், உன்னிசைவு பார்த்து, உன் தோஷத்தை போக்யமாகக் கொண்டு, உனக்குப் புகலாய், நீர்சுடுமாபோலே சேர்ப்பாரே பிரிக்கும் போதும் விடமாட்டாதே ரக்ஷிக்கிற என்னை.**

*விரிவுரை :* 'மாம்' என்ற பதத்துக்கு அர்த்தம் அருளிச் செய்கிறார். 'ஸர்வ ரக்ஷகனாயெ'ன்று தொடங்கி அதாவது, நம்மைக் காக்குமோ? காவானோ? என்று ஸந்தேஹிக்க வேண்டாதபடி அனைவருடைய காப்பிலும் 'காப்பது' என்ற விரதத்தையுடையவனாய், தன் பெருமையையும் நம் சிறுமையையும் பார்த்து நம்மோடு கூட்டற்றிருக்குமோ? என்று என்ன வேண்டாதபடி "ஸேநயோருபயோர் மத்யே

ரதம் ஸ்தாபய" (இரு சைந்யங்களின் நடுவில் ரதத்தை நிறுத்து) என்று ஏவிக் கொள்ளலாம்படி உனக்குக் கையாளாய், உன்னைக் காப்பதில் உண்டான ஆசையாலே "ரக்ஷ்யாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே" (ரக்ஷிக்க வேண்டும் என்ற ப்ரார்த்தனையை இறைவன் எதிர்பார்க்கிறான்) என்கிறபடியே காக்கப்படுகிற உன் இசைவு பார்த்து, நம் குற்றங்கண்டு கைவிடுமோ? என்று அஞ்ச வேண்டாதபடி தகாத இடத்தில் ஸ்நேஹ காருண்யங்கள் காட்டியும், தர்மம் இன்னது, அதர்மம் இன்னது என்ற விஷயத்தில் கலங்குகிற உன் குற்றத்தைக் குணமாகக் கொண்டு, தஞ்சமற்றவர்களுக்குத் தான் தஞ்சமாகையாலே நீயும் பிறரும் உனக்குத் தஞ்சமில்லாத நிலையில் ஒதுங்கலாம்படியான புகலாய், குளிர்ச்சியே இயல்பான நீர், சூடேற்றிக் கொள்ளுமாபோலே அபராதங்களை பொறுப்பித்துச் சேர்ப்பிக்கும் புருஷகார பூதரே "தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல்" என்கிறபடியே குற்றங்காட்டி அகற்றும் போதும் விடமாட்டாதவனாய் "என்னடியாரது செய்யார்" என்று எதிரிட்டு ஒருநிலை நின்று ரக்ஷிக்கும் என்னை என்றபடி.

**தோற்றுவாய்:** 'என்னை' என்று விபாவதாரக் கண்ணனாகிய தன்னைக் காட்டுகையாலே வேறுபடுத்த வேண்டியவற்றைக் காட்டுகிறார்.

**மூ . சூ . 212 . இத்தால், பரவ்யூஹங்களையும் தேவதாந்தர்யாமித்வத்தையும் தவிர்க்கிறது.**

**விரிவுரை :** அதாவது - 'என்னை' என்று அவதரித்துக் கண் காண நிற்கிற தன்னைத் தஞ்சமென்று பற்றத் தக்கவனாகச் சொன்ன இத்தாலே, வேறு தேசத்திலிருப்பதாலே காணவும் கிட்டவும் இயலாதபடி இருக்கிற பரவாஸுதேவனையும் பாற்கடல்வாஸுதேவனையும், சிறந்ததான திருமேனியன்றிக்கே உபாஸகரான வேற்றுபாய நிஷ்டர்க்கு இலக்காயிருக்கிற அக்நி இந்திரன் முதலான தேவதாந்தர்யா மித்வத்தையும் நீக்குகிறது - என்கை.

தோற்றுவாய் : தர்மங்களை எல்லாம் விட்டுத் தன்னைப் பற்றச் சொல்லுகையாலே ஏற்பட்டதொரு அர்த்தத்தை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 213 . தர்ம ஸம்ஸ்தாபநம் பண்ணப் பிறந்தவன் தானே 'ஸர்வதர்மங்களையும் விட்டு என்னைப்பற்று' என்கையாலே ஸாக்ஷாத் தர்மம் தானேயென்கிறது.**

விரிவுரை : அதாவது, "தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம் -பவாமியுகேயுகே" என்கிறபடியே தன்னை அடைதற்குரித்-தான தர்மத்தை நிலைநிறுத்துவதற்குப் பிறந்தவன்தானே "ஸர்வதர்மாந் பரித்யஜ்ய" என்று மோக்ஷ ஸாதநமாக சாஸ்திரங்களில் சொல்லப்பெற்ற 'ஸர்வ தர்மங்களையும் விட்டு என்னைப்பற்று' என்று சொல்லுகையாலே, அவை-தான் நேரே பயனைத்தரும் தருமங்களல்ல, நிலைநாட்டுதற்-குரிய ஸாக்ஷாத் தர்மம் "க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்" (ஸநாதந தர்மம் கிருஷ்ணனே) என்கிற படியே பழைய தர்மமான தானே என்னுமிடம் சொல்லுகிறது.

தோற்றுவாய் : இத்தால் என்? சொல்கிறது என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 214 . இத்தால், விட்ட ஸாதநங்களில் ஏற்றம் சொல்லுகிறது.**

விரிவுரை : அதாவது, இப்படிச் சொன்ன இத்தால், கீழ்விட்ட ஸாதநங்களிற்காட்டில் இந்த ஸாதநத்துக்குண்-டான ஏற்றம் சொல்லுகிறது என்கை.

தோற்றவாய் : அதுதான் எது ? என்ன, அருளிச்-செய்கிறார்.

**மூ . சூ . 215 . அதாவது - ஸித்தமாய், பரமசேத-நமாய், ஸர்வ சக்தியாய், நிரபாயமாய், ப்ராப்தமாய், ஸஹாயாந்தர நிரபேக்ஷமாயிருக்கை.**

*விரிவுரை: அதாவது, கீழ்விட்ட ஸாதநங்களிற் காட்டில் இதற்கு ஏற்றமாவது - சேதநனுடைய செயலாலே (ஸ்வரூபஸித்தியாம்படி) தானுளதாம்படி இருக்கையன்றிக்கே பழமையான தர்மமாகையாலே ஸித்தமாய், "**யஸ்ஸர்வஜ்ஞ-ஸ்ஸர்வவித்**"(எவனொருவன் எல்லாப் பொருளையும் அவற்றின் ஸ்வபாவங்களையும் அறிகிறானோ) என்று சொல்லுகிறபடி ஸர்வஜ்ஞ விஷயமாகையாலே பரமசேதநமாய், "**பராஸ்ய சக்திர் விவிதைவச்ரூயதே**" (அந்த பரமாத்மாவுக்கு பலபடிப்பட்டதும் மேலானதுமான சக்தியும் உளதென்று கேட்கப்படுகிறது) என்கிறபடியே ஸர்வ சக்தியாய், சேதநனால் செய்யப்படுமதாய் நடுவே அபாயங்கள் புகுவதற்கு அவகாசமுண்டாம்படியிருக்கையன்றிக்கே, பழையதாக நிலைநின்ற பொருளாயிருக்கையாலே அபாயமற்றதாய் பரதந்திரனான இந்த சேதநனுடைய இயல்பான ஸ்வரூபத்துக்குத் தகுதியற்றதாய் இராதே தகுதியுடைத்தானதாய், கீழ்ச் சொன்ன பரம சேதநத்வம் முதலானவைகளாலே வேறு துணையை விரும்பாமையாகிற கூட்டு வேண்டாதபடி இருக்கையென்றபடி.*

***தோற்றுவாய்*** *: இந்த வேறு துணை வேண்டாமையைக் காரணத்தோடு நிலைநிறுத்துகிறார்.*

***மூ . சூ . 216 . மற்றை உபாயங்கள் ஸாத்யங்களாகையாலே, ஸ்வரூபஸித்தியில் சேதநனை அபேக்ஷித்திருக்கும்; அசேதநங்களுமாய், அசக்தங்களுமாயிருக்கையாலே கார்யஸித்தியில் ஈச்வரனை அபேக்ஷித்திருக்கும் . இந்த உபாயம் அவற்றுக்கு எதிர்த்தட்டாயிருக்கையாலே, இதர நிரபேக்ஷமாயிருக்கும் .***

*விரிவுரை : அதாவது - இதைத்தவிர்த்த உபாயங்கள் சேதநனுடைய செயல்மூலம் உருவாக்கப்படுமவையாகையாலே தானுளதாம் படியான ஸ்வரூபஸித்தியில் முயன்று செய்பவனான சேதநனை விரும்பி இருக்கும்; இவனுக்குச்*

செய்ய வேண்டுமவை அறிகைக்கும் அவை தன்னைச் செய்து தலைக்கட்டுகைக்கும் தகுதியில்லாத (அசேதநங்களுமாய்) அறிவில்லாதவைகளாய் (அசக்தங்களுமாய்) ஆற்றலில்லா-தவையாய் இருக்கையாலே, சேதநனுடைய இஷ்டம் தருகைக்கும், அநிஷ்டம் தவிருகைக்குமான கார்யத்தினுடைய ஸித்தியில் "பலமத உபபத்தே:" (பலத்தையளிப்பவன் ஈச்வரனே) என்ற ப்ரஹ்மஸூத்திரப்படி பலத்தை அளிப்பதற்கு உபயோகியான ஸர்வசக்தி முதலான தகுதி-களையுடையனான ஈச்வரனை எதிர்பாத்திருக்கும்; இந்த உபாயம் ஏற்கனவே பூர்ணமாயிருப்பதாய், அனைத்து சக்திகளாலும் நிறைவுற்றதாய், உபாயாந்தரங்களுக்கு எதிர்த்தட்டாயிருக்கையாலே வேறொன்றைத் துணை கோலாதிருக்கும் என்கை.

தோற்றுவாய் : இனி, இப்பதத்திலே தஞ்சமென்று பற்றுகைக்கு அநுகூலிப்பதான குணச் சிறப்புக்களெல்லாம் ப்ரகாசிக்கிறபடியை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 217 . இதிலே, வாத்ஸல்ய ஸ்வாமித்வ ஸௌசீல்ய ஸௌலப்யங்களாகிற குணவிசேஷங்கள் நேராக ப்ரகாசிக்கிறது .**

விரிவுரை : இதிலே என்றது, "மாம்" என்ற பதத்திலே என்றபடி, அதாவது - அதர்மம் என்ற நினைவாலே தர்மத்தினின்றும் விலகியவனான அர்ஜுநனுக்குக் குற்றம் பாராதே தேவையான அர்த்தங்களனைத்தும் அருளிச் செய்கையாலே, வாத்ஸல்யம் என்ற குணம் ப்ரகாசிக்கிறது; தன்னுடைய பரத்வத்தைப் பலகாலும் அருளிச் செய்த அளவன்றிக்கே அர்ஜுநன் ப்ரத்யக்ஷிக்கும்படி விச்வரூபத்-தால் தன்னை நேரே காணும்படிச் செய்கையாலே, ஸ்வாமித்-வம் ப்ரகாசிக்கிறது; "ஹே க்ருஷ்ண ஹே யாதவ" என்று அழைத்ததாக அர்ஜுநன் தானே சொல்லும்படி இவனோடே கலந்து பரிமாறுகையாலே, ஸௌசீல்யம் ப்ரகாசிக்கிறது; ஸுத்தஸத்வமான அப்ராக்ருதமான திருமேனியைக் கண்ணு-க்கிலக்காம்படி செய்கையாலே, ஸௌலப்யம் ப்ரகாசிக்கிறது என்கை.

"குணவிசேஷங்கள்" என்றது, தஞ்சம் என்று பற்றுகைக்குத்தேவையான குணங்களென்று தோற்றுகைக்காக. நேராக ப்ரகாசிக்கிறது என்றது - தெளிவாகப்ரகாசிக்கிறது - என்றபடி.

தோற்றுவாய்: இவை அனைத்திலும் வைத்துக் கொண்டு மிகவும் விரும்புகைக்குரித்தானது ஸௌலப்யமாகை -யாலே, அவதார மூலமான ஸௌலப்யத்தளவன்றிக்கே தன்னைத் தாழவிட்டுக் கொண்டு ஸாரதியாய்நிற்கிற நிலையிலே தோற்றுகிற ஸௌலப்யத்தின் மிகுதியை அருளிச் செய்கிறார்.

**மூ. சூ. 218. கையும் உழவுகோலும், பிடித்தசிறுவாய்க்கயிறும், ஸேநாதூளிதூஸரிதமான திருக்குழலும், தேருக்குக்கீழே நாற்றின திருவடிகளுமாய் நிற்கிற ஸாரத்யவேஷத்தை 'மாம்' என்று காட்டுகிறான்.**

விரிவுரை : அதாவது - குதிரைகளைத் தூண்டுகைக்குத் திருக்கையிலே தரித்த உழவுகோலும், குதிரைகளை இடப்பக்கம் வலப்பக்கம் திருப்புகைக்காகவும் நிறுத்த வேண்டுமிடத்திலே தாங்கி நிறுத்துகைக்காவும் பிடித்த சிறுவாய்க் கயிறும், திருமுடியில் எதுவும் மறைக்காமல் - அணியாமல் நிற்கையாலே ஸேநாதூளியாலே புழுதி அளைந்த திருக்குழலும் "தேர் கடவிய பெருமான் கனைகழல்" என்கிறபடியே சாத்தின சிறுசதங்கையும் தானுமாகத் தேருக்குக்கீழே தொங்கவிட்ட திருவடிகளுமாய் நிற்கிற ஸாரத்ய வேஷத்தை 'மாம்' (என்னை) என்று காட்டுகிறான் என்கிறார்.

தோற்றுவாய் : பிறகு, நான்காம் பதத்தை எடுக்கிறார்.

**மூ. சூ. 219. ஏகம்.**

விரிவுரை : 'ஏகம்' - 'என்னையே' என்று இப்பதத்தின் அர்த்தத்தை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 220 . இந்த ஏக சப்தம் ஸ்தாநப்ரமா-ணத்தாலே அவதாரணார்த்தத்தைக் காட்டுகிறது .**

விரிவுரை : அதாவது - இந்த உபாய விசேஷத்தைச் சொல்லும் இடங்களிலே பல விடங்களிலும் தேற்றேவகார-மாக உபயோகிக்கப்படுகையாலே, உகாரம் போலே இந்த 'ஏக' சப்தமும் ஸ்தாநப்ரமாணத்தாலே தேற்றேவகாரமாகிற அர்த்தத்தைக் காட்டுகிறது. என்கை. அவதாரணம் - தேற்றேவ-காரம்.

தோற்றுவாய் : இந்த உபாயத்தை நிர்ணயம் பண்-ணினபிறகு அவதாரணப்ரயோகம் - ஏவகார ப்ரயோகம் பண்ணிய வசனங்கள் பலவற்றையும் இதுக்கு உதாரணமாக அருளிச் செய்கிறார், என்கை.

**மூ . சூ . 221 . "மாமேவ யே ப்ரபத்யந்தே" "தமே-வசாத்யம்" "த்வமேவோபாய பூதோ மே பவ" "ஆறெனக்கு நின் பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்" என்றுஞ் சொல்லுகிறபடியே.**

விரிவுரை: அதாவது, "மாமேவ யே ப்ரபத்யந்தே" (என்னையே யாவர் சிலர் ப்ரபத்தி செய்கிறார்களோ.) என்றும் "தமேவ சாத்யம் புருஷம் ப்ரபத்யே" (முழு முதல்வனான அந்தப் புருஷனையே ப்ரபத்தி செய்கிறேன்) என்றும், "த்வமேவோபாய பூதோ மே பவ" (நீயே எனக்கு உபாயமாக வேணும்) என்றும், "ஆறெனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்" (எனக்கு உபாயந்தருமிடத்தில் உன் திருவடிகளையே உபாயமாகத்தந்தாய்) என்றும் சொல்லுகிற இவ்விடங்களில் "மாமேவ" "தமேவ" "த்வமேவ" "நின் பாதமே" என்று பற்றும் பொருளை நிர்ணயித்த பிறகு தேற்றேவகாரமாகசொல்லப்பட்ட தல்லவா என்கிறார்.

தோற்றுவாய் : இப்படி ஏவகாரத்தையுடைய இந்த 'ஏக' சப்தத்தால் தவிர்க்கப்பட வேண்டியது எது? என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ . சூ.222. இத்தால், 'வ்ரஜ' என்கிற ஸ்வீகாரத்தில் உபாயபாவத்தைத் தவிர்க்கிறது.**

விரிவுரை : அதாவது, - உபாயாந்தரங்கள் தவிர்க்கப்படுமளவில் ஏற்கனவே 'ஸர்வதர்மான் பரித்யஜ்ய' என்ற இடத்திலே உபாயாந்தரங்கள் தவிர்க்கத் தக்கவையென்று ஏற்பட்டு விட்டபடியால் அதை மறுபடியும் கூறுதல், 'கூறியவை கூறல்' என்ற குற்றம் வருகையாலும், இதர தெய்வங்களினுடைய ஸம்பந்தத்தைத தவிர்க்கப்படுமளவில், அது 'மாம்' என்ற பதத்தில் எம் பெருமானுடைய தனித்தன்மையை 'என்னை' என்று காட்டிவிட்டபடியால், இந்த 'ஏகம்' என்ற தேற்றேவகாரத்தால் 'வ்ரஜ' என்று மேல் சொல்லுகிற ஸ்வீகாரத்தில் தான் பற்றக்கூடிய பற்றையே 'உபாயம்' என்று சொல்லுவதைக் கழிக்கிறது என்றபடி.

தோற்றுவாய்: பற்றினபிறகே உபாயம் கார்யம் செய்கையாலே பலத்துக்கு இது அவச்யம் வேண்டியிருக்க, இதில் உபாயம் என்ற நினைவைக் கழிக்கிறபடிதான் எங்ஙனே? என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ.சூ.223. ஸ்வீகாரந்தானும் அவனாலே வந்தது.**

விரிவுரை : அதாவது - உபாயமாகப் பற்றின பிறகு இவனுக்கு வேண்டாததைத் தவிர்க்கையும் வேண்டியதைக் கொடுக்கையும் செய்கையாகிற இது எம்பெருமானாலே ஆனாற்போலே, இதற்கு முன் நிகழ்வதான பற்றுமதுதானும் எம்பெருமானாலே உண்டானது என்கை. இத்தால், பற்றக்கூடிய உபாயமான பகவானாலே கார்யஞ் செய்யப்படுவது தவிர நேரே 'வ்ரஜ' என்ற ஸ்வீகாரத்திற்கு உபாயத்வம் இல்லை என்கை.

தோற்றுவாய் : பற்றுகை அவனாலே வந்தது என்? என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 224. ஸ்ருஷ்ட்யவதாராதி முகத்தாலே பண்ணின க்ருஷி பலம் .**

விரிவுரை: அதாவது - (கரணகளே பரவிதுரனாய்) கைகால் முதலிய உறுப்புகளோடு சேர்ந்த உடம்பு இல்லாதவனாய், இங்கு நுகரும் இன்பமோ, மோக்ஷ இன்பமோ இல்லாதவனாய், அறிவற்ற ஜடப்பொருளுக்கும் தனக்கும் வேற்றுமையின்றிக் கிடக்கிற நிலையிலே, எம்பெருமான் இவனுக்கு உடல் இந்த்ரியங்களோடு கூடியவனாய் அறிவு ப்ரகாசம் அடைவதற்கு உரியனாம்படி படைத்து 'எதிர் சூழல் புக்கு' என்கிறபடியே இவனை அங்கீகரிக்கைக்காக அநேக அவதாரங்களைச் செய்து, அவதரித்த இடங்களிலே தன்னை அடைகைக்குருசியையும் விச்வாஸமும் விளைவிக்குமதான தன் குணங்கள் செயல்களைக் காட்டி, இவ்வழியாலே அந்த எம்பெருமான் செய்த செயலாலே பலித்தது இது என்கை.

தோற்றுவாய் : இவ்வர்த்தத்துக்கு மேற்கோள் காட்டுகிறார்.

**மூ . சூ . 225. "அதுவும் அவனது இன்னருளே".**

விரிவுரை : அதாவது - "உணர்வில் உம்பரொருவனை அவனதருளாலுறற் பொருட்டு என்னுணர்வினுள்ளே யிருத்தினேன்" என்று ஞானம் மிக்கிருக்கக்கடவரான நித்ய ஸூரிகளுடைய நிலைபேறு முதலானவைகளுக்குக் கடவனான ஒப்பிலானை, அவனருளாலே அவனை அடைகைக்காக, என்னுடைய விருப்பத்தோடு கூடிய ஜ்ஞாநத்துக்குள்ளே இருத்தினேன் என்று தாம் அவனைத் தஞ்சமென்று பற்றினதைச் சொன்ன பிறகு, "அதுவும் அவனது இன்னருளே" என்று அந்தப் பற்றுகைதானும் அவனுடைய காரணமில்லாமல் உண்டான கருணையாலே உண்டானதென்று ஆழ்வார் அருளிச் செய்கையாலே, அந்தப் பற்றுதல் தானும் எம்பெருமானுடைய முயற்சியின் பலமென்றே கொள்ளவேணும் என்கை.

தோற்றுவாய் : இப்படியாகையால், இந்த ஸ்வீகார-த்தில் (பற்றுகையில்) உபாயத்வபுத்தியை நீக்கி நினைக்கக் கடவன் என்கிறார்.

**மூ . சூ . 226. இத்தை ஒழியவும் தானே கார்ய-ஞ்செய்யும் என்று நினைக்கக்கடவன்.**

விரிவுரை : அதாவது, இந்தப் பற்றுதலுக்கும் தானே க்ருஷி(முயற்சி) பண்ணுவான் ஒருவனாகையாலே, இதுக்காக-வன்று அவன் நமக்குக் கார்யஞ் செய்கிறது; இத்தை ஒழியவும் இவ்வாத்மோஜ்ஜீவநம் செய்பவன் தானே நம்முடைய இஷ்டம் கொடுக்கை, அநிஷ்டம் (இஷ்டமில்லாததை) தவிர்-க்கையாகிய கார்யம் செய்யும் என்று நினைக்கக்கடவன் என்கை.

தோற்றுவாய் : இப்படி நினைக்க வேண்டுகிறது என்? என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 227. அல்லாதபோது உபாய நைரபே-க்ஷ்யம் ஜீவியாது.**

விரிவுரை : அதாவது, 'இத்தை ஒழியவும் கார்யஞ்செய்-யும்' என்று நினையாதே, 'இதுவும் வேணும் அவன் கார்யஞ் செய்கைக்கு' என்று நினைக்குமளவில் உபாய பூதனான பகவானுடைய வேற்றுத்துணை வேண்டாமையாகிய தன்மை நிலைபெறாது என்கை.

தோற்றுவாய் : ஆனால், இந்தப் பற்றுதான் ஏதாவ-தென்ன? அருளிச்செய்கிறார்.

**மூ . சூ . 228 . இது ஸர்வமுக்தி ப்ரஸங்க பரிஹா-ரார்த்தம், புத்திஸமாதாநார்த்தம், சைதந்யகார்யம், ராக-ப்ராப்தம், ஸ்வரூபநிஷ்டம், அப்ரதிஷேதத்யோதகம்.**

விரிவுரை: அதாவது, இந்தப் பற்றுதல், இந்த சேதநனிடத்தில் ஒன்றுமின்றிக்கே இருக்க, எம்பெருமான்

தானே இவனை உஜ்ஜீவிப்பிக்குமளவில், 'பின்னை எல்லாரும் முக்தராக வேண்டாவோ'? என்கிற ஸர்வ முக்தி ப்ரஸங்கத்தைத் தவிர்க்கைக்கு உறுப்பு; இதுதான், 'நெடுங்காலம் நம்மை ரக்ஷியாதவன், இன்று நம்மை ரக்ஷிக்குமென்று இருக்கிறது நாம் என்கொண்டு? என்று இவன் தளும்பாமல் புத்தி ஸமாதாநம் பிறந்திருக்கைக்கு உறுப்பு; இவன்தான் அசேதநமன்றிக்கே சேதநமாகையாலே 'அவனே உபாயம்' என்கிற திடநம்பிக்கைக் கொள்ளுதல் இவன் அறிவுடைமையின் கார்யம்; சாஸ்திரம் முதலானவ-ற்றின் விதியின்றிக்கே எம்பெருமானையே சரணமாகப் பற்றுவதிலுள்ள ருசியை அறிந்தவனான இவனுடைய இச்சையால் வந்த இது, ஸ்வரூபத்திற்கு மாறுபட்டதன்றிக்கே அவன் காப்பிலேயே ஒதுங்குகையாகிய ஸ்வரூபத்திலே நிற்குமது; கீழ் அநாதி காலமாக அவன் தன்னைக் காக்குமதை தன்முயற்சியால் விலக்கிக் கொண்டுவந்த இவன், அதைத் தவிர்த்தமையைக் காட்டும் என்கை.

**தோற்றுவாய்:** இனி, 'மாம்' என்கிற பதத்துக்கு முன்பும், இங்கும் ஈச்வரனுடைய செயல்களை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 229 . கீழ் தானும் பிறருமான நிலை-யைக் குலைத்தான்; இங்குத்தானும் இவனுமான நிலையைக் குலைக்கிறான் .**

**விரிவுரை :** அதாவது - 'ஸர்வதர்மாந் பரித்யஜ்ய' என்ற இடத்தில் ஸகல உபாயங்களையும் விடச் சொல்லுகையாலே, பலம் தருவானான தானும் கர்மஜ்ஞாந பக்தியாகிற உபாயாந்தரங்களுமாய்க் கூடி நிற்கிற நிலையைக் குலைத்தான். 'ஏகம்' என்கிற இடத்தில் ஸ்வீகாரத்தில் உபாய பாவத்தைக் கழிக்கையாலே, உபாயமாகிற தானும், தான் பற்றிய பற்றில் உபாயபுத்தி பண்ணிய இவனுமான நிலையைக்குலைக்கிறான் என்பது. அஃதாவது : 'நாம் எம்பெருமானை உபாயமாகப் பற்றினதாலன்றோ அவன் நம்மை ரக்ஷிக்கப் போகின்றான்' என்று தான் ஈச்வரனை

உபாயமாகப் பற்றியபற்றில் உபாயத்வபுத்தியைக் கொள்ளுகிற இந்த சேதநன் நிலையைக் குலைக்கிறான் என்கை.

உபாயாந்தரங்களைப்பிறர் என்றது, "உன்னாலல்லால் யாவராலும்?" என்றன்றோ ஆழ்வார் அருளியது.

ஸ்ரீகீதையில் சரமச்லோகத்துக்கு முன்பு அருளிச் செய்துள்ள கர்மயோகம் முதலிய உபாயங்களை எல்லாம் விளக்கி அங்கு ரக்ஷகனாகச் சொன்ன தன்னையே இங்கு உபாயமாகச் சொன்னதால், கர்மயோகம் முதலானவை உபாயமாம் போது தான் ரக்ஷகனாக வேண்டுமென்ற நிர்பந்தம் உள்ளது. இங்கு, தானே உபாயமாம் போது வேறொரு உபாயம் வேண்டியதில்லை என்பது பெறப்படுதல் காண்க.

தோற்றுவாய் : இனி, உபாயபுத்தியாக இவன் செய்யும் (ஸ்வீகாரத்தை) பற்றுதலினுடைய குறைபாட்டை அருளிச் செய்கிறார்.

## மூ . சூ . 230. அவனை இவன் பற்றும் பற்று அஹங்கார கர்ப்பம், அவத்யகரம் .

விரிவுரை : அதாவது - காரணமில்லாத இயல்பான பந்தத்தாலே ரக்ஷகனான அவனை, அவனால் காக்கப்படுகிற இவன், தன் காப்புக்கு உறுப்பாகப் பற்றுகிற பற்று, தான் கர்த்தா என்ற அஹங்காரத்தோடு கூடியதாய், பிதாவினிடத்திலே 'நான் என்னை ரக்ஷித்துக்கொள்கிறேன்' என்று கையெழுத்திடும்படி புத்திரன் கையெழுத்து வாங்குமாபோலே பழிப்புக்கிடமாயிருக்குமென்கை.

தோற்றுவாய்: 'ஆனால், ரக்ஷகமாவது தான் எது? என்ன', அருளிச் செய்கிறார்.

## மூ . சூ . 231. அவனுடைய ஸ்வீகாரமே ரக்ஷகம் .

விரிவுரை : அதாவது - இவ்வாத்மாவினுடைய ரக்ஷணத்துக்குக் கடவனான எம்பெருமான், 'இவனை நாம் ரக்ஷிக்கக்

-கடவோம்' என்று அபிமாநித்துக் கொள்ளுகையாகிற ஸ்வீகாரமே - பற்றே இவனுக்கு ரக்ஷகமாகும் - என்கை.

தோற்றுவாய்: 'சேதநன் முயற்சியில் ஒன்றையும் இவ்வுபாயம் ஸஹியாது' என்னுமத்தைத் தெளிவிக்கைக்காக, உபாயாந்தரங்களுக்கும் இவ்வுபாயத்துக்கும் உண்டான வேற்றுமையை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 232 . மற்றை உபாயங்களுக்கு நிவ்ருத்தி தோஷம், இதுக்கு ப்ரவ்ருத்தி தோஷம் .**

*விரிவுரை :* அதாவது - ஏற்கனவே ஸித்தமாயிருக்கு-மதான இவ்வுபாயத்தை ஒழிந்த மற்ற உபாயங்களுக்கு, சேதநன் தன் செயல்மூலம் உண்டாக்க வேண்டுமாகையாலே இவனுடைய தன்முயற்சி தவிர்கை குறையுடைத்தாகும்; இந்த ப்ரபத்தி உபாயத்துக்குத் துணைக் கூட்டு பொறுக்காமை-யாலே இச்சேதநனுடைய முயற்சி குறைபாடுடைத்தாயிருக்கு மென்கை.

தோற்றுவாய் : 'சேதனனுடைய முயற்சி ஒன்றும் வேண்டா' என்னுமிடத்துக்கு மேற்கோள்காட்டுகிறார்.

**மூ . சூ . 233 . "சிற்றவேண்டா" .**

*விரிவுரை :* அதாவது - ஸித்தோபாயத்தைப் பற்றுகை-யைச் சொல்லுகிற **"மற்றொன்றில்லை"** என்கிறபாட்டிலே, **'சிற்றவேண்டா"** என்று சிற்றுதல் - சிதறுதலாய் 'பரக்க ஒரு செயலும் செய்ய வேண்டா' என்கையாலே, இவ்வுபாயத்தில் இழியுமவனுக்கு ஒரு செயலும் செய்யவேண்டா என்று சொல்லிற்றன்றோ என்கை.

தோற்றுவாய்:இதுதான் இந்த ச்லோகத்திலேயே சொல்லிற்றென்கிறார்.

**மூ . சூ. 234 . நிவ்ருத்தி கீழே சொல்லிற்று .**

*விரிவுரை :* அதாவது - "ஸர்வதர்மாந்பரித்யஜ்ய" என்று ப்ரவ்ருத்தி தர்மமான அனைத்துச் செயலையும்

தவிர்கையே இவனுக்கு வேண்டுவது என்பது கீழே சொல்லிற்று என்கை.

தோற்றுவாய் : 'ஆனால், நன்றி பாராட்டுகைதான் வேணுமோ? அது உபாயத்தில் முதலிடாதோ?' என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ. சூ. 235. உபகார ஸ்ம்ருதியும் சைதந்யத்தாலே வந்தது; உபாயத்தில் அந்தர்பவியாது.**

விரிவுரை : அதாவது, "என்னைத் தீ மனங்கெடுத்தாய்" "மருவித்தொழும் மனமே தந்தாய்" என்று, இவை முதலானவைகளாலே இவன் செய்யும் நன்றி அறிதலும் இவனுடைய ஜ்ஞாநமூலமாய் வந்ததித்தனை; 'இது உண்டாகையாலன்றோ ஈச்வரன் கார்யம் செய்தது' என்று உபாயத்தில் உட்புகாது - என்கை.

தோற்றுவாய் : இனி, ஐந்தாம் பத அர்த்தத்தை விளக்குகிறார்.

**மூ. சூ. 236. சரணம் - உபாயமாக.**

விரிவுரை : 'சரணம்' - என்று அதற்கு அர்த்தம் அருளிச் செய்கிறார் உபாயமாக என்று.

தோற்றுவாய் : சரண சப்தத்திற்கு வேறு அர்த்தங்களையும் காட்டக் கூடியதாயிருக்க, இவ்விடத்தில் உபாயத்தையே காட்டுகின்றமையைக் காரணத்தோடு கூட அருளிச் செய்கிறார்.

**மூ. சூ. 237. இந்த சரண சப்தம் - ரக்ஷிதாவையும் க்ருஹத்தையும் உபாயத்தையும் காட்டக் கடவதேயாகிலும், இவ்விடத்தில் உபாயத்தையே காட்டுகிறது; கீழோடே சேரவேண்டுகையாலே.**

விரிவுரை : "உபாயே க்ருஹ ரக்ஷித்ரோச் சப்தச் சரணமித்யயம், வர்த்ததே ஸாம்ப்ரதம் சைஷ உபாயார்த்தைக வாசக :"

**சரணம் இதி** - சரணமென்கிற, **அயம் சப்த :-** இந்த சப்தமானது, **உபாயே** - உபாயத்திலும், **க்ருஹ ரக்ஷித்ரோ:-** க்ருஹத்திலும் ரக்ஷகனிடத்திலும், **வர்த்ததே** - உபயோகிக்கத்தக்கது, (இப்படியானாலும்) **ஸாம்ப்ரதம்** - இப்போது (இவ்விடத்தில்) **ஏஷ:** - இந்த சரண சப்தமானது, **உபாயார்த்த ஏகவாசக :** - உபாயத்திற்கே பேராகக் கடவது. என்கிறபடியே இந்த சரண சப்தமான இது ரக்ஷிப்பவனையும், இல்லத்தையும் உபாயத்தையும் காட்டக் கடவதேயாகிலும், இந்த இடத்தில் உபாயத்தையே காட்டுகிறது. ஸர்வ தர்மங்களையும் விட்டுத் தன்னையே பற்றச் சொல்லுகிற பகுதியாகையால், கீழோடே சேர வேண்டுகையாலே, இந்த 'சரண' சப்தத்திற்கு 'உபாயம்' என்ற பொருளைத்தான் கொள்ள வேண்டும் என்கிறார்.

கர்மயோகம் முதலான எல்லாம்கேட்டு அவை சுலபமாகச் செய்யக்கூடியவை அல்லவென்றும், ஸ்வரூபவிரோதம் என்று நினைத்து, 'நாம்கரை ஏறும் உபாயம் எதுவோ என்று கவலை கொண்டுள்ள அர்ஜுநனைக் குறித்து இந்தச் சரமச்லோகம் அருளிச் செய்கையால் அதற்கேற்ப, க்ருஹம் ரக்ஷகன் என்றவற்றைவிட்டு, உபாயம் என்ற பொருளைக் கொண்டால்தான் கர்மம் முதலானவைகளை உபாயமாகக் கொள்ளுதலைவிட்டுவிடவேணுமென்றிருக்கிற அர்ஜுநனுக்கு ஸமாதானஞ் சொல்லுகிற தென்று கீழோடே பொருந்தவருமென்றபடி.

ஆனால், கீழ்ச் சொன்ன உபாயாந்தரங்களை விடுகைதானே உபாயமாகப் பற்றுகிற கண்ணனெம் பெருமானின் உபாயத்வத்தைத் தோற்றுவிப்பதாயிருக்க, சரண சப்த ப்ரயோகம் இங்கு வேணுமோ? என்னில், ஆம் வேணும்; இங்கே ஒரு ஆக்ஷேபம் எழுகிறது. அதாவது, சரணசப்தத்துக்கு ப்ரகரணபலத்தாலே உபாயம் என்ற பொருளைக் கொண்டுவர வேண்டுமானால், சரண சப்தமில்லாமலே 'ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் - வ்ரஜ' என்ற இம்மாத்திரமே சொன்னாலும், ப்ரகரணபலத்தாலே 'வ்ரஜ' என்பதற்கு - (உபாயமாகப்) புத்திபண்ணு என்று அர்த்தம் கொண்டு விடலாமே? இந்த சரண சப்தம் ஏதுக்கு? என்று அவ்வாக்ஷேபம். அதற்குச் சமாதாநம்:-

எம்பெருமானை உபேயமாகப்- பயனாகப் பற்றும்போதும், நதியை கடந்தவனுக்கு ஓடத்தின் தேவையில்லாதது போல் ஸாதநாந்தரங்கள் ஒன்றும் வேண்டியதில்லையாகையால், **'ஸர்வதர்மாந்பரித்யஜ்ய மாம் ஏகம் வ்ரஜ'** என்பதற்கு - 'எல்லா சாதநங்களையும் விட்டு உபேயமாக எம்பெருமான் ஒருவனையே பற்று' என்று பொருள் கொள்ளவும் இடமுண்டாகையால், **'சரணம் வ்ரஜ'** என்னாமல் **'வ்ரஜ'** என்று மாத்திரம் விதிக்கும் ஸ்வீகாரம் அப்படி உபேயமாக பற்றுதலைத் தவிர்க்காது; ஆகவே, ஸர்வ தர்மங்களையும் விட்டு உபேயமாக ஸ்வீகரித்தலைத் தவிர்ப்பதற்காக **"சரண"** சப்தம் அவச்யம் வேண்டுமென்றபடி.

மறுபடியும் இன்னுமொரு ஆக்ஷேபம் வருகிறது. அதாவது, **"யத்யத் ஸாங்கம் தத்தத் ஸாதநம்"** (எது எது அங்கத்தோடு கூடியதோ, அது அது உபாயம்) என்ற நியாயத்துக்கு ஏற்ப **'வ்ரஜ'** என்ற விதிக்கு அங்கமாக **'ஸர்வதர்மாந் பரித்யஜ்ய'** என்று உபாயாந்தரத்தை விடுதலைச் சொல்லியிருத்தலால், இங்கு **'வ்ரஜ'** என்பதனால் விதிக்கப்படும் ஸ்வீகாரம், உபாயமாக ஸ்வீகரித்தலையே காட்டக் கூடியதாகையாலே, இந்த சரண சப்தம் வேண்டியதில்லையே என்று அவ்வாக்ஷேபம். இதற்குச் சமாதானம் :- அர்த்த பலத்தால் கிடைக்கக்கூடிய பொருளைக்காட்டிலும் சப்தத்தாலே சொல்லக்கூடிய பொருளே சிறப்புடையதாகையாலே, **"ஆக்ஷேபத:ப்ராப்தாத் ஆபிதாநிகஸ்யைவ க்ராஹ்யத்வாத்"** (அர்த்த பலத்தால் வரும் பொருளைக் காட்டிலும் சப்தபலத்தால் வருவதே ஏற்றுக் கொள்ளத்தக்கதாகையால்) என்று ஸ்ரீபாஷ்யக்காரரும் ஸ்ரீபாஷ்யத்தில் அருளிச் செய்தார்.

ஆக, உபாயத்தைச் சொல்லக்கூடிய இந்த சரண சப்தத்தாலே, உபேயமாகவும் உபாயமாகவும் பற்றக் கூடிய இரண்டு தன்மையும் எம்பெருமானுக்கு உண்டாகையால் அதில், உபேயமாக பற்றும் தன்மையை இங்கு வேறுபடுத்திக்காட்டினாராயிற்று.

**தோற்றுவாய் :** இனி, ஆறாம் பதத்தை எடுக்கிறார்.

**மூ . சூ . 238 . வ்ரஜ-புத்தி பண்ணு .**

*விரிவுரை : 'வ்ரஜ' என்று இதற்கு அர்த்தம் அருளிச் செய்கிறார் 'புத்திபண்ணு' என்று.*

*தோற்றுவாய் : அதுதன்னை விவரிக்கிறார்.*

**மூ . சூ . 239. கத்யர்த்தமாவது புத்த்யர்த்தமாய், அத்யவஸியென்றபடி.**

*விரிவுரை: அதாவது - 'வ்ரஜ கதௌ' என்கிறதாது (வினைப்பகுதி) 'செல்லுதல்' என்று பொருளாகும். "கத்யர்த்தா புத்த்யர்த்தா :" (கதி சப்தம் புத்தியைக்காட்டும்.) அதாவது - கதியைச் சொல்லும் சப்தங்கள் மானஸகதியான புத்தியையும் சொல்லுகின்றன என்கிறபடி. மனத்தில் ஏற்படக்கூடிய திட நம்பிக்கையைச் சொல்லுகிறது இந்த 'வ்ரஜ' என்ற பதம் என்கிறார்.*

*"இந்தப் புத்தியாகிறது விடத்தக்கதான த்யாகத்தின் முடிந்த நிலையிலிருப்பதாய், உபாயத்வத்தில் சேராததாய், உபாயாந்தரங்களை விடுவதை முன்னிட்டுக் கொண்டிருப்பதாய், பகவான் செய்யும் ரக்ஷகத்வத்தை அநுமதிப்பதாய், அறிவின் செயலாய், ப்ரார்த்திப்பதை உட்கொண்டதாய், பகவந்முக மலர்த்திக்குரியதாய், ஜ்ஞாநத்தின் கார்யமான ஸ்வரூபமாம் தன்னியல்புக்கும் பொருந்தியதாய், தப்பாமல் தாமதமின்றிப்பயனைத்தரக்கூடியதாயிருப்தொரு திடநம்பிக்கையோடு கூடிய ஞானகார்யம்" என்று இந்த புத்தி விசேஷத்தை பரந்தபடியில் பிள்ளை லோகாசாரியர் அருளிச் செய்ததை இவ்விடத்தில் அதை நினைவில் கொள்ளக் கூடியது என்கிறார் மாமுநிகள்.*

*தோற்றுவாய் : பொதுவில் சஞ்சரித்தலைச் சொல்லக்கூடிய கதி சப்தம், மனம் வாக்கு உடல் என்ற முக்கரணங்களாலும் இறைவனை அடைதலைக்காட்டாநிற்க, மனஸாலே அடைகிற திடநம்பிக்கை மாத்திரம் சொல்லி ஒன்றில் ஒதுக்குகிறதென்? என்ன, அருளிச் செய்கிறார்.*

**மூ . சூ . 240 . வாசிக காயிகங்களும் இதுக்கு அபேக்ஷிதங்களாயிருக்கச் செய்தேயும், ஜ்ஞாநாந்மோக்ஷமாகையாலே மாநஸமான அநுஷ்டானத்தைச் சொல்லுகிறது.**

விரிவுரை : அதாவது - "சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினாலும்" என்கிறபடியே முக்கரணங்களாலும் உண்டான பற்றுதல் அதிகாரபூர்த்திக்கு வேண்டியதாகையாலே 'வரிக்கிறேன்' என்று சொல்லக்கூடிய வாக்கும், அஞ்ஜலி முதலானகாயிகமும், உபாயமாகப் பற்றுகைக்கு உரியதாயிருக்கச் செய்தேயும், "ஜ்ஞாநாந்மோக்ஷ:" என்று ஜ்ஞாநத்தாலே மோக்ஷமாகையாலே அவை இரண்டும் நீங்கலாக மாநஸ அநுஷ்டான மாத்திரத்தைச் சொல்லுகிறது என்கிறார். ஆக, அரும்பத்ததுக்கு பதவுரை அருளிச் செய்தாயிற்று.

தோற்றுவாய்:இனி, முற்பாதியால் சொன்ன அர்த்தத்தை அநுவதித்து (திரும்பச் சொல்லி) முடிக்கிறார்.

**மூ . சூ . 241 . ஆக. த்யாஜ்யத்தைச் சொல்லி, த்யாக ப்ரகாரத்தைச் சொல்லி, பற்றப்படும் உபாயத்தைச் சொல்லி, உபாயநைரபேக்ஷ்யஞ்சொல்லி, உபாயத்வஞ்சொல்லி, உபாய ஸ்வீகாரம் சொல்லுகிறது.**

விரிவுரை : அதாவது - ஆக, முற்பாதி ச்லோகத்தால் 'ஸர்வ தர்மாந்' என்று விடவேண்டியதைச் சொல்லி, 'பரித்யஜ்ய' என்று த்யாகப்ரகாரத்தைச் சொல்லி, 'மாம்' என்று பற்றப்படும் உபாயத்தைச் சொல்லி, 'ஏகம்' என்று இந்த ஸித்தோபாயம் இன்னொரு உபாயத்தை விரும்பாதது என்பதைச் சொல்லி, 'சரணம்' என்று உபாயத்தைச் சொல்லி, 'வ்ரஜ' என்று உபாய ஸ்வீகாரஞ் சொல்லுகிறது என்கை.

தோற்றுவாய் : பிறகு, பிற்பாதிக்கு அர்த்தம் அருளிச் செய்வதாக ஆரம்பித்து, அதில் முதல் பதத்தை விளக்குகிறார்.

**மூ . சூ . 242 . அஹம் .**

விரிவுரை : அஹம் - நான் - என்று.

தோற்றுவாய் : இந்த பிற்பாதியில் ஈச்வரன் செய்தருளுகிற அம்சத்தை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 243 . ஸ்வக்ருத்யத்தை அருளிச் செய்கிறான்.**

விரிவுரை:அதிகாரிச் செயலை முற்பாதியிற் சொன்னான். உபாயமாகிய தன் செயலை இதிலே அருளிச்செய்கிறான்.

தோற்றுவாய் : இனி 'அஹம்' என்ற இப்பதத்துக்கு அர்த்தம் அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 244 . ஸர்வஜ்ஞனாய், ஸர்வ சக்தியாய், ப்ராப்தனான நான் .**

விரிவுரை : அதாவது, "யஸ் ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்" (யாவனொரு பரமாத்மா எல்லாவற்றையும் அறிகிறானோ?) என்கிறபடியே ஸர்வத்தையும் அறியுமவனாய் "பராஸ்ய சக்திர் விவிதைவ ச்ரூயதே" என்கிறபடியே எல்லா ஸாமர்த்யத்தையும் உடையவனாய், எஜமானனாகையாலே உரிமையாளனாயிருக்கிற நான் - என்கை.

தோற்றுவாய் : மற்ற குணங்களெல்லாம் கிடக்க இந்தக்குண விசேஷங்களை இந்த 'அஹம்' என்கிற சப்தம் காட்டுகிற இதற்கு ப்ரயோஜநம் அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 245 . இவன் கீழ் நின்ற நிலையும், மேல் போக்கடியும் அறிகைக்கும், அறிந்தபடியே செய்து தலைக்கட்டுகைக்கும் ஏகாந்தமான குண விசேஷங்களையும், தன்பேறாகச் செய்து தலைக்கட்டுகைக்கு ஈடான பந்த விசேஷத்தையும் காட்டுகிறது.**

*விரிவுரை :* அதாவது, எம்பெருமான் இந்த சேதநனுக்கு வேண்டாததைத்தள்ளி வேண்டியதைக் கொடுக்குமளவில், இவன் முன்நின்றநிலையும், மேல் போகத்தக்கவழியும் அறிகை-க்கும், அறிந்தபடியே அவற்றைச் செய்து தலைக்கட்டுகைக்கும் தகுந்தவையாயிருந்துள்ள (ஸர்வஜ்ஞத்வ) எல்லாவற்றையும் ஒரே காலத்தில் அறிவது ஸர்வ சக்தி த்வங்களாகிற குணவிசேஷங்களையும், இவன் கார்யம் செய்யுமிடத்தில் இவனுக்காக அன்றிக்கே தன்பேறாகச் செய்து தலைக்கட்டு-கைக்கு ஈடான சேஷித்வரூப (எஜமானான) பந்த விசேஷத்-தையும் ப்ரகாசிப்பிக்கிறது - என்கை. 'மாம்' என்கிற இடத்தில் அடைதற்கே அவச்யமான குணவிசேஷங்கள் ப்ரகா-சித்தாற்போலே, 'அஹம்' என்கிற இடத்திலும் கார்யகரத்வத்-துக்கு அவச்யமான குணவிசேஷங்கள் ப்ரகாசிக்குமன்றோ? வாத்ஸல்யாதிகள் இல்லாதபோது தஞ்சமாக அடைகைக் கூடாதாப்போலே, ஜ்ஞாந சக்த்யாதிகள் இல்லாதபோது கார்யகரத்வம் பொருந்தாமையாலே, இவ்விடத்தில் ஜ்ஞாந சக்திகளும் ப்ராப்தியாம் உறவையும் சொன்ன இது பூர்த்திக்கும் உபலக்ஷணம். உபலக்ஷணம் - மற்றுமுண்டான லக்ஷணத்தையும் கூட்டிச் சொல்வது.

*தோற்றுவாய் :* இந்தப்பதத்தில் 'மாம்' என்ற இடத்தில், ஸாரதியாய் நின்ற பாரதந்த்ரியத்துக்கு எதிர்த்தட்டான தன் ஸ்வாந்த்ர்யத்தை ப்ரகாசிப்பித்தமையை அருளிச் செய்கி-றார்.

**மூ . சூ . 246 . தனக்காகக் கொண்ட ஸாரத்ய வேஷத்தை அவனையிட்டுப் பாராதே தன்னையிட்டுப் பார்த்து, அஞ்சின அச்சந்தீரத் தானான தன்மையை 'அஹம்' என்று காட்டுகிறான்.**

*விரிவுரை:*அதாவது, 'மாம்' என்று ஸாரத்ய வேஷத்தோடே நிற்கிற தன்னைப் பற்றச் சொன்னபோது, அர்ஜுநன், தன்னைக் காப்பதற்காக ஏறிட்டுக் கொண்ட தேரோட்டியான வேஷத்தை 'அனைத்துக்கும் மேலானவன் இப்படித் தாழ நின்றது தன் இச்சையான குணத்தலான்றோ' என்று

அவனையிட்டுப் பார்க்காமல், 'நமக்கு இழிதொழில் செய்து ஸாரதியாய் நிற்கிறவனன்றோ?" என்று தன்னையிட்டுப் பார்த்து, 'ஸர்வ தர்மங்களையும் விட்டு என்னைப்பற்று' என்னா நின்றான்; இது என்னாகுமோ? என்று அஞ்சின அச்சந்தீர, தனக்கு வஸப்பட்ட(பத்தர், முக்தர், நித்யர்களான மூன்று விதமான சேதநர்கள், ஸுத்த ஸத்வமாகிய பரமபதம், மிச்ரஸத்வமான ப்ருக்ருதி மண்டலமான லீலாவிபூதியும் இவைகளின் நிர்வாஹங்களுக்குத் துணையான காலமும் ஆகிய) தன்னதீநமான சேதநா சேதநங்களின் ஸ்வரூபமும், இவைகளின் நிலைபேறும் காப்பும் செயல்களும், தடையற்ற சுதந்திரனாயிருக்கிற தன்னுடைய உண்மையான வேஷத்தை 'அஹம்' (நான்) என்று வெளிப்படுத்துகிறான் - என்கை.

தோற்றுவாய்: இத்தன்மையானவன் பரதந்த்ரனானதும், தன் இயல்பாலானதன்று என்னுமிடத்தை அருளிச் செய்கிறார். பரதந்த்ரம் - பிறர்க்கு வஸப்படுதல்.

**மூ . சூ . 247 . கீழில் பாரதந்த்ர்யமும் இந்த ஸ்வாதந்த்ர்யத்தினுடைய எல்லைநிலமிறே.**

விரிவுரை:அதாவது,- கீழ், ஸாரதியாய் நின்ற பாரதந்த்ர்யமும், தான் நினைத்தது செய்யுமளவில் தன்னைத் தடை செய்பவரில்லாதபடியான இந்த ஸ்வாதந்த்ர்யத்தினுடைய முடிவெல்லையன்றோ. என்கை.

தோற்றுவாய் : பிறகு 'த்வா' என்ற இரண்டாவது பதத்தை வெளியிடுகிறார்.

**மூ . சூ . 248 . த்வா - அஜ்ஞனாய், அசக்தனாய், அப்ராப்தனாய், என்னையே உபாயமாகப் பற்றியிருக்கிற உன்னை.**

விரிவுரை : 'த்வா' என்று அதற்கு அர்த்தம் அருளிச் செய்கிறார். அதாவது - அஜ்ஞனாய் என்று தொடங்கி, உன்கார்யங்கள் அறிவதற்குத் தக்க ஜ்ஞாநமில்லாதவனாய், அறிந்தாலும் செய்து தலைக்கட்டிக் கொள்ளுகைக்கு சக்தி

இல்லாதவனாய், அதுதான் உண்டானாலும் உன்னுடைய ரக்ஷணத்தில் உனக்கு உரிமை இல்லாதவனாய், இப்படி இருக்கையாலே எல்லாத் தர்மங்களையும் விட்டு என்னையே (வேறொரு உபாயம் வேண்டாதபடியான) உபாயமாகப் பற்றியிருக்கிற உன்னை - என்கை.

தோற்றுவாய் : பிறகு, மூன்றாம் பதத்தை எடுக்கிறார். 'ஸர்வபாபேப்ய :" என்று.

**மூ . சூ . 249 . ஸர்வ பாபேப்ய :- மத்ப்ராப்தி ப்ரதி பந்தகங்கள் என்று யாவையாவை சில பாபங்களைக் குறித்து அஞ்சிறாய், அவ்வோபாபங்கள் எல்லாவற்றில் நின்றும் .**

விரிவுரை : 'ஸர்வபாபேப்ய : " என்று இதுவும் - பாபமும் என்று ஒருமையும், பாபங்களும் என்று பன்மையும், ஸர்வ சப்தமுமாய் மூன்று விதமாயிருக்கையாலே, இம்மூன்றையும் உட்கொண்டு இப்பதத்துக்கு அர்த்தம் அருளிச் செய்கிறார். "மத்ப்ராப்தி ப்ரதிபந்தகங்கள்' என்று தொடங்கி, அதாவது - பாபமாகிறது இஷ்ட விரோதியாயும் இஷ்டமில்லாதான துன்பத்திற்குக் காரணமாயிருக்குமதாகை-யாலும், மோக்ஷப்பகுதியாகையாலே இவ்விடத்தில் இஷ்ட-விரோதிகளாகின்றன-பகவானை அடையத்தடை செய்யு-மவையாகையாலும், அதில் ஜ்ஞாந விரோதியும் ருசிவிரோ-தியும் உபாய விரோதியும் ஆகிற இவை திருமந்த்ரத்தில் நமசப்தத்தாலே முன்பே கழிக்கப்பட்டதாகையாலும், இனியுள்ளது என்னை அடைவதற்கு தடையாயிருக்கும் விரோதியாகையாலே, நீ என்னை அடைய தடையாயிருக்கும் விரோதிகள் என்று யாவை யாவை சில பாபங்களைக் குறித்து பயப்படுகிறாயோ? அந்த அந்தப் பாபங்களெல்லாவற்றி-லிருந்தும்-விடுவிக்கிறேன் என்கிறான்-என்றபடி.

*தோற்றுவாய்:பன்மை மிகுதியால் காட்டுமதை விவரிக்கிறார்.*

***மூ . சூ . 250 . "பொந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கும் அழுக்குடம்பும்" என்கிறபடியே, அவித்யா கர்ம வாஸநா ருசி ப்ரக்ருதி ஸம்பந்தங்களைச் சொல்லுகிறது.***

*விரிவுரை:அதாவது, "பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்குமழுக்குடம்பும்" என்று 'உண்டாதல், அழிதல் முதலியவற்றின் தொடர்பாலே அறிவு இல்லாமையாலே இல்லையென்று சொல்லும்படியான அறிவற்ற ஜடப் பொருளான அசேதனத்தை ஆத்மாவாக நினைக்கும் நினைவும், அந்நினைவாலே தேகமே ஆத்மா என்கிற இந்த புத்தியால் உலகியலைச் சார்ந்த தீய செயல்கள் செய்கையும், இந்தக் கர்மங் காரணமாக வரக்கூடியதான தீண்டா வழும்பும் செந்நீரும் செறிதசையுமான மலரூபமான தேக ஸம்பந்தமும்' என்று சொல்லுகிறபடியே அறிவின்மையும், கர்மமும், வாஸனையும், ருசியும், ப்ரக்ருதி ஸம்பந்தமாகிற இவற்றைச் சொல்லுகிறது - என்கை. இவைகளில் அறிவின்மையாவது :- தேகமே ஆத்மாவாக நினைக்கும் நினைவும், ஐய உணர்வும் திரிபு உணர்வும் ஆகிய மூவகைப்பட்ட அறிவின்மை. கர்மமாவது :- நல்வினை, தீவினைகள். பகவானை அடைய நல்வினையும் பாபத்தைப் போலே விடத்தக்கது. வாஸனையாவது :- அஜ்ஞாந வாஸனை, கர்மவாஸனை, தேகஸம்பந்த வாஸனை என மூன்றாகும். ருசியாவது:- விஷய பேதத்தாலே பலவாயிருக்கும்; ப்ரக்ருதி ஸம்பந்தமாவது:- பருஉருவும் அருவஉருவுமாகிய இருவகையான ஜடப்பொருளைப் பற்றிய அசித்ஸம்பந்தமாகும். என்றபடி.*

*தோற்றுவாய்:இனி, ஸர்வ சப்தத்தின் கருத்தை அருளிச் செய்கிறார்.*

**மூ. சூ. 251. த்ருணச்சேத கண்டூயநாதிகளைப் போலே ப்ரக்ருதிவாஸனையாலே அநுவர்த்திக்குமவை-யென்ன, லோகாபவாத பீதியாலும், கருணையாலும், கலக்கத்தாலும் செய்யுமவையென்ன, எல்லாவற்றையும் நினைக்கிறது.**

*விரிவுரை : அதாவது - துரும்பு நறுக்குகை, தினவு எடுத்த இடத்தில் சொறிகை முதலானவை போல நினைவின்றிக்கே உடலின் வாஸனையாலே தொடரும் ப்ரபத்தி செய்த பிறகும் செய்யும் வினைகளென்ன; நாம் இவற்றைச் செய்யாதபோது 'உலகம் நம்மைப் பழித்துச் சொல்லுமே' என்கிற பயத்தாலும், 'நாம் செய்யாதபோது மற்றவர்களும் செய்யாது விடுவார்களாகில் இது அவர்களுக்கு நாசமாமே; ஐயோ! என்கிற இரக்கத்தாலும் செய்யும் தினசரி செய்யுமவையென்ன, ஏதேனும் ஒரு நிமித்தத்தால் செய்யும் கர்மங்களென்ன, ராஜஸ தாமஸங்களாலே கலங்கி முன் விட்ட உபாயங்களில் தொடர்பு கொள்ளுதல் மீண்டும் ப்ரபத்தி செய்தலென்ன, இவை எல்லாவற்றையும் நினைக்கிறது என்கிறார்.*

*தோற்றுவாய்:உபாயமென்கிற புத்தியோடு செய்யா-தவையும் பொருள் தொடர்பால் உபாயம் என்ற நிலையில் சேரும் என்னும் கேள்வியை முன்வைத்து அருளிச் செய்கிறார்.*

**மூ. சூ.252. 'உந்மத்தப்ரவ்ருத்திக்கு க்ராம ப்ராப்தி போலே' த்யஜித்த உபாயங்களிலே இவை அந்விதங்களாமோ? என்று நினைக்க வேண்டா.**

*விரிவுரை : அதாவது " உந்மாதச் சித்த விப்ரம:" (பைத்தியம் பிடித்தவனும் மனம் கலங்கியவனும் ஆகிற இரண்டும் ஒரே பொருளைக் கொடுக்கும்) என்கிறபடியே பைத்தியக்காரன் 'இன்ன ஊருக்குப் போகிறோம்' என்கிற நினைவு இன்றிக்கே ஒரு வழியே போகாநின்றால், அவ்வழி ஒரு ஊரோடே ஸம்பந்தமுண்டாயிருக்கையாலே அவ்வூரிலே சென்று சேருமா*

போலே, உபாயம் என்கிற நினைவு இன்றிக்கே உலகத்தவர் பழிக்கஞ்சி செய்தல் முதலானவைகளாலே செய்யப்படுகிற இவை-விட்ட உபாயங்களில் தொடர்பு கொள்ளுமோ என்று நினைக்க வேண்டா ; தொடர்பு கொண்டே விடும் என்றபடி. ("ஆந்ருசம்ஸ்ய ப்ரதாநராய்) பிறரிடத்தில் இரக்கம் கொண்டவராய் அதாவது - " இவ்வளவு ஞானவானே கர்மங்களைச் செய்யாதுவிட்டால் உலகத்தவர் அவரே விட்டார்; நமக்கென்? என்று பகவதாஜ்ஞா ரூபமான கர்மங்களை விட்டால் அதனால் அவர்கட்கு பகவத் ஆக்ஞையை மீறின பாபம் வரும். பிறரிடத்தில் கருணை-யால் நுஷ்டித்தாலும், உயர எறிந்தகல் ஆகாயத்தில் நில்லாதாப்போலே, அவையும் ஒரு பலத்தைக் கொடுத்தே-விடும். ஆகையாலே, அவையும் பாப சப்தத்தாலே சொல்லக்-கடவது" என்று தனிசரமத்தில் இவர்தாமே அருளிச் செய்தது என்கிறார் மாமுநிகள்.

தோற்றுவாய்:'அதுதானேயாகிறது, திரும்பவும் மறுப-டியும் பண்ணும் ப்ரபத்திக்கு குறை எது?" என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ ▪ சூ ▪ 253 ▪ கலங்கி உபாயபுத்த்யா பண்ணும் ப்ரபத்தியும் பாதகத்தோடு ஒக்கும்▪**

விரிவுரை : அதாவது - ஒரு தடவை செய்யும தொழிய மறுபடி செய்யுமதை ஸஹியாத ப்ரபத்தி ஸ்வபாவத்தை அறியாதே கலங்கி விரோதியைக் கழிப்பதற்காகவோ இஷ்டத்தை அடைவதற்காகவோ உபாய புத்தியோடு மீண்டும் பண்ணும் ப்ரபத்தியும் - "அத பாதக பீதஸ்த்வம்" அத - இனி, த்வம் - நீ, பாதக பீத: - உபாயாநுஷ்டாநமாகிய பாவத்தைச் செய்ய அஞ்சினாயானால். என்று உபாயாந்தரம் போலே பாதகஸமமென்கை.

தோற்றுவாய் : பிறகு, நாலாம் பதத்தை விளக்குகிறார்.

**மூ ▪ சூ▪ 254 ▪ மோக்ஷயிஷ்யாமி - முக்தனாம்படி பண்ணக்கடவேன்▪**

*விரிவுரை: அதாவது- இதிலிருந்தும் (இந்த பாபங்களிலிருந்து) விடுபட்டுப்போம்படி பண்ணக்கடவேன் - என்கை.*

*தோற்றுவாய் : இனி, 'யிஷ்' என்கிற 'ணிஜ' ர்த்தத்தை அருளிச் செய்கிறார்.*

**மூ . சூ . 255 . ணிச்சாலே - நானும்வேண்டா, நீயும் வேண்டா, அவை தன்னடையே விட்டுப் போங்காணென்கிறான்.**

*விரிவுரை : அதாவது - 'யிஷ்யாமி' என்கிற ணிச்சாலே இயற்றுதல் கர்த்தாவன்றிக்கே ஏவுதல் கர்த்தாவாய் விடுவிக்கக் கடவேன் என்கையாலே, இதற்கு நானும் ஒரு முயற்சி செய்யவேண்டா; நீயும் இதற்காக ப்ரார்த்திக்க வேண்டா; நீ என்னைத் தஞ்சமாக அடைந்த ராஜகுல (மாஹாத்ம்யத்தாலே) பெருமையாலே அந்த பாபங்கள் உன்னைக்கண்டு பயப்பட்டு "கானோ ஒருங்கிற்றுக் கண்டிலமால்" என்கிறபடியே போனவழி தெரியாதபடி தன்னடையே விட்டுப் போங்காண் என்று அருளிச் செய்கிறானென்கை.*

*தோற்றுவாய்: இப்படிச் சொன்னதன் கருத்தை வெளியிட்டு அருளிச் செய்கிறார்.*

**மூ . சூ . 256 . என்னுடைய நிக்ரஹ பலமாய் வந்தவை நானிரங்கினால் கிடக்குமோ? என்கை.**

*விரிவுரை : அதாவது, பாபங்களாகின்றன குப்பையில் ஆமணக்குப் போலே எழுந்து பாம்புபோலே கழுத்தைப் பிடிப்பதொன்றன்றே; சேதநன் பண்ணின கர்மங்கள் நொடிப் போதில் நசிப்பதொன்றாகையாலே, அப்போதே போம்; அஜ்ஞனாகையாலே (செய்த செயலை மறந்தவனாகையாலே) கர்த்தாவான இவனும் மறந்து போக, இயல்பாகவே பேரறிவாளனாய் ஒன்றொழியாமல் உணர்ந்திருந்து அந்தந்த காலங்களிலே தப்பாமல் நிறுத்து அநுபவிப்பிக்கிற என்னுடைய நிக்ரஹ பலமாகையாலே, அந்த என்னுடைய*

நிக்ரஹபலமாய் வந்தவை, நிக்ரஹத்துக்கு எதிர்த்தலையான அநுக்ரஹத்தை நான் பண்ணினால் பாபங்கள் அவ்விஷயத்தில் பின்னைக் கிடக்குமோ? என்று இதற்குக் கருத்தென்றபடி.

தோற்றுவாய் : 'தன்னடையே விட்டுப்போம்' என்ற இடத்தில் அபிப்ராயத்தை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 257. அநாதிகாலம் பாபங்களைக் கண்டு நீ பட்ட பாட்டை அவைதாம் படும்படி பண்ணு-கிறேன்.**

விரிவுரை : அதாவது - அநாதியான காலமெல்லாம் துன்பம் தருவதான பாபங்கள் வந்து மேலிடப்புகுந்தால், அவற்றைக் கண்டு நீ நடுங்கின நடுக்கமெல்லாம் என்னைத் தஞ்சமடைந்த ராஜகுல மாஹாத்ம்யத்தாலே உன்னைக்கண்டு அவைதான் குடல் வெந்து நடுங்கும்படி பண்ணக் கடவனென்கை. "அவைதாமே விட்டுப்போம்படி பண்ணு-கையாவது - இவை நமக்கு முன்பு உண்டாய்க் கழிந்தவை என்று தோற்றாதபடி போக்குகை ; அதாகிறது - இவை நினைவுக்கு வந்தாலும் ப்ரபந்நனான தான் பகவானுக்கே அற்றுத் தீர்ந்த தன்மையைப் பார்த்து கனவு-கண்டாற்போலே இவை நமக்கு இடையில் வந்தவையாய் கழிந்தவை என்றிருக்கையும், நினைவாலே துக்கம் அணுகாதிருக்கையும்" என்று தனி சரமத்தில் இவர் தாமே அருளிச் செய்தார் என்பது இங்கே நினைவில் கொள்ளத்தக்கவை.

தோற்றுவாய் : "மோக்ஷயிஷ்யாமி" என்கிற தன்மை இடத்துப் பொருளில் அபிப்ராயமான ஓரர்த்த விசேஷத்தை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 258 . இனி உன்கையிலும் உன்னைக்-காட்டித் தாரேன், என்னுடம்பிலழுக்கை நானே போக்கிக் கொள்ளேனோ?**

**விரிவுரை:**அதாவது, இத்தனை காலமும் 'நம் கார்யத்துக்கு நாமே உரிமையுடையவன்' என்று நீ திரிகையாலே தன் கார்யம் தானே செய்து கொள்கிறான் என்றிருந்த இத்தனையல்லது 'எனக்கு நீ உடம்பைப் போலே அடிமை' என்றறிந்து என் பக்கலிலே உன்னை ஸமர்ப்பணம் செய்த பின்பு உன்னுடைய பாப விமோசனத்தின் பொருட்டு முயற்சி நீ செய்து கொள்ளென்று உன் கையிலும் உன்னை காட்டித்தாரேன்; என்னுடம்பான உன்னுடைய அறிவின்மை-யான அழுக்கைச் சரீரியாய் உயிரான நானே போக்கிக் கொள்ளேனோ? என்கை. ' என்னுடம்பிலழுக்கை நானே போக்கிக் கொள்ளேனோ' என்றது, முயற்சி பயனிரண்டும் தன்னதென்று தோற்றுகைக்காக. ஆகையால், உன்னுடைய விரோதியில் கிடப்பது ஒன்றில்லை என்றபடி. "விரோதியைக் கழிப்பதும் இஷ்டம் பெறுகையும் இரண்டும் பலமாயிருக்க ஒன்றைச் சொல்லுவானென்னென்னில்?" ஒன்றைச் சொன்னால் மற்றையது தன்னுடையேவருகையாலே சொல்லி -ற்றில்லை.

"மாமே வைஷ்யஸி" - (என்னையே அடைகிறாய்) என்று, முன்னே சொல்லப்பட்ட உபாயத்துக்குச் சொன்ன பலந்தவிர வேறுபலம் இல்லாமையாலே சொல்லிற்றில்லை என்னவுமாம்; ஆனால், விரோதியை ஒழிப்பது மட்டில் சொல்லுவான் ஏன்? என்னில், - அது அதிகமாகையாலே சொல்லிற்று. விரோதி கழிகை உண்டானால் பலம் இயல்பாக ஸித்தமாயிருக்கையாலே, தனித்துச் சொல்ல வேண்டாவன்றோ" என்று சுருக்கமாக ச்ரிய:பதிப்படி ரஹஸ்யத்திலும், விரிவாகப்பரந்தபடி தனி சரமங்களிலும், அருளிச் செய்த கேள்வியும் விடையும் இவ்விடத்தில் சொல்லிக் கொள்ள வேணும்.

தோற்றுவாய் : பிறகு, கடைசி பதத்தை எடுக்கிறார்.

**மூ • சூ.259 • மாசுச: - 'நீ உன் கார்யத்திலே அதி-கரியாமையாலும், நான் உன் கார்யத்திலே அதிகரித்-துக் கொண்டு போருகையாலும், உனக்கு சோகநிமித்தம்**

**இல்லை காண்' என்று அவனுடைய சோக நிவ்ருத்தியைப் பண்ணிக் கொடுக்கிறான்.**

**விரிவுரை :** 'மாசுச :' என்று அதற்கு அர்த்தம் அருளிச் செய்கிறார். அதாவது, ' நீ உன் கார்யத்திலே அதிகரித்து நின்றாயாகில், 'நம் கார்யத்துக்கு என் செய்வோம்' என்று கரைந்து சோகிக்கத் தகுதி; நான் உன் காரியத்திலே அதிகரியாதிருந்தேனாகில், 'நம் கார்யத்தில் இவன் உதாஸீநனாயிராநின்றான்; நாம் எங்ஙனே உஜ்ஜீவிக்கப் போகிறோம்?" என்று சோகிக்கத் தகுதி உண்டு; இங்ஙனன்றிக்கே 'முயற்சியும் பயனும் ஆகிய இரண்டும் உனக்கு இல்லாதபடியான பாரதந்தர்ய ஸ்வரூபத்தை உணர்ந்து, 'நீ உன்னுடைய காப்பிலே முயற்சிபண்ணா-தொழிகையாலும், உன்னுடைய ரக்ஷணத்தில் முயற்சியும் பயனுமாகிற இரண்டும் என்னதாம்படி ஸ்வாமியான நான் உன் கார்யத்தில் தடையறுக்கையாலே உன்னுடைய ரக்ஷண கார்யத்திலே அதிகரித்துக் கொண்டு போருகையாலும், உனக்குச் சோகிக்கக் காரணம் இல்லைகாண்' என்று, முன்பு சோகமுடையவனாய் நின்ற அவனுடைய சோகநிவ்ருத்தியைப் பண்ணிக் கொடுக்கிறான் - என்கை.

இத்தால், 'அஹம் த்வா' என்கிற பதங்களாலே சொல்லப்பட்ட ரக்ஷகரக்ஷ்யரான (காப்பவன், காக்கப்படுப-வன்) இருவருடைய ஸ்வபாவத்தையும் அநுவதித்துக் கொண்டுச் சோகத்தைத் தவிர்த்தபடியை அருளிச் செய்தாராயிற்று.

**தோற்றுவாய் :** இனிமேல், பாபத்தைப் போக்குபவ-னான தன்னுடையவும் போக்கப்படுபவையான பாபங்களினு-டையவும் தன்மைகளைச் சொல்லிச் சோகம் தவிர்த்தபடியை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 260. நிவர்த்தக ஸ்வரூபத்தைச் சொல்-லி, நிவர்த்யங்கள் உன்னை வந்து மேலிடாதென்று சொ-ல்லி, உனக்கு சோகநிமித்தம் இல்லை காண் என்கி-றான்.**

*விரிவுரை:அதாவது- 'அஹம்' என்று ஸர்வஜ்ஞத்வம் முதலான குணங்களோடு கூடினவனாய்க் கொண்டு விரோதியைப்போக்குபவனாயிருக்கிறதன் ஸ்வரூபத்தைச் சொல்லி, "த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்று 'ணி''ச்சால் நிவர்த்திக்கப்படுமதான பாபங்கள் உன்னைக்கண்டு தானே அஞ்சி ஓடிப்போமதொழிய, என்னையே உபாயமாகப் பற்றி இருக்கிற உன்னை வந்து மேலிடாது என்னுமிடம் சொல்லி, பிறகு 'மாசுச:' என்கையாலே 'இப்படியான பின்பு உனக்குச் சோகிக்கக் காரணமில்லை' என்கிறானென்கை.*

**தோற்றுவாய் :** இத்தலையில் விரோதியைப் போக்குகைக்குத் தான் மூண்டு நிற்கிற படியை அறிவித்து, இவனுடைய சோகத்தைப் போக்குகின்றமையைப் பெரியோரின் பாசுரத்தை மேற்கோள்காட்டிக் கொண்டு அருளிச் செய்கிறார்.

## மூ . சூ . 261 . "எத்தினாலிடர்க்கடற்கிடத்தியேழை நெஞ்சமே" என்கிறான்.

*விரிவுரை:அதாவது - திருமழிசைப் பிரான் தம்முடைய திருவுள்ளத்தைக் குறித்து,ஸர்வேச்வரன் இத்தலையில் (நம்மிடத்தில்) விரோதியைப் போக்கி அடிமை கொள்வதாக என்று ஏன்று கொண்டு வந்து புகுந்திருக்கிறபடியைச் சொல்லி, **'இனி ஏதுக்காக நீ துன்பக்கடலில் அழுந்துகிறாய்'** என்றாற்போலே, ஈச்வரனும் இப்போது இத்தலையில் அனைத்துப் பாபங்களையும் போக்குவதாகத் தானே, ஏறிட்டுக் கொண்டமையை அறிவித்து, **'இனி ஏதுக்காக சோகிக்கிறாய்?'** என்று இவனைக் (அர்ஜுனனைக்) குறித்து அருளிச் செய்கிறான் என்கை.*

**தோற்றுவாய் :** இனி, இவனுடைய சோகம் மறுவலிடாமல் போக்குவதற்குறுப்பான பகவதபிப்ராய விசேஷத்தை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 262 . பாபங்களை நான் பொறுத்துப் புண்யமென்று நினைப்பிடாநிற்க, நீ சோகிக்கக் கடவையோ?**

விரிவுரை : அதாவது - நீ செய்த பாபங்களை நான் முந்துற என்னுடைய பொறுமைக்குரித்தாக்கி - அவ்வளவு-மன்றிக்கே பின்பு உன்பக்கல் எனக்கு உண்டான வாத்ஸல்யத்தாலே "செய்த குற்றம் நற்றமாகவே கொள்" என்று இவன் ப்ரார்த்தனை. அடியார் திறத்து அவன் சொல்வது, " செய்தாரேல் நன்று செய்தார்" என்கிறபடியே அவை தன்னைப் பாபமாக நினையாதே புண்ணியமென்று நினைப்பிடாநிற்க , இனி நீ சோகிக்கக் கடவையோ? என்கை.

ஆக, இவ்வுத்தரார்த்தத்தில் ஐந்து பதத்தாலும், நிவர்த்தகனான ஈச்வரஸ்வரூபத்தை 'அஹம்' என்ற பதத்தால் சொல்லப்பட்டது. நிவர்த்யாச்ரயத்தையும் பகவானால் போக்குதற்குரிய பாபங்களுக்குச் சார்பான சரணாகதனை 'த்வா' என்ற பதத்தால் சொல்லப்பட்டுள்ளது. 'ஸர்வபா-பேப்யோ' பதத்தால், போக்குதற்குரிய பாபங்களையும், 'மோக்ஷயிஷ்யாமி' பதத்தால் அவைகளைப் போக்குகிற வித்த்தையும், 'மாசுச:' பதத்தால் அதன் காரணமான சோக நிவ்ருத்தியையும் சொல்லிற்றாயிற்று.

இனி, இந்தச் லோகத்திற் சொன்ன விஷயங்களின் சார்பான பொருள்களை மாமுநிகள் அருளிச் செய்கிறார். இனி என்று தொடங்கி,

இனி, இந்த ச்லோகார்த்தத்தில் சுவை ஒருவனுக்கு உண்டாகையில் உள்ள அருமையையும், இந்த ச்லோகந்தனக்கு இன்னதிலே நோக்கு என்னுமத்தையும், இதில் நம்பிக்கை உண்டாவதில் அருமையையும் இதில் ஆசை உண்டாவதின் அருமையையும், ஈச்வரன் இத்தை முதற்கண் உபதேசியாமை-க்குக் காரணத்தையும், வேத புருஷன் ப்ரபத்திக்கு வேறான உபாயங்களை விதிப்பதற்குக் காரணத்தையும் உபாயாந்தரங்-களை (ப்ரபத்திக்கு வேறானவைகளை) உபாயமாக மேற்கொண்டொழுகாது விட்டுவிடுமளவில் குற்றமில்லை

என்னுமத்தையும், அவைதான் வேற்றுமுகத்தால் தொடர்பு-டையதாகையாலே இயல்பாக விடப்படுவதன்று என்னுமிட-த்தையும், பயன் கிடைத்தற்கு ஸாதநம் இன்னதெ- ன்னுமிட-த்தையும் பலன்கிட்டுகைக்கு இவன் பக்கல் வேண்டுமவ-ற்றையும், ஈச்வரனுக்கு இவனுடைய நல்வினைகள் தேவைய-ற்றது என்னுமத்தையும், இவ்வர்த்தத்தில் நம்பிக்கை உண்டாகி உஜ்ஜீவித்தல் இல்லையாகில் நசித்தலித்தனை என்னும-த்தையும், இதில் திடநம்பிக்கை இல்லாதவன் இதில் தொடர்பு கொண்டால் விநாசத்துக்குரித்தென்னுமத்தையும், இதற்குத் தகுதியுடைய அதிகாரிகள் இன்னாரென்னுமத்தை- யும் முறையே அருளிச் செய்துதலைக் காட்டுகிறார் என்கிறார் மாமுநிகள்.

தோற்றுவாய் : அவற்றில் முதலில், இதில் ஒருவனுக்கு சுவை பிறப்பதிலுள்ள அருமையைக் காட்டுவதற்காக ஒரு உதாரணத்தை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 263 . உய்யக் கொண்டார் விஷயமாக உடையவர் அருளிச் செய்த வார்த்தையை ஸ்மரிப்பது.**

விரிவுரை:அதாவது - தத்வநிர்ணயம் பண்ணின உய்யக்-கொண்டார் என்பவர் பக்தி நிஷ்டராயிருந்தார். அவரை ப்ரபத்தி நிஷ்டராம்படிச் செய்யவேணுமென்று உடையவர் இந்த ச்லோகார்த்தத்தை அருளிச் செய்த அளவில், 'அர்த்தம் அழகியதாயிருந்தது; ஆகிலும் இத்தை மேற்கொண்டொழுகு-வதில் எனக்குச் சுவையில்லை' என்ன, 'வித்வானாகையால் அர்த்தத்துக்கு இசைந்தாய்; பகவத் கடாக்ஷவிசேஷமில்லா-மையாலே உனக்கு ருசி பிறக்கவில்லை' என்று அவர் விஷய-மாக உடையவர் அருளிச் செய்த வார்த்தையை நினைப்பது - என்கை.

தோற்றுவாய் : இந்த ச்லோகந் தனக்கு இன்னதிலே நோக்கு என்னுமத்தை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 264. இதுக்கு ஈச்வர ஸ்வாதந்த்ர்ய-த்திலே நோக்கு .**

விரிவுரை: அதாவது - சாஸ்திரங்களெல்லாம் ஒரு தலையும், தான் ஒரு தலையுமாயிருக்கிற இந்த ச்லோகத்துக்கு சாஸ்திரங்களில் சொன்ன தர்மங்களை வாஸனையோடு விடுவித்து, இந்தச் சேதநனுக்குத் தானே வேறொன்றையும் எதிர்பாராமல் தன்னை அடைதற்குத் தடையான அனைத்துப் பாபங்களையும் தள்ளிப்போட்டுத் தன்னை அடைவித்துக் கொள்ளும் ஸ்வாதீநமான அனைத்து (ப்ரவர்த்தகங்களையும்) செயல்களையும் உடைய ஈச்வரனுடைய ஸ்வாதந்த்ர்யத்திலே தாற்பரியம் என்கை.

தோற்றுவாய்:இதில் விருப்பம் உண்டாவதில் அருமை-யை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 265. "இதுதான் அநுவாத கோடி-யிலே" என்று வங்கிப்புரத்து நம்பி வார்த்தை .**

விரிவுரை : அதாவது - இந்த ச்லோகார்த்தந்தான் அநுவாத கோடியிலே என்று ஆப்ததமர் - ப்ரமாணங்களில் மெய்ம்மை கண்டவர் வங்கிப்புரத்து நம்பி அருளிச் செய்தது என்கை. அநுவாத கோடி - ஒருவர் சொல்லியிருக்கும் வார்த்-தையை இன்னொருவர் அதையே மேற்கொண்டு சொல்லுதல்.

தோற்றுவாய் : அது எத்தாலே என்ன? அருளிச் செய்கிறார் ; 'அர்ஜுனன்' என்று தொடங்கி.

**மூ . சூ . 266 . அர்ஜுநன், க்ருஷ்ணனுடைய ஆனைத்தொழில்களாலும், ருஷிகள் வாக்யங்களாலும், க்ருஷ்ணன்தன் காரியத்திலே அதிகரித்துக் கொண்டு போருகையாலும், இவனே நமக்குத் தஞ்சமென்று துணிந்த பின்பு தன்னைப் பற்றச் சொல்லுகையாலே :-**

விரிவுரை:அதாவது, இதுக்கு அதிகாரியான அர்ஜுநன் இளமைப்பிராயந்தொடங்கி கிருஷ்ணனுடைய பொருந்தா-தெல்லாம் பொருந்தும்படி செய்யக்கூடிய செயல்களெல்லாம் காட்டுமதான மனிதர்கள் செய்யக்கூடிய செயல்களை மீறின செயல்களாலும் "ஏஷ நாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவ

நிகேதந:, நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம் புரீம்" ஸ்ரீமான் - பெரிய பிராட்டியோடு கூடின, க்ஷீரார்ணவ நிகேதந:- திருப்பாற்கடலை இருப்பிடமாகக் கொண்ட, ஏஷ: நாராயண:- இந்த க்ருஷ்ணன், நாகபர்யங்கம் - பாம்பணையான கட்டிலை, உத்ஸ்ருஜ்ய - நன்றாகவிட்டு மதுராம்புரீம் - மதுராபட்டணத்துக்கு, ஆகதோஹி - எழுந்தருளினாரன்றோ.

"புண்யா த்வாரவதீ யத்ர தத்ராஸ்தே மது ஸூதந :
ஸாக்ஷாத்தேவ : புராணோऽஸௌ
ஸஹிதர்மஸ்ஸநாதந :

புண்யா - பயனும் ஸாதநமுமான, த்வாரவதீ- துவராகையானது, யத்ர - எவ்விடத்திலிருக்கிறதோ, தத்ர - அவ்விடத்தில், மதுஸூதந : - மது என்ற அஸுரனைக் கொன்ற நாராயணன், ஆஸ்தே - இருக்கிறான், அஸௌ - இவர், ஸாக்ஷாத் - ஸாக்ஷாத் தேவனானவனும், புராண :- அநாதியானவருமாகி, ஸஹி - ப்ரஸித்தியான, ஸநாதந தர்ம :- ஸநாதநமாயிருக்குமவர் பழமையானவர் என்றபடி.

"யத்ர நாராயணோ தேவ: பரமாத்மாஸநாதந :,
தத்ரக்ருத்ஸ்நம் ஜகத் பார்த்த தீர்த்தாந்யாயதநாநிச"

ஹே பார்த்த - ஓ அர்ஜுநா, யத்ர - எவ்விடத்தில், ஸநாதந:- அநாதியாயும், பரமாத்மா - பரம்பொருளுமாயிருக்கிற, நாராயணோ தேவ:- ஸ்ரீக்ருஷ்ணனிருக்கிறானோ, தத்ர - அவ்விடத்தில், க்ருத்ஸ்நம் ஜகத் - அனைத்து உலகங்களும், தீர்த்தாநி - தீர்த்தங்களும், ஆயதநாநிச - அனைத்து தேவாலயங்களும் இருக்கின்றன)

"பவித்ராணாம் ஹி கோவிந்த: பவித்ரம் பரமுச்யதே,
புண்யாநாமபி புண்யோऽஸௌ
மங்களாநாஞ்சமங்களம்"

அஸௌ கோவிந்த :- இந்த கோவிந்தன், பவித்ராணாம் ஹி - பவித்ரங்களுக்கெல்லாம், பரம் பவித்ரம் - மேலான புனிதப் பொருளாக, உச்யதே - சொல்லப்படுகிறார். புண்யாநாமபி புண்ய - புண்யங்களுக்கெல்லாம் புண்யமும்,

*மங்களாநாஞ்ச மங்களம்* - மங்களங்கட்கெல்லாம் மங்களமும் அவனே.

"யே ச வேத விதோ விப்ரா : யே சாத்யாத்
மவிதோ ஜநா :,
தே வதந்தி மஹாத் மாநம் க்ருஷ்ணம்
தர்மம் ஸநாதநம்"

**வேத வி த :-** வேதத்தை உணர்ந்தவர்களான, **விப்ரா:** ப்ராஹ்மணர்கள், **யேச** - யாவருளரோ, **அத்யாத்மவித் ஜநா :-** வேதாந்த வித்யையை உணர்ந்த ஜநங்கள், **யேச** - யாவருளரோ, **தே** - அவர்களெல்லாம், **மஹாத்மாநம்** - பரமாத்மாவான, **க்ருஷ்ணம்** - கிருஷ்ணனை, **ஸநாதநம் தர்மம்** - (ஸநாதநமான)பழையதான தர்ம ஸ்வரூபியாக, **வதந்தி** - சொல்லுகிறார்கள்.

"க்ருஷ்ண ஏவ ஹி லோகாநாமுத்பத்திரபி சாப்யய :,
க்ருஷ்ணஸ்ய ஹி க்ருதே பூதம் இதம் விச்வம் சராசரம்"

**லோகாநாம்** - உலகங்கட்கெல்லாம், **உத்பத்திஅபிச** படைக்கின்றவனும் காக்கின்றவனும், **அப்யய:** அழிக்கின்றவனும், **க்ருஷ்ண : ஏவஹி** - க்ருஷ்ணனே, **இதம் விச்வம்** - இந்த எல்லாமான, **சராசரம்** - சேதநாசேதநங்களும், **க்ருஷ்ணஸ்யக்ருதே** - கிருஷ்ணனை உத்தேசித்தே, **பூதம்** - உண்டாயிற்று. என்று இவை முதலானவைகளாலே உயர்ந்ததும் தாழ்ந்ததுமான தத்துவங்களின் உண்மையுண- ர்ந்தவர்களான, ருஷிகள் வாக்யங்களாலும், இளமை தொடங்கி நகர இருப்போடு, வநத்திலிருப்போடு எவ்வித வித்யாசமுமில்லாத கிருஷ்ணன், தன் கார்யத்துக்குக் கடவனாய் நோக்கிக் கொண்டு போகையாலும், 'இவன் சொல்லுகிற உபாயங்களெல்லாம் நமக்குத் தஞ்சமல்ல'; இவனே நமக்குத் தஞ்சம்' என்று துணிந்தபின்பு 'அப்படியானால் என்னைப்பற்று' என்று சொல்லுகையாலே - என்கை.

**தோற்றுவாய் :** இது தன்னை முதலிலே உபதேசிக்காமைக்குக் **காரணம்** அருளிச் செய்கிறார் 'புறம்பு' என்று தொடங்கி.

**மூ . சூ . 267 . புறம்பு பிறந்தது எல்லாம், இவன் நெஞ்சை சோதிக்கைக்காக.**

விரிவுரை : அதாவது - "யச்ச்ரேய : ஸ்யாந் நிச்சிதம் ப்ரூஹி தந்மே சிஷ்யஸ்தேஹம் சாதிமாம் த்வாம் ப்ரபந்நம்" யத் - எதுவானது, மே - எனக்கு, ஸ்ரேய :- சிறந்த ஸாதநமாக, நிச்சிதம் - நிச்சயமாக, ஸ்யாத் - ஆகுமோ, தத் - அதை, ப்ரூஹி - சொல்லுக, தே - உனக்கு, அஹம் - நான், சிஷ்ய: - மாணாக்கன், த்வாம் - உன்னை, ப்ரபந்நம் - சரணமாக அடைந்த, மாம் - என்னை, சாதி - நல்லுணர்வையுடைய-வனாகச் செய்வாய். என்று இவனுக்கு உபாய உபதேசம் செய்யத் தொடங்குகிற அளவிலே, முதலிலே இத்தை உபதேசியாதே வேற்றுபாயங்களைப் பரக்க நின்று உபதேசித்ததெல்லாம் 'இவன் இவைகளிலேயே நிலைபெற்று-விடுவானோ' அவைகளினுடைய குறைபாடுகளைப் பார்த்து இப்போது சொன்ன இந்த உபாய உபதேசத்துக்கு அதிகாரியாமோ? என்று, இவன் நெஞ்சை சோதிக்கைக்காக - என்கை.

தோற்றுவாய் : ஆனால், இவன் வேண்டுமானால் இவன் நெஞ்சை சோதிப்பதற்காக வேற்றுபாயங்களை உபதேசித்தவனாகலாம்; வேதபுருஷன் அவற்றை விதிப்பான் என்? என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 268. வேத புருஷன் உபாயாந்தரங்களை விதித்தது, கொண்டிப்பசுவுக்குத் தடிகட்டி விடுவாரைப் போலே, அஹங்காரமமகாரங்களால் வந்த களிப்பு அற்று ஸ்வரூபஜ்ஞாநம் பிறக்கைக்காக.**

விரிவுரை : அதாவது - ஆப்ததமன் (மெய்ம்மை கண்டு அதையே சொல்லுபவன்) ஆன வேத புருஷன் "விஜ்ஞாய ப்ரஜ்ஞாம் குர்வீத" (அறிவுடையனாய்க் கேட்டல், சிந்தித்தல் முதலியவைகளால் அந்தப் பரமாத்மாவை அறிந்து நிரந்தரத்யானம் பண்ணக்கடவன்) என்றும், "ஓமித்யாத்மா-நம் த்யாயத", ஆத்மாநம் - பரமாத்வை, ஓம் இதி- ஓம் என்று,

த்யாயத - த்யாநம் பண்ணுங்கள். என்றும், "ஆத்மாநமேவ லோகமுபாஸீத" ஆத்மாநம் - ஸாதநமாகிய பரமாத்வையே, லோகம் - ஸாத்யமான பயனாக, உபாஸீத - உபாஸிக்கக் கடவன். என்றும், "ஆத்மாவாஅரேத்ரஷ்டவ்ய ச்ச்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யா ஸிதவ்ய :". அரே - ஏ சிஷ்யனே, ஆத்மாவா-ஆத்மாவே, த்ரஷ்டவ்ய:- பார்க்கத்தக்கது, ச்ரோதவ்ய:- கேட்கத்தக்கது மந்தவ்ய :- மநநம் செய்யத்தக்கது, நிதித்யாஸிதவ்ய: தர்சந ஸமாநா- காரமுண்டாம்படி தியானிக்கத்தக்கது, என்றும் இவை முதலானவைகளாலே வேற்று உபாயங்களை மோக்ஷ ஸாதநமாக விதித்தது - பட்டி மேய்ந்து திரிகிற பசுவுக்கு தம்வழிப்படுத்துகைக்காகக் கழுத்திலே தடியைகட்டி விடுவாரைப் போலே, அஹங்கார மமகார வச்யனாய்க் களித்துத் திரிகிற இவனுக்கு, "ஜந்மாந்தர ஸஹஸ்ரேஷு தபோஜ்ஞாந ஸமாதிபி:" ஜந்மாந்தர ஸஹஸ்ரேஷு - ஆயிரம் ஜந்மங்களில், தபோஜ்ஞாந ஸமாதிபி :- கர்மஜ்ஞாந பக்திகளினால் அநுஷ்டாநம் பண்ணி, என்கிறபடியே சரீரத்தை வருத்துமதான கர்மாநுஷ்டாநம் இந்த்ரிய ஜயம் முதலான அரிய செயல்களால் தாக்குண்டு அந்தக் களிப்பும் போய் பகவத் பாரதந்த்ர்யமாகிற ஸ்வரூபஜ்ஞாநம் பிறக்கைக்காக - என்கை.

தோற்றுவாய் : 'ஆனால், இப்படி ஸ்வரூபஜ்ஞாநம் பிறக்கைக்குக் காரணமான இவற்றை விட்டால் குற்றம் வாராதோ?' என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 269 . ஸந்யாஸி முன்புள்ளவற்றை விடுமாபோலே இவ்வளவு பிறந்தவன் இவற்றை விட்டால் குற்றம் வாராது.**

விரிவுரை : அதாவது கடைசியான ஆச்ரமத்திலே தொடர்பு கொண்டவன் முன்புள்ள ஆச்ரம தர்மங்களை விடுமாபோலே, ஸித்தோபாயத்துக்கு வேறான உபாயங்களினுடைய ஸ்வரூப விரோதித்வ முதலானவைகளாலே ஸித்தோபாயத்தில் இழியும் இவ்வளவான ஜ்ஞாநபரி பக்குவமுடை-

யவன் இந்த வேற்று உபாயங்களை விட்டால் தோஷமில்லை - என்றபடி.

*தோற்றுவாய் :* 'இவைதான் வேறு ப்ரகாரங்களாலே தொடர்புண்டாகையாலே, இவற்றில் இவன் தனக்குச் கர்ம ஜ்ஞான பக்தியாகிற செயலை நேரேவிட்டானென்பதில்லை' என்னுமத்தை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 270 . இவன்தான் இவை தன்னை நேராக விட்டிலன்.**

*விரிவுரை :* வேறு ஸாதநங்களை விடுவது முன்னாக (பகவானான) ஸித்த ஸாதநத்தைக் கைக்கொண்ட இந்த அதிகாரிதான், கர்மஜ்ஞாந பக்திகளாகிற இவைகளைத்தன் செயல் மூலம் இயல்பாக விட்டானென்பதில்லை.

*தோற்றுவாய் :* அது எங்ஙனே? என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 271 . கர்மம் - கைங்கர்யத்திலே புகும்; ஜ்ஞாநம் - ஸ்வரூபப்ரகாசத்திலே புகும்; பக்தி - ப்ராப்யருசியிலே புகும்; ப்ரபத்தி - ஸ்வரூபயாதாத்ம்ய ஜ்ஞாநத்திலே புகும்.**

*விரிவுரை :* அதாவது தத்தம் ஜாதிக்கும் ஆச்ரமத்துக்கும் பொருந்தியதாக இவன் மேற்கொண்டொழுகும் விதிக்கப் பெற்ற (கர்மம்) நற்செயல் ஸாதநம் என்ற புத்தி இன்றிக்கே பிறர் விஷயத்தில் கருணையாலே இவைகளை அனைவரும் ஒழுக வேண்டுமென்று பிறருக்காகத் தாம் ஒழுகிக்காட்டுகையாலே, பகவானுக்கு மிகவும் உகப்பாகையாலே, அவன் ப்ரீதியை முன்னிட்டுச் செய்யும் கைங்கர்யத்திலே உட்புகும். 'நுண்ணறிவு' என்கிறபடியே தன்ஸ்வரூப ஜ்ஞாநம் பெறும் முகமாக பரஸ்வரூபத்தை ஸாக்ஷாத் கரிக்கைக்கு உறுப்பான ஸூக்ஷ்ம ஜ்ஞாநம், ஸாதநம் என்ற புத்தி கழிந்ததும் ஸ்வரூபத்தினுடைய ப்ரகாசத்திலே உட்புகும். "பக்த்யா த்வநந்யயா சக்ய:" (வேறிடத்திலில்லாது என்னிடமே கொண்டுள்ள சிறந்த பக்தியினாலே) என்கிறபடியே

பகவானை அடைவதற்கு ஸாதநமான பக்தியில் அந்த ஸாதந புத்தி கழிந்தவாறே போஜநத்துக்குப் பசிபோலே பலமான கைங்கர்யத்துக்கு முன் வரக்கடவதான ருசியிலே உட்புகும். பகவானை உபாயமாகக் கொள்ளுகைக்கு அடையாளமான ப்ரபத்தி, 'ஏக' பதத்தில் சொல்லுகிறபடியே ஸாதநம் என்ற நினைவு கழிந்தவாறே அத்யந்த பரதந்த்ரமான வேறு தஞ்சமற்ற தாயிருந்துள்ள ஸ்வரூபத்தினுடைய யதார்த்த ஜ்ஞாநத்திலே (உண்மையறிவிலே) உட்புகும் என்கை.

தோற்றுவாய் : 'பக்தி ப்ரபத்திகளிரண்டையும் கழித்தால் இவனுக்குப் பலத்துக்கு ஸாதநமாவது எது? என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 272. ஒரு பலத்துக்கு அரிய வழியையும், எளிய வழியையும் உபதேசிக்கையாலே, இவை இரண்டும் ஒழிய பகவத் ப்ரஸாதமே உபாயமாகக் கடவது.**

விரிவுரை : அதாவது, பகவானையடைதலாகிற ஒரு பலத்துக்கு "ஜந்மாந்தர ஸஹஸ்ரேஷு தபோ ஜ்ஞாந ஸமாதிபி : நராணாம் க்ஷீணபாபாநாம் க்ருஷ்ணே பக்தி : ப்ரஜாயதே". (ஜந்மாந்தர ஸஹஸ்ரேஷு - முன்புண்டான ஆயிரம் பிறவிகளில் செய்த கர்மஜ்ஞாந பக்தியினால் சேதநர்களுடைய பாபங்கள் நசிக்கப் பெற்று கிருஷ்ணனிட-த்தில் பக்தி உண்டாகப்பெறுவர்கள். ) என்கிறபடியே அநேக ஜந்மங்களிலே செய்கிற கர்மஜ்ஞாநம் முதலான அங்கங்களாலே ஸாதிக்கப்படுவதாலே அரியதாயிருந்துள்ள பக்தி மார்க்கத்தையும், 'ஸர்வதர்மாந் பரித்யஜ்ய' என்று கர்மம் முதலான அனைத்திலும் செயல்படுதலை தவிர்க்கக் கூடியதை முன்னிட்டுக் கொண்டிருக்கிற, ஒரே தடவை செய்யக்கூடியதாகையாலே எளிதாயிருந்துள்ள ப்ரபத்தி மார்க்கத்தையும் உபதேசிக்கையாலே, உபாயங்களில் அருமை எளிமை என்பதில் நோக்கி ன்றி அவற்றை ஒரு காரணமாகக் கொண்டு பலந்தருபவனான இறைவனுடைய கருணையே முக்கியமாகையாலே பக்தி ப்ரபத்திகளாகிற இவை இரண்டும்

ஒழிய பகவானுடைய கருணையே உபாயமாகக் கடவது.

தோற்றுவாய் : 'ஆனாலும், பலன் பெறுகைக்கு இவன் (சேதனன்) பக்கலிலும் ஏதேனும் உண்டாக வேண்டாவோ?' என்ன, அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 273 . பேற்றுக்கு வேண்டுவது - விலக்காமையும் இரப்பும் .**

விரிவுரை : அதாவது, பலன் பெறுகைக்குச் சேதநன் பக்கல் உண்டாகவேண்டுவது - தன் முயற்சியாலே அவன் பண்ணும் ரக்ஷணத்தை விலக்காதொழிகையும், அது பயனாக அமைவதற்கு உறுப்பான ஜீவனுடைய ப்ரார்த்தனையும் என்கை.

தோற்றுவாய் : 'இங்ஙனன்றிக்கே, இவன் பக்கலிலும் சில நற்செயல்கள் உண்டானால் ஆகாதோ?' அது உபாயமாகயிருக்கிற பகவானுக்கு வெறுப்புக்கிடம் என்னுமத்தை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 274. சக்ரவர்த்தித் திருமகன், பாபத்தோடேவரிலும் அமையுமென்றான்; இவன், புண்யத்தைப் போகட்டு வரவேணுமென்றான்.**

விரிவுரை: அதாவது, "ராமோ விக்ஹவாந் தர்ம:" (ராமன் தர்மமே வடிவானவன்) என்கிற சக்ரவர்த்தி திருமகன் " **யதிவா ராவணஸ் ஸ்வயம்**" (ராவணனேயானாலும்) என்று 'பாபிஷ்டனான ராவணனேயானாலும் அழைத்துவாரும்' என்கையாலே பாபம் பலத்துக்குக் காரணமென்று நினைக்கைக்கு உரியதல்லாமையாலே, "**பாபத்தோடே** வரிலும் **கைக் கொள்ளுகிறேன்**' என்றான்; "**க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்**" (கிருஷ்ணனே அநாதியான பழைமையான தர்மம்) என்கிற இவன் "**ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய**" என்கையாலே பலத்துக்குக் காரணமென்று நினைத்தற்குரித்தான புண்யத்தை போட்டு விட்டு வரவேணு

மென்றான் என்கை. ஆகையால், வேறு ஒரு உபாயத்தின் துணைக்கூட்டுதலை பொறுக்காதவனான உபாயபூதனுக்கு, இவன் பக்கல் தன் முயற்சி மூலமாகவரும் நற்செயல்கள் எம்பெருமானுக்கு இஷ்டமில்லாதது என்று கருத்து.

தோற்றுவாய் : இவ்வர்த்தத்தைக்கேட்டு அதன்படியே அநுஷ்டிக்க இழிந்தவனுக்கு - ஆஸ்திகனாய் உஜ்ஜீவித்தல் அல்லது நாஸ்திகனாய் நசித்தல் ஒழிய, நடுவில் நிலையில்லை என்பதைப் பூர்வாசார்ய வசநத்தால் அறிவிக்கிறார்.

**மூ . சூ . 275. "ஆஸ்திகனாய் இவ்வர்த்தத்தில் ருசி விச்வாஸங்களுடையனாய் உஜ்ஜீவித்தல், நாஸ்திகனாய் நசித்தல் ஒழிய நடுவில் நிலையில்லை" என்று பட்டர்க்கு எம்பார் அருளிச் செய்த வார்த்தை.**

விரிவுரை:அதாவது - 'இவ்வர்த்தத்தை மேற்கொண்டவன் பகவத் ப்ரபாவத்தால் 'இது ஸத்யம்' என்ற சாஸ்த்ர நம்பிக்கையுடையவனாய் இவ்வர்த்தத்தில் சுவையும் 'இது தப்பாது' என்கிற விச்வாஸமுடையவானாய் உஜ்ஜீவித்தல்; சாஸ்த்ரங்களெல்லாம் ஒரு தலையும் இது ஒரு தலையுமாய் இப்படி இருப்பதொன்றுண்டோ? என்று நாஸ்திகனாய் இத்தை அநாதரித்து நசித்தல் தவிர, நடுவில் நிலையில்லை' என்று ஸகல சாஸ்த்ர பாரங்கதரான பட்டருக்கு உண்மை உணர்ந்ததையே சொல்லும் உண்மையறிந்தவரான எம்பார் அருளிச் செய்த வார்த்தை - என்கை.

தோற்றுவாய் : 'மஹா விச்வாஸமான நம்பிக்கையற்றவனுக்கு இதில் தொடர்பு பிறப்பு இறப்பாகிற (விநாசத்துக்குரித்தாம்) அழிவுக்குஉரியதாம்' என்னுமத்தை உதாரணத்தோடு அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 276. வ்யவஸாயம் இல்லாதவனுக்கு இதில் அந்வயம், ஆமத்தில் போஜநம் போலே .**

விரிவுரை : அதாவது - இதில் சொல்லுகிற விடவேண்டியவை, பற்றவேண்டியவைகளுக்கீடான நம்பிக்கை இல்லா-

தவனுக்கு இதில் உண்டான தொடர்பு, அஜீரண நிலையில் செய்த போஜநம் மரணத்துக்குச் காரணமாமாபோலே அழிவாகிற மறு பிறவிக்குக் காரணமாய் முடியுமென்கை.

தோற்றுவாய் : இதற்கு அதிகாரிகள் இன்னாரென்னு மத்தை அருளிச் செய்கிறார்.

**மூ . சூ . 277. "விட்டுசித்தர் கேட்டிருப்பர்" என்கிறபடியே அதிகாரிகள் நியதர்.**

விரிவுரை : "செம்மையுடைய திருவரங்கர் தாம் பணித்த மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டுசித்தர் கேட்டிருப்பர்" என்று 'முக்கரணங்களாலும் செவ்வியராய், அவற்றை செயல்மூலம் காட்டவேணுமென்று கோயிலிலே அரவணையிற்கண் வளர்ந்தருளினவர்தாம், அர்ஜுநனைக் கருவியாகக் கொண்டு திருத்தேர்த்தட்டிலே நின்று அருளிச்செய்த யதார்த்தமுமாய் (உண்மையான அர்த்தத்தையு-டையதாய்) சீரியதுமாய் சுலபமுமான "மாமேகம் சரணம் வ்ரஜ" என்கிற வார்த்தையைப் பெரியாழ்வார் கேட்டு, "அதன்படியே ஒழுகுவார்' என்கிறபடியே இவ்வர்த்ததுக்கு அதிகாரிகள் இது கேட்டால் இதன்படியே நியதமாக ஒழுகுவார்கள் என்கை.

தோற்றுவாய்:இவ்வர்த்தத்தின்படியே ஒழுகுமவர்க-ளான ஆழ்வார்களுடைய அருளிச் செயலில் இதுக்கு அர்த்தமாக அநுஸந்திக்கப் படுமவற்றை அருளிச் செய்து இதுதன்னை நிறைவு பெறுத்துகிறார்.

**மூ . சூ . 278 . "வார்த்தையறிபவர்" என்கிற பாட்டும், "அத்தனாகி" என்கிறபாட்டும் இதுக்கு அர்த்தமாக அநுஸந்தேயம் .**

சரமச்லோக (ப்ரகரணம்) பகுதி முற்றிற்று.
பிள்ளைலோகாசாரியர் திருவடிகளே சரணம்.

விரிவுரை : அதாவது - "வார்த்தையறிபவர் - பேர்த்த பிறப்போடு நோயொடு மூப்பொடு இறப்பவை பேர்த்துப்

பெருந்துன்பம் வேரற நீக்கித் தன் தாளின் கீழ்ச் சேர்த்து அவன் செய்யும் சேமத்தை எண்ணித் தெளிவுற்று மாயவற்காளன்றி ஆவரோ?" என்று, "மாமேகம் சரணம் வ்ரஜ - ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்ற நல்வார்த்தையை அறியுமவர்கள், பரணிக்கூடு வரிந்தாற்போலே இவ்வாத்மாவைச் சூழ்ந்து பொதிந்து கொண்டு கிடக்கிற ஜந்மங்களோடும், அவை புகுந்த விடத்தே புகக்கடவதான வ்யாதியோடும் அப்படியிருந்தாலும் பரவாயில்லை, நாம் சிலநாள் வாழலாம் என்று இருக்க முடியாதபடி திடீரென்று இடிவிழுந்தாற்போலே வரக்கூடிய நரையும் மூப்போடு கூடிய கிழட்டு சரீரத்தில் உண்டாகக்கூடிய துன்பமும், அங்ஙனேயாகிலும் இருக்கவொண்ணாதபடி (அதையும் பொறுத்துக் கொண்டு இருந்தாலும்,) அடுத்தபடி வரக்கூடிய மரண அவஸ்தையும், இப்படிப்பட்ட இவனுக்கு விருப்பமற்ற அழிவைத்தரக்கூடிய அவற்றை யுத்தியாகத் தொழில் செய்யவல்லவர் நெடுஞ்சுவர் தள்ளுமாபோலே தள்ளி, அவை போன பிறகு வரக்கடவதான கைவல்யமாகிற பெருந்துன்பத்தை நிர்மூலமாகப் போக்கி, பாத தூளிபோலே தன் திருவடிகளில் கீழே சேரும்படி பண்ணி மீண்டு வருகை இல்லாதபடி அவன் செய்யும் சேமத்தை எண்ணி மஹா விஸ்வாஸமுடையராய்க் கொண்டு தாங்கள் தஞ்சமென்று பற்றுதற்குரியவனாய் விரோதிகளைப் போக்கவல்ல வியப்புக்குரிய எம்பெருமானைத் தவிர வேறொருவர்க்கு ஆளாவரோ? - என்று நம்மாழ்வார் அருளிச் செய்த "வார்த்தையறிபவர்" என்கிற இந்தப் பாட்டும்"முத்தனார் முகுந்தனார் ஒத்தொவ்வாத பல்பிறப்பொழித்து நம்மை யாட் கொள்வான் - அத்தனாகி அன்னையாகி ஆளும் எம்பிரானுமாய்ப் புகுந்து - நம் முள் மேவினார்; ஏழை நெஞ்சமே! எத்தினாலிடர்க் கடல் கிடத்தி" என்று 'புன்மையாதும் தீண்டாதவராகையாலே ஸம்ஸாரவாசனையும் தொடாதவராய், முக்தியை அருளக்கூடியவரும் அனைத்துடம்புகளில் உறைவதான ஆத்மாக்களும், ஜ்ஞாநத்தால் ஒருபடிப்பட ஒத்து; தேவர், மனிதர், விலங்கு,தாவரம் ஆகிய

ரூப பேதத்தாலே ஒவ்வாமலிருக்கும் பலவகைப்பட்ட பிறவிகளைப் போக்கி, (நித்ய ஸம்ஸாரிகளாய்க்கிடந்த) நிரந்தரமாக பலபிறவிகளில் கிடந்த நம்மை நித்ய ஸூரிகளைக் கொள்ளும் அடிமையைக் கொள்ளுகைக்காக நன்மையே விளைவிக்கும் பிதாவாயும் பிரியமே விளைவிக்கும் மாதாவாயும் இருந்து அடிமை கொள்ளக்கடவ நம்முடைய ஸ்வாமியாயும் இப்படி எல்லாவித உறவுமாய், நம்முடைய தாழ்வையும் தம்முடைய பெருமையையும் பாராதே, நம்முடைய பாரமனைத்தும் தாமே ஏறிட்டுக் கொண்டு செய்வாராகத் தாழ்வுக்குரிய நம்முள்ளே புகுந்து ஒரு நீராகப் பொருந்தினார்; அறிவிலியான நெஞ்சே! நம்முடைய நன்மையை அறிகைக்கு நாம் முற்றின அறிவாளியோ? அவன் அறிவில்லாதவனோ? நமக்கு நாமே நன்மையைச் செய்து கொள்ள ஆற்றலுடையவரோ, அவன் ஆற்றலில்லாதவனோ, நாம்நம் கார்யஞ் செய்து கொள்ள உரியவரோ, அவன் உரிமையற்றவனோ, தன் மேன்மை பாராதே தாழநின்று நமக்கு உதவி புரிபவனாயிருக்க எதற்காக நீ துன்பக்கடலில் கிடக்கிறது? என்று திருமழிசைப்பிரான் அருளிச் செய்த "அத்தனாகி" என்கிற பாட்டும் இந்த ச்லோகத்துக்கு அர்த்தமாக நினைக்கக்கடவது என்கிறார்.

(அரிமா நோக்கம்)

ஆக, இந்த சரமச்லோகத்தால் பற்றுகைக்கு அங்கமாக விடக் கடவதான கர்மஜ்ஞான பக்திகளாகிற தர்ம விசேஷங்களையும், அந்தத் தர்மங்களை விடுவதினுடைய விதத்தையும், அந்தத் தர்மங்களை விடுவதற்கு முன்பாகப் பற்றும் பகவத் விஷயத்தினுடைய எளிமை முதலான குணங்களோடு கூடிய குணத்தின் சிறப்பையும், அந்த குணங்களோடு கூடின பொருளான எம்பெருமானுடைய வேறு துணையைப் பொறாத தனக்குத்துணையாக வேறொன்றைவிரும்பாத தன்மையையும், பிறிதொன்றையும் விரும்பாத எம்பெருமானுடைய தஞ்சமாகுந் தன்மையையும், அவனையே உபாயமாகப் பற்றுகையையும், இப்படிப்பற்றின உபாயத்தினுடைய (ஜ்ஞானசக்தியாதி) அறிவாற்றல் முதலான குணங்களின் கூட்டத்தையும், அந்தக் குணங்களோடு கூடிய

*வனான எம்பெருமானிடத்தில் தன்னை ஸமர்ப்பித்த அதிகாரியையும், இந்த அதிகாரிக்கு விரோதியான பாபக் கூட்டத்தையும், அந்தப் பாபத்தை போக்கக்கூடிய விதத்தை-யும், அந்தப் பாவத்தைப் போக்கும் எம்பெருமானை பற்றின அதிகாரியினுடைய பாரமற்ற தன்மையையும் இதுவரை இந்தச் சரமச்லோகத்தால் சொல்லப்பட்டதாகும்.*

*சரமச்லோக ப்ரகரண வ்யாக்யாநத்தின் தெளிவுரை முற்றுப்பெற்றது.*
*பிள்ளைலோகாசாரியர் திருவடிகளே சரணம்.*
*ஜீயர் திருவடிகளே சரணம்.*

*மணவாள மாமுநிகள் அருளிச்செய்த முமுக்ஷுப்படி வ்யாக்யானத்தின் தெளிவுரை முற்றுப் பெற்றது.*